# இருபத்தொன்றாவது கருத்தரங்கு
# ஆய்வுக்கோவை

தொகுதி-2

பதிப்பர்

டாக்டர் ச. அகத்தியலிங்கம்
டாக்டர் தா.ஏ. ஞானமூர்த்தி
டாக்டர் செ.வை. சண்முகம்
டாக்டர் சு. சக்திவேல்

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
அண்ணாமலைநகர்
1989

# இருபத்தொன்றாவது கருத்தரங்கு

# ஆய்வுக்கோவை

தொகுதி-2




பதிப்பர்


டாக்டர் ச. அகத்தியலிங்கம்

டாக்டர் தா.ஏ. ஞானமூர்த்தி

டாக்டர் செ.வை. சண்முகம்

டாக்டர் சு. சக்திவேல்



இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்

அண்ணாமலைநகர்

1989

பதிப்பு: ஜூன் 1989



முதல் தொகுதி: ரூ. 125-00

இரண்டாம் தொகுதி: ரூ. 30-00

மூன்றாம் தொகுதி: ரூ. 105-00

நான்காம் தொகுதி: ரூ. 25-00

கிடைக்குமிடங்கள்:

1. பாரி நிலையம்
   59, பிராட்வே, சென்னை-600 001
2. மீனாட்சி புத்தக நிலையம்
   60, மேலக்கோபுரத் தெரு, மதுரை-625 001
3. செயலாளர்
   இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
   மொழியியல் துறை, அண்ணாமலைநகர்-608 002

அச்சிட்டோர்:

சிவகாமி அச்சகம்

அண்ணாமலைநகர்-608 002



---

முதறிஞர், செம்மல்

டாக்டர் வ. சுப. மாணிக்கம்

(1917 - 1989)

(தலைவர், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், 1981 - 1989)

அவர்களுக்குக்

**காணிக்கை**

---

# முன்னுரை

தில்லை என எல்லையிலாப் புகழ் பெற்ற சிதம்பரத்திற்கே அணியாகத் திகழ்வது அண்ணாமலைப் பல்கலைக்கழகம். 'தமிழ் வளர்த்த பல்கலைக் கழகம்' அடைமொழி பெறுவதிலிருந்தே இதற்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு புலனாகின்றது.

இப் பல்கலைக்கழகம் பெரும் கொடைவள்ளல் அமரர் அண்ணாமலை அரசரால் நிறுவப்பட்டுப் பின்னர் டாக்டர். எம். ஏ. முத்தையா செட்டியார் அவர்களாலும் இன்று டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்களாலும் பேணிப் பாதுகாக்கப் பட்டு வருகின்றது.

இந்தப் பல்கலைக்கழகத்திற்குப் பெருமை சேர்க்கும் வகையில் இங்கு பணியாற்றிய பெரும் தமிழ்ப் பேராசிரியர்கள் பலர் பலவகையாலும் தமிழுக்கு பெருந்தொண்டு புரிந்துள்ளார்கள், எனவே இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் 21 ஆவது கருத்தரங்க மாநாடு இங்கு நடைபெறுவது மிகவும் பொருத்தமே. இம்மன்றத்தின் மூன்றாவது மாநாடு நடைபெற்றதும், ஆய்வுக் கோவை முதன் முதலாக நூல் வடிவில் அச்சிடப் பெற்று வெளியிடப்பட்டதும் ஆகிய பெருமைகளும் உடையது. இரண்டாவது முறையாக 1989 ஆம் ஆண்டு சூன் திங்கள் 2,3 ஆகிய இரு தினங்களில் சிறப்பான முறையில் இங்கு நடைபெற உள்ளது. இக்கருத்தரங்கில் படிப்பதற்காகப் பேராளர்கள் எழுதியுள்ள ஆய்வுக்கட்டுரைகளின் தொகுப்பே இவ்வாய்வுக் கோவையாகும்.

இவ்வாண்டும் இவ்வாய்வுக் கோவை நான்கு தொகுதிகளாக வெளிவந்துள்ளது. முதல் தொகுதியில் இலக்கியம் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும், இரண்டாம் தொகுதியில் இலக்கணம், மொழியியல் பற்றிய ஆய்வு கட்டுரைகளும் மூன்றாம் தொகுதி

யில் நாட்டுப் புறவியல், வரலாறு, தொல்லியல், மானிடவியல், அறிவியல், பற்றிய ஆய்வுக்கட்டுரைகளும், நான்காம் தொகுதியில் படைப்பிலக்கியங்களும் இடம் பெற்றுள்ளன.

இவ்வாய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளும், படைப்பிலக்கியங்களாகிய பாடல்களும், சிறுகதை, நாடகங்களும் வளர் தமிழின் பல்வேறு கூறுகளைக் காட்டுவனவாகவும் தமிழியலோடு இணைந்த பல்துறை ஆய்வினைக் காட்டுவனவாகவும் அமைந்துள்ளன. அனைத்துத் துறைகளைப் பற்றியும் அறிஞர் பெருமக்களாலும், ஆய்வாளர்களாலும், எழுதப்பெற்ற ஆய்வுக்கட்டுரைகள் இவ்வாய்வுக் கோவைத் தொகுதிகளை அலங்கரிக்கின்றன. தமிழியல் ஆய்வுப்போக்கினை வெளிப்படுத்தும் வகையில் நூற்றுக்கணக்கான ஆய்வுக் கட்டுரைகள் ஒவ்வொரு ஆண்டு ஆய்வுக் கோவையிலும் இடம் பெற்று வருவது மகிழ்ச்சிக்குரிய செய்தி ஆகும்.

இவ்வாய்வுக் கோவையினைச் சிறப்பான முறையில் உருவாக்கும் முயற்சியில் உறுதுணையாக இருந்தோர் பலர். அவர்களில் அச்சுப்பிழை திருத்தியுதவிய புலவர் இரா. கணபதி குறிப்பிடத்தக்கவர். ஆய்வுக் கோவையின் இரண்டாம் தொகுதியினைத் திருத்தும் பணியில் ஈடுபட்ட அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறை ஆய்வாளர் திரு.ம. சிவசண்முகம் குறிப்பிடத் தகுந்தவர். மூன்றாம் தொகுதி அச்சுப் பிழை திருத்தங்களையும், பிற பணிகளையும் செவ்வனே செய்த திரு. ஆ.கோ. நடராசன் பாராட்டுக்குரியவர். இவ்வாய்வுக் கோவையின் இரண்டாம் தொகுதியைக் குறித்த காலத்தில் சிறப்பான முறையில் அச்சேற்றித் தந்துள்ள பெருமை அண்ணாமலை நகர் சிவகாமி அச்சகத்தாரைச் சாரும். இவர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றியை உரித்தாக்குவதில் பெருமகிழ்வெய்துகிறோம்.

அண்ணாமலைநகர்
20—5—1989

ச. அகத்தியலிங்கம்
தா. ஏ. ஞானமூர்த்தி
செ. வை. சண்முகம்
சு. சக்திவேல்

35/1

# உள்ளுறை

# திருமண அழைப்பிதழ்களில் மொழிப் பயன்பாடு

சா. அங்கயற்கண்ணி

மதுரை காமராசர் பல்கலைக் கழகம்.

0. முன்னுரை:

ஒவ்வொருவர் வாழ்விலும் மிகச் சிறந்த நிகழ்ச்சியாக அமைவது திருமணம். திருமண நிகழ்ச்சியைப் பலருக்கும் தெரிவித்தல் பொதுவான மரபாகும். 'திருமண அழைப்பிதழ்'களை அச்சடித்து இதனைத் தெரிவித்தனர் இதன் வாயிலாகத் தமிழ் மொழியின் பயன்பாட்டையும் ஓரளவு அறிதல் கூடும்.

1. மரபு முறைகள்:

சமயத்தொடர்பு, விளித்தல், முற்பகுதி, மணமக்கள் அறிமுகமும் அழைக்கும் முறையும், பிற்பகுதி, பிற குறிப்புகள் எனும் ஆறு நிலைகளில் இம்மரபு முறைகள் கையாளப் படுகின்றன.

பொதுவாக, எல்லா அழைப்பிதழ்களிலும் சமயத்திற்கு முதலிடம் கொடுக்கப்படுகிறது. முருகன் துணை, சிவமயம், ஓம் சக்தி, ஸ்ரீராமஜெயம், பிள்ளையார் சுழி (உ) ஆகியன இந்துக்கள் அழைப்பிதழ்களில் காணப்படுகிறது. 'இந்தக் காரியம் கர்த்தரால் நடத்தப்படுகிறது'- எனக் கிறித்தவர்களின் அழைப்பிதழ்களிலும், 'பிஸ்மில்லா', 'நபிகள் நாயகம் (ஸல்) அருளாலும்' என முகமதியர்களின் அழைப்பிதழ்களிலும் இத்தகு சமயத் தொடர்கள் காணப்படுகின்றன.

'அன்புடையீர்', 'பேரன்புடையீர்' ......என்று தொடங்கும் விளிநிலைத் தொடர்கள் இரண்டாம் பகுதியில் இடம்பெறுகின்

றன. திருமணம் நிகழவிருக்கும் ஆண்டு, திங்கள், நாள், கிழமை, இலக்கினம், நேரம்...பிறவும் மூன்றாம் பகுதியான 'முற்பகுதி' யில் இடம்பெறுகின்றன.

இன்னாரின் பெயரன் (பேரன்)/பெயர்த்தி (பேத்தி)/மகள்/மகன் என்னும் உறவுமுறைகளைச் சுட்டி, மணமக்களைப் பற்றிய செய்திகளும், சாதிக் குறிப்புகளும், திருமணம் நடக்கும் இடம் பற்றிய செய்திகளும், மணமக்களை வாழ்த்த வேண்டிய அழைப்பு முறையும் நான்காம் பகுதியில் இடம்பெறும்.

அடுத்த, இறுதிப்பகுதியில், அழைப்பவரது பெயர், தொழில், கல்வித்தகுதி முதலாயினவும், வீட்டு முகவரியும் (வலதுபுறம்) இடம்பெறும். இதற்கிசைவு தந்தவர் பற்றிய அதே போன்ற செய்திகள் அடங்கியவையும் (இடதுபுறம்) அமையும்.

இவை தவிர, இரு வீட்டாரழைப்பு, நகர், உந்துத்தடம் எண்கள், தந்தி, தொலைபேசி எண், அஞ்சற்பெட்டி எண், அச்சக முகவரி, மருவீடு, வரவேற்பு பற்றிய செய்திகள் பிற குறிப்புகள் என்பதில் அடங்கும்.

இம்மரபு முறைகள் இத்தகு நிலைகளில் அமைகின்றன.

2. மொழிப் பயன்பாடு:

அ. தமிழ் அழைப்பிதழ்கள்

ஆ. தமிழும் ஆங்கிலமும் கலந்த அழைப்பிதழ்கள்

இ. தமிழும் வடமொழியும் கலந்த அழைப்பிதழ்கள்

என்ற அடிப்படையில் இவற்றின் மொழிப் பயன்பாட்டைக் காணலாம்.

அ. தமிழ் அழைப்பிதழ்கள்:

'தமிழ் அழைப்பிதழ்கள்' எனும்போது தனித்தமிழ் என்று கொண்டுவிடல் ஆகாது பிற மொழியும் அங்காங்குக் கலந்து வரும்.

அழைப்பிதழில் காணப்படும் 'சிவமயம், அன்பினீர், அன்புடையீர், நிகழும், நாளது, எல்லாம்வல்ல, திருவளர்ச் செல்வன், நம்பி, நங்கை, தங்களன்புள்ள, நிறைந்த அன்புடன், வழித்தடம், உற்றாரும் உறவினரும்' என்பன போன்ற சொற்கள் இடம்பெறுவதை இதன் மொழிப்பயன்பாடாகக் குறிப்பிடலாம்.

**ஆ. தமிழும் ஆங்கிலமும் கலந்த அழைப்பிதழ்கள்:**

அழைப்பிதழின் ஒருபுறம் தமிழாக இருந்தால், அதன் எதிர்ப்புறம் முழுதும் ஆங்கிலமாக இருக்கும். தமிழுடன் ஆங்கில சொற்களும் கலந்து எழுதப்படுவதுமுண்டு. மற்றும் முன்னெழுத்து, பட்டம், பதவி போல்வனவும் ஆங்கிலத்திலேயே குறிப்பிடப் பெற்றிருக்கும்.

(எ-டு): S. உமாமகேஸ்வரி, B Sc.,க்கும்
R. சிவசங்கரன், M.A.,க்கும்

என்பதாக அமையலாம். மேலும், அச்சகப்பெயர், வழித்தடங்கல் முதலானவையும் ஆங்கிலத்திலேயே குறிப்பிடலாம். 'அன்றியும், 'திருமண அழைப்பிதழ்' என்பதற்கு மாறாக 'Wedding' என்று அச்சிடப் பெற்றிருக்கும்.

**இ. தமிழும் வடமொழியும் கலந்த அழைப்பிதழ்கள்:**

இவற்றின் 'தொடக்கம்' முதல் 'இறுதிவரை' பெரும்பாலும் வட சொற்களே காணப்படும். 'ஸ்ரீராமஜெயம், விவாஹ சுபமுஹூர்த்தப் பத்திரிகை, மகாளஸ்ரீ, சிரஞ்சீவி, ஸௌபாக்யவதி, சிரேஷ்ட குமாரன், சுபயோக சுபதினத்தில், பிரார்த்திக்கிறேன்' முதலிய தொடர்களைக் குறிக்கலாம்.

**3. நிறைகுறைகள்:**

மொழிப்பயன்பாட்டில் சில நிறைகுறைகள் உண்டு.

**நிறைகள்:**

1. நல்ல தூய தமிழ்ச் சொற்களைப் பலரும் அறியும் வாய்ப்பு ஏற்படுகிறது. 'மன்றல்' மடல், இளவல்,

இவண், அதுபோழ்து' என்பன போன்ற சொற்களைக் குறிக்கலாம்.

2. சமயத் தொடர்பான திருக்குறள், தேவாரம் போன்ற பாடல்களை, அச்சிடுவதால் பலரும் அவற்றைப் படிக்கும் வாய்ப்பு ஏற்படுவதுடன் இலக்கிய வளர்ச்சியும் உண்டாகிறது எனலாம்.

3. பதவிகளைத் தமிழில் எழுதுவதால் அச்சொற்களைக் கையாள வேண்டுமென்று படிப்பவர்க்கு ஓர் எண்ணத்தைத் தோற்றுவித்தல்.

(எ-டு): 'முறைகாண் ஆயமுகவர்' போல்வன.

4. தொன்றுதொட்டு வருகின்ற மரபுமுறை பின்பற்றப் படுகின்றது.

குறைகள்:

1. தமிழ் இலக்கணத்திற்கு மாறுபட்ட வகையில் சந்திப் பிழைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.
(எ-டு); 'சங்க கட்டிடம்'

2. தமிழோடு ஆங்கிலச் சொற்களைக் கலந்து எழுதுதல்.
(எ-டு): மதுரை To புதுப்பட்டி
T.M. கநிரேசன், M.Com., போல்வன.

3. ஆங்கிலச் சொற்களை அப்படியே எடுத்தாளுதல்.
(எ-டு): Asst., Foreman,
Sudalaimuthu & Co., போல்வன.

4. ஆங்கிலச் சொற்களைத் தமிழ் எழுத்துக்களில் எழுதுதல்
(எ-டு): 'ரிட்டயர்டு இன்ஸ்பெக்டர், லேட், கேஷியர்' போல்வன.

5. தமிழில் வடசொற்களைக் கலந்து மணிப்பிரவாள நடையில் எழுதுதல். (எ-டு): பாத்தியப்பட்ட, பஜார், ஆஸீர்வதிக்க, இஷ்டமித்து, பந்துஜன குடும்ப சமேதராய், திருமாங்கல்யதாரண முகூர்த்தம்.

இவற்றால் தமிழ் வளர்ச்சி குன்றும் என்பது ஒருதலை.

மேற்காட்டியவாறு திருமண அழைப்பிதழ்களில் மரபுகள் பின்பற்றப் பட்டுவரினும், அண்மைக்காலத்தில் அச்சிடப்படும் சில புதுமை முறையிலான சில திருமண அழைப்பிதழ்களில் மரபு மீறல்களும் காணப்படுகின்றன. பொதுக் கூட்டங்களின் நிகழ்ச்சிநிரல் அமைப்புப் போலத் திருமண அழைப்பிதழும் அமைகின்றது.

இவற்றில் திருமண அழைப்பிதழில் மணமக்கள் பெயர்கள், மண நாள், நிகழுமிடம் மற்றும் மணநேரம் போன்ற செய்திகள் மட்டுமே குறிக்கப்படுகின்றன. இது அழைப்பிதழ் போன்றல்லாமல், வெறும் 'அறிவிப்பு அட்டை' போன்று காட்சி தருகிறது. புதுமையாக அச்சிடுவதாக எண்ணிப் பல்வேறு மரபுத் தொடர்பான சொற்களை விட்டுச் செல்வதனால் அழைப்பிதழ் அமைப்பும் கூட மாறுபடத் தொடங்கிவிட்டதெனலாம். இதனால் முன்னர்ச் சுட்டப்பட்ட தமிழ் மரபுகள் பலவற்றை இப்புதுமை அழைப்பிதழ்களிற் காண இயலவில்லை.

4.முடிவுகள்:

இக்கட்டுரை வாயிலாகப் பின்கண்ட முடிபுகளைக் கூறலாம்:

1. திருமண அழைப்பிதழ்களில் பெரும்பாலும் 'மரபுமுறை' பின்பற்றப்பட்டு வருகிறது.

2. தமிழ்த் திருமண அழைப்பிதழ்களில் வடமொழி, ஆங்கிலம் கலந்த பிறமொழிச் சொற்கள் காணப்படுகின்றன. இவற்றைத் தவிர்த்தல் வேண்டும்.

3. பிறமொழிச் சொற்களைக் கண்டிப்பாகப் பயன்படுத்தியே ஆக வேண்டும் என்றவிடத்து மட்டுமே அவற்றைக்கையாளலாம். அப்போதும் தமிழ்ச்சொல்லை அமைத்துப் பிறைக்குள் பிறமொழிச் சொல்லைப் பயன்படுத்துதல் நலம்.

4. முன் எழுத்துக்களையும், பட்டம் பதவிகளையும் தமிழிலேயே அச்சிடலாம்.

5. ''புதுமைத் திருமண அழைப்பிதழ்' ஒருவாறு வரவேற்கத்தக்கது என்றாலும் மணமக்களைப் பற்றியோ, அவர்தம் ஊரைப்பற்றியோ செம்மையாகத் தெரிந்து கொள்ள இயலாது இடர்ப்படவும் நேரிடுகிறது.

6. மரபுமுறைத் திருமண அழைப்பிதழ்களில், திருமணம், நிகழும் நாள், நேரம், கிழமை, ஓரை, இலக்கினம் முதலான விவரங்கள் தரப்படுகின்றனவாதலின், அவை பின்னொருகால் வரலாற்றுக் குறிப்புக்கும் பயன்தரக் கூடும்.

7. இத்திருமண அழைப்பிதழையும் ஒரு கருவியாகக் கொள்ளலாம். காலப்போக்கில் அச்சொற்பொருளை உணர்ந்து கொள்வர்: மொழியும் வளரும்.

8. 'ஒருவனுக்கு ஒருத்தி' என்பதே ஒவ்வொருவரின் வாழ்விலும் குறிக்கோளாக இன்றும் கொள்ளப்படுவதால் திருமணத்திற்கும், அது தொடர்பான ஒவ்வொரு செயலுக்கும் முக்கியத்துவம் தரப்படுகிறது. அதன் வெளிப்பாடாகவே இத்தகு திருமண அழைப்பிதழ்கள் அமைகின்றன.

9. இவற்றிற்கெல்லாம் அச்சகத்தாரின் ஒத்துழைப்பும் தேவை.

10. இலக்கிய வளர்ச்சிக்கும் திருமண அழைப்பிதழ்கள் அடிகோலுகின்றன.

# "அலைவாய்க் கரையில்"-நாவலில் வழக்கியல் ஒலிமாற்றங்கள்

சு. அழகேசன்

அய்ய நாடார் சானகியம்மாள் கல்லூரி,
சிவகாசி.

திருமதி. இராஜம்கிருஷ்ணனின் 'அலைவாய்க் கரையில்' என்ற நாவல், தூத்துக்குடிப் பகுதியின் கடற்கரையில் வாழும் பரதவ மக்களின் வாழ்க்கைமுறை, பண்பாடு போன்றனவற்றை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட ''வட்டார வழக்கு நாவல்'' (Regional Novel) ஆகும். இந்நாவல் சித்தரிக்கும் பரதவர்களின் பேச்சுவழக்கில் காணப்படும் ஒலிமாற்றங்களை மட்டும் சுட்டுவதாய் இக்கட்டுரை அமைகின்றது.

இப்பேச்சு வழக்கில் ஒலி மாற்றங்கள் (1) ஒலித்திரிபு (2) ஒலி கெடல் (3) பிற ஒலிகளை ஏற்றல் (4) பல மாற்றங்களைப் பெறுதல் என்ற நிலைகளில் அமைகின்றன.

## 1. ஒலித்திரிபு:-

இக்கிளைமொழிப் பேச்சுவழக்கில் பல்வேறு வகை ஒலித் திரிபுகள் காணப்படுகின்றன. உயிர், மெய், உயிர்மெய், ஆகிய ஒலிகள் இம்மாற்றங்களை ஏற்கின்றன.

### (அ) உயிரொலித் திரிபுகள்:-

இப்பேச்சு வழக்கில் 15 வகை ஒலித்திரிபுகள் காணப்படுகின்றன்.

---

* வெளியீடு: பாரிபுத்தகப்பண்ணை, சென்னை. மே, 1978.

(1) அ > எ : பலம் - பெலம் (பக். 18)
நல்ல - நெல்ல (பக். 49)

(2) ஆ > அ : கனா - கெனா (பக். 242)
சும்மா - சொம்மா (பக். 36)

(3) ஆ > எ : அப்பா - அப்பெ (பக். 18)

(4) இ > ஆ : மன்னிப்பு மன்னாப்பு (பக். 107)

(5) இ > உ : அறிவு - அறுவு (பக். 149)

(6) இ > எ : இடம் - எடம் (பச். 79)
பிரசாதம் - பெரசாதம் (பக். 237)

(7) இ > ஒ : திறந்து - தொறந்து (பக். 34)
பிறந்த - பொறந்த (பக். 78)

(8) ஈ > ஊ : வீட்டுக்கு - ஊட்டுக்கு (பக். 173)

(9) உ > இ : பட்டிருக்கு - பட்டிருக்கி (பக். 11)
இருக்கட்டும் - இரிக்கட்டும் (பக். 30)
இருந்து - இரிந்து (பக். 32)

(10) உ > ஒ : உடம்பு - ஒடம்பு (பக். 92)
உலகம் - ஒலகம் (பக். 51)
குரல் - கொரல் (பக். 141)

(11) ஊ > ஒ : பள்ளிக்கூடம் - பள்ளிக்கொடம்(பக்.11)

(12) ஏ > இய : உள்ளே - உள்ளிய (பக். 14)
எங்கே - எங்கிய (பக். 43)

(13) ஐ > அ : உண்மை - உண்ம (பக். 24)
தலைய - தலய (பக். 23)

(14) ஐ > இ : இற்றைக்கு - இன்னிக்கு (பக். 15)
என்னையும் - என்னியும் (பக். 39)

(15) ஐ > எ : கரைக்கு - கரெக்கு (பக். 21)
உன்னை - உன்னெ (பக். 39)

இவற்றுள் இ > எ, உ > இ, உ > ஒ, ஐ > அ, போன்ற மாற்றங்கள் அதிகமாகவும், ஆ > அ, ஆ > எ, இ > ஆ, இ > உ, இய > ஈ, ஈ > ஊ, ஊ > ஆ போன்ற மாற்றங்கள் குறைவாகவும் வழக்கில் காணப்படுகிறன,

(ஆ) மெய்யொலித் திரிபுகள்:

இவ்வகைத் திரிபுகளாகப் பேச்சுவழக்கில் 9 வகைத் திரிபுகள் அமைகின்றன.

(1) ண்ண் > ந்ந் : வெண்ணீர் - வெந்நி (பக். 25)

(2) த்த் > ச்ச் : வைத்தேன் - வைச்சேன் (பக். 15)
புடித்த - புடிச்ச (பக். 22)

(3) ந்த் > ஞ்ச் : கலைந்து - கலைஞ்சி (பக். 35)
எறிந்திருக்கிறார்கள் - எறிஞ்சிருக்யானுவ (பக். 21)

(4) ல் > ள் : தொழிலாளி - தொள்ளாலி (பக். 38)

(5) ழ் > ள் : வருசமுழுக்க - வருசமுளுக்க (பக். 22)
தொழில் - தொலில் (பக். 22)
பொழுது - பொளுது (பக். 95)

(6) ற் > ல் : கற்பிக்க வேண்டும் - கல்பிக்கணும் (பக் 309)

(7) ற் > ன் : இன்று - இன்னு (பக். 17)

(8) ற்ற் > ச்ச் : போயிற்று - போச்சி (பக். 35)
நேரமாயிற்று - நேரமாச்சி (பக். 21)

(9) ற்ற் > த்த் : வெற்றிலை - வெத்தில (பக். 37)
நேற்றைக்கு - நேத்தக்கி (பக். 34)

இவற்றுள் த்த்>ச்ச், ழ்>ள் திரிபுகள் அதிகமாகவும் ண்ண் >ந்ந், ற்>ல், ற்>ன் திரிபுகள் மிக அருகியும் காணப்படுகின்றன.

(இ) உயிர் மெய்யொலித் திரிபுகள்:

இவ்வகைத் திரிபுகளாக ஒன்பது வகைகள் அமைகின்றன.

(1) க > வ : போக - போவ (பக் 11)
: துரோகம் - துரோவம் (பக். 125)

(2) கா > வா : போகாது - போவாது (பக். 238)
முழுகாமல் - முழுவாம (பக். 35)

(3) ப > வ : விபரம் - வெவரம் (பக். 85)

(4) ப > வு : அபராதம் - அவுராதம் (பக். 103)

(5) பா > வா : ரூபாய் - ரூவா (பக், 15)

(6) ய > ச : உயர்ந்த - உசந்த (பக். 25)

(7) ய > வ : தயக்கம் - தவக்கம் (பக். 264)

(8) யா > ஆ : யாரோடு - ஆரோடு (பக். 15)

(9) வ > யா : கூட்டிவர - கூட்டியார (பக். 85)

இத்திரிபுகள் இப்பேச்சு வழக்குகளில் குறைவாகவே காணப்படுகின்றன.

2. ஒலிகெடல்:-

பரதவர் பேச்சு வழக்குகளில் ஒலிகள் கெடுதலும், காணப் படுகின்றன. கி, யா, வி, ல், ள், ன் போன்ற ஒலிகளே வழக்கு களில் கெடுகின்றன.

(1) 'கி' கெடல் : போகிற - போற (பக். 49)
போகிறான் - போறான் (பக். 69)

(2) 'யா' கெடல் : நியாயம் - ந்ாயம் (பக். 80)

(3) 'வி' கெடல் : விரோதம் - ரோதம் (பக். 24)

(4) 'ல்' கெடல் : தெரியாமல் - தெரியாம (பக். 16)

(5) 'ள்' கெடல் : வந்தவள் - வந்தவ (பக். 25)
மக்கள் - மக்க (பக். 111)
நாங்கள் - நாங்க (பக். 17)

(6) 'ன்' கெடல் : சொன்னேன் - சொன்னே (பக். 40)
வந்துதான் - வந்துதா (பக். 275)

இவற்றுள் 'ள்' கெடுதலே பேச்சு வழக்கில் அதிகமாகக் காணப்படுகின்றது.

3. பிற ஒலிகளை ஏற்றல்:-

இப்பேச்சு வழக்குகளில் சொற்களை உச்சரிக்கும் பொழுது பிற ஒலிகளை ஏற்கும் இயல்பும் காணப்படுகின்றது.

(1) 'இ' பெறல் : போய் - போயி (பக். 33)
கல்யாணம் - கலியாணம் (பக். 182)

(2) 'உ' பெறல் : பேர் - பேரு (பக். 237)
சர்க்கார் - சருக்கார் (பக். 22)

4. பல மாற்றங்களை ஒன்றாகப் பெறல்:-

ஒன்றிற்கு மேற்பட்ட மாற்றங்களைக் கொண்டும் வழக்குச் சொற்கள் அமைகின்றன. கீழ்க்கண்ட சொல்மாற்றங்கள் இதனை உணர்த்துகின்றன.

பண்ணிரெண்டு - பன்னண்டு (பக். 11)
எவ்வளவு - எம்புட்டு (பக். 21)
கிடைத்தது என்று - கிடைச்சிண்டு (பக். 16)
வைத்துவிட்டாய் - வச்சிட்ட (பக். 16)
பார்க்கிறீர்கள் - பாக்குறீங்க (பக் 16)
என்னுடைய - எண்ட (பக் 16)
பெரிய - பெரீ (பக் 39)
எப்படியிருக்கிறார் - எப்படியிருக்யா (பக். 18)
வாங்க் வேண்டும் - வாங்கணும் (பக். 22)
சுணங்குகிறாய் - சொணங்குத (பக். 25)

உங்களுடைய - ஒங்கக்க (பக். 34)
காட்டுகிறாய் - காட்டுறீம் (பக். 36)
நன்றாகத்தான் - நெல்லாத்தாம் (பக். 39)
வாங்கிவருகிறோம் - வாங்கியாறோம் (பக். 43)
மேன்மையாக - மேம்மயா (பக். 64)
கொன்றுவிட்டமர் - கொனனிட்டமரு (பக். 81)
இழுத்து வந்தால் - இளுத்தாந்தே (பக். 88)
திருநீர் - துண்ணூறு (பக். 236)
பூசுகிறான் - பூசுறானுவ (பக். 236)

இவ்வாறாக, பரதவர் பேச்சவழக்குகளில் ஒலிகள் திரிந்தும், கெட்டும், பிற ஒலிகளை ஏற்றும் ஒலிமாற்றங்களைப் பெறுதலை "அலைவாய்க்கரையில்" நாவல் உணர்த்துகிறது எனலாம்.

# Is anmolittokai a compound in Tamil?

- A. Athithan

Madurai Kamaraj University.

Tolkāppiyar, the author of the earliest extant grammatical work in Tamil enumerates six kinds of compounds, of which anmolittokai or metonymical compound is one (TC. 412). Anmolittokai is an important grammatical notion in Tamil grammar and all traditional grammarians of Tamil described it as a variety of compound.

This paper aims at pointing out how the metonymical compound functions in a way different from other compounds.

According to Tolkāppiyam, metonymical compound is formed of qualitative, conjunctival or declensional compound (TC.418). No reason was given for the omission of verbal compound and compound of comparison.

The commentators think that there are metonymical compounds formed of verbal compound and compound of comparison. However the later-day grammarian Pavananti included these two compounds also as basis for the formation of metonymical compound.

Teyvaccilaiyār considers the metonymical compounds which may be formed of the verbal compound and of the compound of comparison as a type of transferred nouns.

According to Tolkāppiyam, constituents of metonymical

compound may stand to each other in any one of the three relations viz., qualifier-noun relation, conjunctive relation and casal relation.

| | |
|---|---|
| Veḷḷāṭai Vantāḷ | 'She who wears white dress came' |
| takara ñāḻal cirittāḷ | 'She who applied takaram and gnalal pastes smiled' |
| porroṭi vantāḷ | 'She who wears gold bangles came'. |

In these compounds some additional sense is understood after the postpounds, which can be realised only from the contexts.

First to a difinition of the compound, it is inferred from Tolkappiyam, the following three as the characteristics of a compound, viz., two or more words are joined together to form immediate constituents among them, the members of a compound as a whole function as a single unit, or some suffixes or particles may be elided.

One exception to this general function of the compound is the metonymical compound in Tamil. Anmoḻi literally means the word that is not and anmoḻittokai means the compound where the head word is not present. In metonymical compound the significance of meaning lies on none of the members of the compound but on something else.

A comparison of the following two expressions will through light on how metonymical compound is formed.

| | |
|---|---|
| porroṭi uṭaintatu (pon-āl ceyyappatta toṭi uṭaintatu-casal compound) | 'The gold bangle was broken' |
| porroṭi vantāḷ | 'She who wears gold bangles came' |

(poṉ - āl ceyyappaṭṭa toṭiy-ai aṇinta peṇ vantāḷ)
- metonymical compound.

Structurally the casal compound and metonymical compound have the same structure. According to the commentators 'poṟṟoṭi in the first example is a casal compound, and 'poṟṟoṭi' in the second is a metonymical compound. This comparison thus questions the very nomenclature aṉmoḻittokai, and the implication in it is that aṉmoḻittokai is not a separate compound. So if the nomenclature is wrong, what should one call aṉmoḻittokai?

Thus the conclusion is reiterated that the metonymical compound and the other types of compound have an idential structure but with a change in the semantic composition. The consequent question is, On what basis, has it been considered a different type of compound at all? A close examination reveals that it has been considered a compound on an erroneou- assumption. Aṉmoḻittokai might have come into existance due to the influence of pāṇiṉi's bahuvrihi samāsa.

The semantic definition of aṉmoḻittokai is that a compound gets a meaning naturally extended from the normal meaning. Hence the metonymical compound cannot be given equal status as the other compounds. Metonymical compound is not a different type of compound as such, but the form has some sort of change in the semantic composition.

Metonymical compound cannot be interpreted as a case of deletion. when deletion is not the grammatical phenomenon to explain metonymical compound, the phenomenon of inferential meaning may be brought in for its explanation. The implicit transferred meaning is inferred by linguistic contexts. Hence it may not be wrong to consider the metonymical compound, a polysemantic form, whose implicit meaning is to be

inferred by contexts. As the topical meaning lies in the covert form, the derived meaning of the metonymical compound is not expressed through a form.

Metonymical compound may be taken as a transfer of sense through contiguity between names or as a transfer of name through similarity between senses.

*Select Bilbiography:*

Annamalai, E., The Tamil theory of Semanties, Seminar on Grammatical Theories in Tamil, 'Annamalai University, 1966.

Athithan, A., Aṉmoḻittokai', Tamiḻp poḻil. Vol.59. No. 5(1985). pp.193-196.

Carnap, R., Introduction to Semantics, Cambridge, 1942.

Ullmann, S., Semantics - An introduction to the Science of Meaning, Oxford, 1977.

# விளம்பரங்களும்-மொழியும்

கி. ஆதிநாரயணன்
சென்னைப் பல்கலைக் கழகம்.

மனிதர்களுடைய உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்தும் நிலையில் 'மொழி' என்ற சாதனம் பயன்படுகின்றது. மனிதர்களுடைய வளர்ச்சி நிலைக்கு ஏற்பவும் கால வளர்ச்சி நிலைக்கு ஏற்பவும் மொழியும் வளர்ந்து வந்துள்ளமையை அறிய முடிகின்றது.

1. சைகை மொழி - குழந்தைப் பருவநில்லயில் ஆரம்பமாகின்றது.
2. பேச்சுமொழி
3. எழுத்துமொழி
4. ஓவிய மொழி)

} குழத்தைப் பருவநிலையில் ஆரம்பமாகின்றது. மனிதனுடைய வளர்நிலைக்கேற்பவும், சூழ்நிலை கால நிலைக்கேற்பவும் இவை வெளிப்படுகின்றன.

என்ற நான்கு நிலையில் மொழியின் வளர்ச்சியை அறியமுடிகின்றன. இவை ஒவ்வொன்றும் கால வளர்ச்சிக்கேற்பவும், மனித இனவளர்ச்சிக்கு ஏற்பவும் பல்வேறு மாற்றங்களைப் பெற்று வளர்ந்துள்ளமையையும், வளர்கின்றமையையும் காணமுடிகின்றது. மேலும் சைகை, பேச்சு, எழுத்து, ஓவியம் என்ற நான்கும் மொழியின் வளர்ச்சிக்குச் சாதனங்களாக அமைந்துள்ளமையையும் அறிய முடிகின்றது.

இந்நூற்றாண்டில் சிறப்பாகவும், செம்மையாகவும், புதுமையாகவும் வளர்ந்து வரக்கூடியவை விளம்பரங்கள். இவை மொழி

யோடு தொடர்பட்டும், மொழி வளர்ச்சிக்கு ஒரு ஊடகமாகவும் அமைந்து இலக்கியமொழி, அறிவியல்மொழி என்பதுபோல 'விளம்பரமொழி' என்ற பெயரையும் பெறுகின்றது.

**விளம்பரம் - விளக்கம்.**

ஒரு புதிய செய்தியையோ அல்லது புதிய ஒரு பொருளைப் பற்றிய செய்தியையோ மக்களுக்கு அறிமுகப்படுத்தும் நிலையில் விளம்பரங்கள் செயல்படுகின்றன. பொருள் உற்பத்தியாளரும், பொருளினை விற்பனை செய்பவரும் தம்முடைய பொருட்களை மக்களுக்கு அறிமுகம் செய்யும் நிலைக்கு 'விளம்பரம்' என்று வழங்கப்படுகின்றது. வணிகத்தின் அடிப்படையிலும், கருத்துகளை வெளிப்படுத்தும் நிலையிலும் விளம்பரங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு விளம்பரங்கள் பயன்படுகின்றன. மக்கள் தொடர்புக் கருவியாக, கருத்துப்பரப்பல் கருவியாக, வணிகக் கருவியாக, தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் கருவியாக, நாகரிக வளர்ச்சி மக்களைக் கவரும் மொழி வளர்ச்சிக் கருவியாக, விளம்பரங்கள் விளங்குகின்றன.

**விளம்பர வகைகள்:**

1) பொருட்கள் பற்றிய விளம்பரங்கள்

2) புதிய செய்திகள் (அ) கருத்துகள் பற்றிய விளம்பரங்கள் என்ற இரண்டு நிலைகளில் மேற்கொள்ளப்படும் விளம்பரங்கள்

1) மொழி வழி விளம்பரங்கள்.




2) காட்சிவழி விளபரங்கள் (அ) விளம்பரப்பொருள் வழி விளம்பரங்கள் என்ற இரண்டு நிலைகளில் வெளிப்படுத்தப் படுகின்றன.

பொருள்கள்பற்றிய விளம்பரங்களை (1) ஆடம்பரப்பொருட்கள் (2) உணவுப் பொருட்கள் (3) வாழ்க்கையோடு தொடர்புடையனவும், மக்கள் தேவைகளைப் பூர்த்திச் செய்யக் கூடியதுமான பொருட்கள் என்ற மூன்று நிலைகளில் பிரித்துக் காணலாம். புதிய செய்திகள் (அ) கருத்துகள் பற்றிய விளம்பரங்கள் புதுப்புது செய்திகளை அறிந்து கொள்வதற்கும், இடம் கடந்தும், காலம் கடந்தும் நடந்த செய்திகளைத் தெரிந்து கொள்வதற்கும் என்ற இரண்டு நிலைகளில் அமைகின்றன.

## மொழிவழி விளம்பரங்கள்.

மொழிவழி விளம்பரங்களை விளம்பும் அரங்கங்களாக ஊடகங்களாக (1) வானொலி விளம்பரங்கள், (2) தொலைக்காட்சி விளம்பரங்கள், (3)திரைப்பட விளம்பரங்கள், (4)பத்திரிக்கை செய்தித்தாள் விளம்பரங்கள், (5)சுவரொட்டி, சுவரெழுத்து, விளம்பரப் பலகை விளம்பரங்கள், (6) பேட்டிவழி (பேட்டி காணல்) விளம்பரங்கள், (7) மக்கள் கூட்டம் உள்ள இடங்களில் பேச்சு, நாடகம், துண்டுப்பிரசுரங்கள் முதலியவைகளின் வழி விளம்பரம் செய்தல் முதலியவை அமைகின்றன.

## தொலைக்காட்சி, திரைப்பட விளம்பரங்களின் தனிச்சிறப்பு:-

ஏனைய விளம்பர ஊடகங்களைக் காட்டிலும் தொலைக்காட்சி, திரைப்பட விளம்பரங்கள் உயிரோட்டமுள்ள மக்கள் மத்தியில் காணப்படுகின்றன. மக்களைக் கவரும் நிலையில் அதாவது படித்தவர், படிக்காதவர், பெரியவர்கள், சிறியவர்கள் என்ற நிலை இல்லாமல் அனைவரும் புரிந்து கொள்ளக் கூடிய நிலையில் அமைவதைக் காணமுடிகிறது. அவ்விளம்பரக் காட்சிகள் கண்வழியாகச் சென்று மனதில் ஆழப்பதிவனவாகி விடுகின்றன. வானொலி விளம்பரங்களும் மேற்கூறப்பட்ட நிலையில் 75% அமைவதாகக் காணலாம். சைகை மொழி, பேச்சு மொழி, எழுத்து மொழி, ஓவியமொழி என்ற நான்கும் ஒன்றுசேரத் தொலைக்காட்சி, திரைப்பட விளம்பரங்களில் இடம்பெற்று மக்கள் மத்தியில் சிறப்பிடம் பெற்று வருவதை அறியலாம்.

காட்சிவழி விளம்பரங்கள்:

விளம்பரப் பொருளை மக்கள் காணும்படி காட்சிப் பொருளாக வைத்தல். அதாவது விளம்பரம் செய்ய உள்ள பொருளைக் காட்சியாக வைத்து விளம்பரத்தைச் செய்தல். காட்சி நிலையிலேயே பொருளின் தன்மையைப் புலப்படுத்தும் நிலை காட்சி விளம்பரங்களின் தனித்தன்மை ஆகும்.

விளம்பர முறைகள்:

(1) பொருளின் தரப்பாடு (2) பொருளின் மேம்பாடு (3) பொருளின் குணப்பாடு (4) பொருளின் செயற்பாடு என்ற நான்கு நிலையில் விளம்பர முறைகள் அமைந்துள்ளன. மேற் கூறப்பட்ட விளம்பர ஊடகங்கள் அனைத்திலும் இம்முறைகள் கையாளப்பட்டு வருவதைக் காண முடிகின்றது.

விளம்பர நிறுவனங்கள்:

விளம்பரங்கள் சிறப்பான முறையில் தொடர்ந்து செயல் படுவதற்காக விளம்பர நிறுவனங்கள் என்ற அமைப்பில் பல் வேறு நிறுவனங்கள் தொடர்ந்து செயல்படுகின்றன. எடுத்துக் காட்டாக 1) அத்வே விளம்பர நிறுவனம் 2) ஆர். கே. சுவாமி விளம்பர நிறுவனம் 3) ஒஸ்டாக் விளம்பர நிறுவனம் போன்ற நிறுவனங்களின் பெயர்களை நினைவில் கொள்ளலாம்.

விளம்பர மொழி:

கவன ஈர்ப்பு, அவாத்தூண்டல், படித்தறிவெளிமை, நினைவுப்பதிப்பு, கருத்துருவாக்கம், செயற்பாடு என்னும் பண்புகளைக் கொண்டு யார், எதனை, எப்போது, எங்கு ஏன் எப்படி என்ற நிலையில் சைகை, பேச்சு எழுத்து, ஓவியம் என்ற நான்கின் அடிப்படையில் வெளிப்படும் மொழியே விளம்பர மொழி எனப்படும்.

இலக்கியங்கள், இலக்கணங்கள் ஆகியவற்றில் வெளிப்படும் மொழிக்குக் கட்டுப்பாடு/வரன்முறை இருப்பதுபோல் விளம்பரத் தால் வெளிப்படும், விளம்பர மொழிக்குக் கட்டுப்பாடு/வரன்

முறை கிடையாது. விளம்பர வளர்ச்சிக்கு மொழியும், மொழி வளர்ச்சிக்கு விளம்பரமும் என்று ஒன்றோடு ஒன்று தொடர்பு பட்டுள்ளமையை அறிய முடிகின்றது. இருப்பினும் விளம்பரத்தின் வளர்ச்சிக்கு மொழி ஒரு சாதனமாக மட்டும் பயன்படுவதைக் காணலாம். காலந்தோறும் மொழியின் வளர்ச்சிக்கு மனிதன் பல்வேறு ஊடகங்களைக் கண்டுபிடித்து அவற்றின் மூலம் தங்களது கருத்துகளை பரிமாறிக் கொண்டானோ அது போன்றே இருபதாம் நூற்றாண்டு மனிதனும் விளம்பரங்களை மக்களுக்குத் தெரிவிக்க மொழியையே ஊடகமாக பயன்படுத்திக் கொண்டுள்ளமையை அறிய முடிகின்றது. மக்களுடைய மனதைத் தொடும் நிலையில் விளம்பரங்கள் அமைதல் வேண்டும். அதற்கேற்ற நிலையில் அதாவது விளம்பரம் செய்வதற்கு ஏற்ற நிலையில் மொழியை-மொழியின் அமைப்பை மாற்றிக் கொள்கின்றனர். விளம்பரத்தின் தன்மை மாறாமல் இருக்க மொழியின் தன்மையை மாற்றி அமைத்துக் கொள்கின்றனர். மொழியைப்பற்றிய கவலை அவர்களுக்கு இல்லை. மக்களுக்குப் புரியும் நிலையில் விளம்பரங்கள் அமைவதற்கு எவ்வகையான மொழியும், மொழியமைப்பும், மொழிநடையும் விளம்பர மொழியின் பாற்படும்.

விளம்பரங்களில் மொழியமைப்பு:

இந்தியாவில் விளம்பரங்கள் முதலில் ஆங்கிலத்தில் எழுதப் பட்டுப் பிறகு மாநில மொழிகளில் மொழி பெயர்க்கப்படுகின்றன. இந்நிலையில் மாநில மொழியமைப்புகளுக்கேற்பவும், விளம்பரங்களின் தன்மை மாறுபடாதிருக்கவும் மொழியமைப்பில் சில மாற்றங்கள் நிகழ்கின்றன. 1) ஒலி மரபுப் பிறழ்ச்சி 2) வரிவடிவ மரபுப் பிறழ்ச்சி 3) இலக்கண மரபுப் பிறழ்ச்சி 4) சொல் மரபுப் பிறழ்ச்சி 5) பொருள் மரபுப் பிறழ்ச்சி போன்ற மொழி மாற்றங்கள் ஆங்கில விளம்பரங்களிலும், தமிழ் விளம்பரங்களிலும் காணப்படுகின்றன. மேலும் தொடையுறுப்புகள், அணிகள், இரட்டைக்கிளவி, இரட்டுறமொழிதல் போன்ற இலக்கிய மொழியமைப்பும், சொற்றொடர் இணையமைப்பு, சொற்குறிப்பு, பொருள் குறிப்பு போன்ற மொழியமைப்பும், ஆங்கிலம், தமிழ் என்ற இரண்டு மொழிகளிலும் காணலாம்.

தென்றலிலே தவழ்ந்து திடீரெனப் பறந்திடவே
தெவிட்டாத அழகுடன் தெருவெல்லாம் நிறைந்திடவே

என்ற வெஸ்பா பி. எல். 170 என்னும் இரு சக்கரவாகனத்தின் விளம்பரத்தில் தொடை நயம் அமைந்துள்ளதைக் காணலாம். மேற்கூறப்பட்ட ஒவ்வொன்றிற்கும் இதுபோன்று எடுத்துக்காட்டு களைக் காணலாம்.

விளம்பர உத்திகள்:

மொழியமைப்பினையொட்டி விளம்பரத்தில் கையாளப் படும் உத்தி முறைகளை இரண்டு வகையாகப் பிரித்துக் காண லாம். அவையாவன (1) சொன்முறை விளம்பர உத்திகள் (2) எழுத்துமுறை விளம்பர உத்திகள் என்பன.

சொன்முறை விளம்பர உத்திகள்:

எந்தவிதமான விளம்பரங்களும் மக்களுக்குப் போய்ச்சேருதல் வேண்டும் என்ற அடிப்படைக் கருத்தையொட்டி அமைகின்றது. அந்நிலையில் விளம்பரம் செய்யக்கூடிய பொருளைப் பற்றி சுவையாகவும், மனதைக் கவரும் நிலையிலும் அப்பொருளின் தரப்பாடு, செயற்பாடு, மேம்பாடு, குணப்பாடு போன்ற தன்மைகள் வெளிப்படும் நிலையில் கூறுவது சொன்முறை விளம்பர உத்திகள் என்று கூறலாம். இன்ன உத்திகள் தான் சொன்முறை விளம்பர உத்திகள் என்று வரையறுத்துக் கூற முடியாது.

தொண்டையிலே 'கிச் கிச்' சைப்போக்குங்கள்
விக்ஸ் சாப்பிடுங்கள்

என்ற விளம்பரத்தை எடுத்துக்காட்டாகக் காணலாம்.

# இக்காலத் தமிழில் தொழிற்பெயரமைப்பு

தி. இரமணி

அவினாசிலிங்கம் மனையியல் பல்கலைக்கழகம்

கோயம்புத்தூர்

தமிழ் வினையில் தொழிற்பெயர் என்ற ஓர் இலக்கணப் பிரிவு உள்ளது இத்தொழிற் பெயர்க்குப் பெயர், வினை ஆகிய இருபெரும் இலக்கணப் பிரிவுகளின் தன்மைகளும் உள்ளன எனலாம் (R. Caldwell, 1959) தொழிற்பெயரை வினையாகக் கொண்டால் இஃது குறிப்பிட்ட எழுவாய்க்குப் பிறகு வருவதைக் காணலாம். தொழிற்பெயரைப் பெயராகக் கொண்டால் இஃது குறிப்பிட்ட வினைச் சொல்லுக்கு முன்பு எழுவாயாக வருவதை காணமுடிகிறது.

எ.கா. நீ வந்தது -ஐ நான் பார்த்தேன்

இங்கு வந்தது என்பது தொழிற் பெயராக வருகிறது. இதை வினைச் சொல்லாக எடுத்துக் கொள்ளும் பொழுது இதனுடைய எழுவாய் முன்பாகவரும் நீ என்பதாகும். இதைப் பெயர்ச் சொல்லாக எடுத்துக் கொண்டால், இதற்குப் பயனிலையாக பார்த்தேன் என்ற வினைமுற்று வருகிறது. தொழிற்பெயர் மற்றப் பெயர்ச் சொற்களைப் போல் வேற்றுமைச் சொல்லியன்களையும் வினையடைச் சொல்லியன்களையும் எடுத்துக் கொள்ளும் தன்மையுடையதாகும். இத்தகைய தன்மைகளைக் கொண்டு விளங்கும் தொழிற் பெயரின் உருபனியல் அமைப்பும் தொடரியல் அமைப்பையும் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தொழிற்பெயர்: உருபனியல் அமைப்பு**

உருபனியல் நிலையில் தொழிற் பெயரானது வினையடி

(செயப்படுபொருள் குன்றா வினையாக்க உருபன்) + கால உருபன் எதிர்மறை உருபன் + தொழிற் பெயர் உருபன் என்ற அமைப் பைக் கொண்டதாகும்.

இக்காலத் தமிழ் வழக்கில் தொழிற் பெயரைக் காட்டும் உருபனாக -அது வழக்கில் உள்ளது, தொழிற் பெயர் உருப னாகிய -அது இறந்தகால உருபனுக்குப் பின்னரும், நிகழ்கால உருபனுக்குப் பின்னரும், எதிர்கால உருபனுக்குப் பின்னரும், எதிர்மறை உருபனுக்குப் பின்னரும் வந்து வழங்குகின்றது!

எ.கா

பார்×-த்-அது > பார்த்தது

போ-இன்-அது > போனது

ஓடி - ந்த் - அது > ஓடிந்தது

செய் - கிற் - அது > செய்கிறது

நடி × - கின்ற - அது > நடிக்கின்றது

பார்×- ப் - அது > பார்ப்பது

புரள் - த்த் - வ் - அது > புரட்டுவது

ஓடு - ஆத் - அது > ஓடாதது

திருந்து - த் - ஆத் - அது > திருத்தாதது

போன்றவை

**தொழிற் பெயர்: தொடரியலமைபபு**

சொல்லியல் பகுதியில் அதன் அமைப்பில் மிகவும் எளிதாகக் காணப்படும் தொழிற்பெயர் சொற்றொடர் பகுதியில் அதன் அமைப்பிலும் பொருளிலும் மிகவும் சிக்கல் வாய்ந்த ஒன்றாகக் காணப்படுகிறது [S. Agesthialingam, Infinitive in Tirukkural, Ayvukkovai, 1971].

தொழிற்பெயர் தொடர்நிலையில் ஓர் அகப்படும் வாக்கி யத்தின் முற்றுவினையிலிருந்து பெறப்படும் வகையிலும் ஓர் அகப்படுத்தும் வாக்கியத்தின் பெயர்த்தொடர்களில் இணைக்கப் படும் தன்மையிலும் இருக்கும். தொழிற்பெயர்கள் ஓர் அகப்

படுத்தும் வாக்கியத்தில் தோன்றும் நிலைகளுக்கேற்ப அவற்றின் செயற்பாடு வேறுபடும்.

அகப்படும் வாக்கியத்தின் முற்று வினையிலுள்ள பால் - எண் - இட உருபன்களை நீக்கி, அகப்படுத்தும் வாக்கியத்தின் பெயர்பதிலியாகிய அது என்பதை இணைப்பதன் மூலம் தொழிற்பெயர் உருவாகும்.

தொழிற் பெயர் தொடர் நிலையில் எழுவாய். செயப்படு பொருள், கருவி, கு வேற்றுமை, காரணம், இடம், இல் இருந்து ஆகியனவற்றைக் குறிக்கும் தன்மைகளைக் கொண்டு விளங்கு கின்றது.

1. எழுவாயைக் குறிக்கும் தன்மை

எ. கா

அவன் வந்தது நல்லதாயிற்று தொழிற்பெயர்த் தொடர் கொண்ட இவ்வாக்கியம் அவன் வந்தான் என்ற அகப்படும் வாக்கியத்தை அது நல்லதாயிற்று என்ற அகப்படுத்தும் வாக்கி யத்தில் இணைப்பதன் மூலம் பெறப்படும் தொடரை, தொழிற் பெயர் உருவாக்க விதிகளுக்கு உட்படுத்துவதன் மூலம் பெறப் படுகிறது.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 | + | 2 | + | 3 | + | 4 |
| [பெயர் | + | வினை] | + | பெயர்பதிலி | + | வினை |
| [அவன் | + | வந்தான்] | + | அது | + | நல்லதாயிற்று |

தொழிற்பெயர் விதி:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 | + | 2 | — | 3 | + | 4 |
| பெயர் | + | வினை | — | பெயர் பதிலி | + | வி |
| அவன் | + | வந்த் | — | அது | + | நல்லதாயிற்று |
| அவன் | + | வந்தது | + | நல்லதாயிற்று | | |




2. செயப்படு பொருளினைக் குறிக்கும் தன்மை

எ. கா.

நான் அவன் வந்ததைப் பார்த்தேன் தொழிற்பெயர்த் தொடர் கொண்ட இவ்வாக்கியம் அவன் வந்தான் என்ற அகப்படும் வாக்கியத்தை, நான் அதைப் பார்த்தேன் என்ற அகப்படுத்தும் வாக்கியத்தில் இணைப்பதன் மூலம் பெறப்படும். தொடரை, தொழிற்பெயர் உருவாக்க விதிகளுக்கு உட்படுத்து வதன் மூலம் பெறப்படுகிறது.

3. கருவியினைக் குறிக்கும் தன்மை;

எ. கா.

நான் அவன் கேட்டதால் கொடுத்தேன்

தொழிற் பெயர்த்தொடர் கொண்ட இவ்வாக்கியம் அவன் கேட்டான் என்ற அகப்படும் வாக்கியத்தை, நான் அது ஆல்

கொடுத்தேன் என்ற அகப்படுத்தும் வாக்கியத்தில் இணைப்ப தன்மூலம் பெறப்படும் தொடரை, தொழிற்பெயர் உருவாக்க விதிகளுக்கு உட்படுத்துவதன் மூலம் பெறப்படுகிறது.

4. கு வேற்றுமையினைக் குறிக்கும் தன்மை:

எ. கா.

நான் அவனைக் கேட்பதற்கு மறந்து விட்டேன்

தொழிற்பெயர்த் தொடர் கொண்ட இவ்வாக்கியம் நான் அவனைக் கேட்பேன் என்ற அகப்படும் வாக்கியத்தை நான் அதுக்கு மறந்து விட்டேன் என்ற அகப்படுத்தும் வாக்கியத்தில் இணைப்பதன் மூலம் பெறப்படும் தொடரைத் தொழிற்பெயர் உருவாக்க விதிகளுக்கு உட்படுத்துவதன் மூலம் பெறப்படுகிறது.

5. காரணத்தைக் குறிக்கும் தன்மை:

எ. கா.

இராமன் படித்தை விற்பதற்காகப் போனான்

தொழிற்பெயர்த் தொடர் கொண்ட இவ்வாக்கியம். இராமன் பழத்தை விற்பான் என்ற அகப்படும் வாக்கியத்தை அவன் அதுக் காகப்போனான் என்ற அகப்படுத்தும் வாக்கியத்தில் இணைப் பதன்மூலம் பெறப்படும் தொடரைத் தொழிற்பெயர் உருவாக்க விதிகளுக்கு உட்படுத்துவதன் மூலம் பெறப்படுகிறது.

6. இடத்தைக் குறிக்கும் தன்மை:

எ.கா.

தப்பு நீ சொல்கிறதில் இருக்கிறது

தொழிற்பெயர்த் தொடர் கொண்ட இவ்வாக்கியம் நீ சொல் கிறாய் என்ற அகப்படும் வாக்கியத்தை தப்பு அதில் இருக்கிறது என்ற அகப்படுத்தும் வாக்கியத்தில்.இணைப்பதன் மூலம் பெறப் படும் தொடரைத் தொழிற்பெயர் உருவாக்க விதிகளுக்கு உட் படுத்துவதன் மூலம் பெறப்படுகிறது.

7. இல் இருந்து வேற்றுமை குறிக்கும் தன்மை:

எ.கா.

நீ அவன் கேட்டதிலிருந்து பொருளை உணர்ந்து கொண்டால்

தொழிற்பெயர்த் தொடர் கொண்ட இவ்வாக்கியம் அவன் கேட்டான் என்ற அகப்படும் வாக்கியத்தை நீ அதிலிருந்து பொருளை உணர்ந்து கொண்டால் என்ற அகப்படுத்தும் வாக்கியத்தை இணைப்பதன் மூலம் பெறப்படும் தொடரை, தொழிற்பெயர் உருவாக்க விதிகளுக்கு உட்படுத்துவதன் மூலம் பெறப்படும்.

எனவே, இக்கட்டுரையின் மூலம் தொழிற்பெயர், பெயர், வினை ஆகிய இரண்டு இலக்கணப் பிரிவுகளின் தன்மைகளைக் கொண்டு விளங்குகிறது என்பதும், சொல்லியல் நிலையில் -அது என்பது தொழிற்பெயர் உருபனாக விளங்குகிறது என்பதும், தொடர்நிலையில் ஓர் அகப்படுத்தும் வாக்கியத்தின் முற்று வினையிலிருந்து பெறப்படும் வகையிலும் ஓர் அகப்படுத்தும் வாக்கியத்தின் பெயர்த்தொடர்களில் இணைக்கப்படும் தன்மையிலும் இருக்கும் என்பதும், அகப்படுத்தும் வாக்கியத்தில் தோன்றும் நிலைகளுக்கேற்ப அவற்றின் செயற்பாடு வேறுபடும் என்பதும், தொடர்நிலையில் எழுவாய் போன்ற பல்வேறு தன்மைகளைக் கொண்டு விளங்குகின்றது என்பதும் புலனாகின்றது.

# தமிழில் ஆங்கிலத்தின் தாக்கம்

நா. இராசகோபாலன்

திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி, சென்னை

''ஆங்கிலக் கல்விமுறை இந்திய அடிவானத்தை விரிவாக்கியது. ஆங்கில இலக்கியங்களும் ஆங்கில அமைப்புகளும், வியப்புணர்வை ஏற்படுத்தின. இந்தியரின் சில பழக்கங்கள்,வாழ்க்கையியல், ஆகியவற்றில் புரட்சியை உண்டாக்கின. அரசியல் வாழ்க்கையில் வேட்கையைத் தோற்றுவித்தன'' என்று நேரு ஆங்கிலத்தின் தாக்கம் பற்றி இயம்புகிறார்.

ஆங்கிலக் கல்வியின் காரணமாக, அறிவின் பல துறைகள் இந்திய மக்களுக்கு - தமிழர்களுக்கு - அறிமுகமாயின. நில நூல் என்னும் முதல் நூலைத் தமிழில் இரேனியல் 1832 இல் வெளியிட்டார், உலக வரலாறு (1881) இங்கிலாந்து வரலாறு (1858) இந்து தேச வரலாறு, உரோம் நாட்டு வரலாறு முதலிய வரலாற்று நூல்கள் வெளிவந்தன. ஜி.டி. போப் தமிழ் நாட்டு வரலாற்றை எழுதினார். விண்சென்ட் சுமித் இந்திய வரலாற்றை எழுதினார். கால்டுவெல் திருநெல்வேலிச் சரித்திரத்தை வரைந்தார். வீச கணிதம் (1855) என்னும் எண் கணிதத்தை (Algebra) காரல் படைத்தார். நில அளவை நூல் (1858) வெளியாயிற்று. வீட்டு விலங்கியல் (1836) காட்டு விலங்கியல், மீன் இயல், மனித உறுப்பியல் (1872), இயற்பியல், வேதியியல் முதலிய பல அறிவியல் நூல்களும் வெளியிடப்பட்டன.

'தமிழ்த்தாள்' என்ற பெயர் கொண்ட மாத வெளியீடு 1831 முதல் வெளி வந்தது. இதுதான் தமிழில் வந்த முதல் பருவ ஏடு,

பல ஆங்கில நூல்கள் தமிழில் பெயர்க்கப்பட்டன. முதன் முதலில் விவிலியம் (பைபிள்) தமிழ் மொழியில் 1714இல் வெளி வந்தது. பின்னர் ஷேக்ஸ்பியர் நாடகங்கள், முதலியன நேர் முகமாகவும் தழுவல்களாகவும் தமிழில் வந்தன. நாடகத் துறையில் சுந்தரம் பிள்ளையின் மனோன்மணியம் என்ற அண்மைக் காலத்திய நாடக நூல் 'மறைவழி' என்ற ஆங்கில நூலின் தழுவலாகப் பிறந்தது.

தமிழகத்தில் நிகண்டுகளே நெடுங்காலமாக இருந்து வந் துள்ளன அவை செய்யுள் வடிவின. ஆங்கிலேயர்கள் தமிழி லும் பிற திராவிட மொழிகளிலும் அகர முதலிகளை உரு வாக்கினர்.

வின்சுலோவின் தமிழ் ஆங்கில அகராதி, 1842 ஆம் ஆண்டில் அச்சாயிற்று. பிரௌனின் தெலுங்கு - ஆங்கில அகராதி 1852 இலும், கிட்டலின் கன்னட - ஆங்கில அகராதி 1894 இலும் நூல்களாகத் தோன்றின. பெர்சிவில் ஆங்கிலத் தமிழ் அகராதியை எழுதி வெளியிட்டார். மெக்லீன் Glossary of Madras Presidency எனும் நூலை அச்சிட்டார். தமிழ் நாட்டுப் பழமொழிகள் திரட்டப்பட்டன. பெர்சிவில் பாதிரியார் அவற்றைத் திரட்டி வகைப்படுத்தி வெளியிட்டார்.

நாட்டுப் பாடல்களும் ஆங்கிலேயரால், சேகரிக்கப்பட்டு நூலாக உருப்பெற்றன. கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டன. செப்பேடுகளும் வரலாற்றுக்கு உதவும் முறையில் அமைக்கப் பட்டன. தொல்பொருளாய்வுத் துறைஒன்று அமைக்கப்பட்டது. அதன் மூலம் மொகஞ்சதாரோவில் வாழ்ந்த திராவிடர்களின் பெருமையை உலகம் அறிந்தது. எல்லிஸ் என்பவர், முத்து சாமிப் பிள்ளை என்பவரை அனுப்பி, மாவட்டங்களிலிருந்து தமிழ் ஏட்டுச் சுவடிகளை 1816-இல் தேடிக் கொண்டு வரச் செய்தார். வீரமாமுனிவரின் நூல்களையும் தேடிக் கொண்டு வரச் செய்து காப்பாற்றினார். அப்படிச் செய்திராவிட்டால், தத்துவ போதக சுவாமி இயற்றிய நூல்கள் இறந்துபட்டது போல், வீரமாமுனிவரின் நூல்களும் மறைந்து போயிருக்கும்.

தமிழ்மொழியின் பெருமையை ஆங்கிலேயர் உணர்ந்தனர். அதைத் தமிழருக்கும் உணர்த்தினர். கவிதை வடிவத்தில், ''தமிழ் கிரேக்கத்தை விஞ்சியுள்ளது. அது இலத்தினை விடச் செழுமையானது. நிறைவிலும் ஆற்றலிலும் மற்ற வாழும் மொழியைவிட ஆங்கிலத்தையும் செருமானியத்தையும் ஒத்துள்ளது'' என்று வின்ஸ்லோ எழுதியுள்ளார். ஸ்கிமிட், பெர்சிவில், ஷிட்னி, ஸ்லேட்டர் முதலிய அறிஞர்களும் தமிழின் சிறப்பை அறிவித்து, தமிழருக்கும் தரணிக்கும் அறிவித்தனர்.

ஜி.யு. போப், திருவாசகம், நாலடியார், திருக்குறள் ஆகிய நூல்களையும், புறநானூறு, புறப்பொருள் வெண்பா மாலை ஆகியவற்றின் சில பகுதிகளையும் மொழி பெயர்த்து தமிழின் இலக்கியம் பெருமையை மேலை உலகில் பறை சாற்றினார். அவர் தமிழ் இலக்கணத்தை மூன்று பாகமாகவும் வெளியிட்டார். டெய்லர், வெற்றி வேற்கையை மொழி பெயர்த்தார். 'தமிழ் வடமொழியின் சேய்' என்று வலியுறுத்தப்பட்டும் நம்பப்பட்டும் வந்த காலத்தில் இக்கருத்தை மறுத்த தமிழ் தெலுங்கு முதலிய திராவிட மொழிக் குடும்பத்தை ஆய்ந்து கண்டறிந்து, வடமொழியின் சார்பின்றித் தமிழ் தனித்தியங்க வல்லது என்ற உண்மையையும் உணர்த்தினார், கால்டுவேல், அவர் ஒப்பிலக்கிணத் துறையில் புதுப்பாதையைக் காட்டினார்.

புதினம், சிறுகதை நாடகம், வாழ்க்கை வரலாறு. நாட்குறிப்பு, கட்டுரை, மறானாய்வு. ஆராய்ச்சி முதலிய இலக்கியத் துறைகள் ஆங்கிலத்தாக்கத்தால் தமிழகந்தில் தோன்றி வளர்ந்தன; தழைத்தன வடமொழி இலக்கியத்தையே முன் மாதிரியாகவும் தழுவலாகவும் கொண்டிருந்த பழக்கம் தேய்வு நிலை பெற்றது. தமிழில் வேதநாயகம் பிள்ளையும், வங்கத்தில் பங்கிம் சத்திரரும், மராத்தியில் அரிநாராயண் ஆப்தேவும், மலையாளத்தில் சந்து மேனனும், ஆங்கில இலக்கியத் தாக்கத்தின் காரணமாக தாய்மொழியில் இலக்கியம் படைத்தனர், சிலர் ஆங்கிலத்திலேயே எழுதிச் சிறப்பு பெற்றவர்.

பாரதியின் கவிதைகளில் ஆங்கில மொழித் தாக்கம் அமைந்தது. பைரனின் கிரீஸ் தீவுகள் (Isles of Greece) என்னும்

செய்யுட்களின் தாக்கத்தை 'எந்தையும் தாயும்' என்று தொடங்கும் பாரதியின் பாடல் தெரிவிக்கும். விட்மன் என்ற அமெரிக்கா கவிஞன் 'தாயினும் சிறந்தது எதுவுமில்லை' என்று பாடுகிறார். பாரதியோ, பெற்ற தாய், நற்றவ வானினும் நனி சிறந்தவள்' என்று போற்றுகிறார். ஷெல்லிபால் ஈடுபாடு கொண்ட பாரதி, ஷெல்லிதாயன் என்ற புனை பெயரிலும் எழுதினார். 'காற்று வெளியிடைக் கண்ணம்மா' 'தீர்த்தக் கரையினிலே'. 'பாயும் ஒளி நீ எனக்கு' என்று தொடங்கும் பாடல்களில் ஷெல்லியின் கவிதைத் தாக்கம் உள்ளது.

ஆங்கில மொழியிலிருந்து சில மரபுத் தொடர்கள் தமிழாகி விட்டன.

எ.டு

Behind the Curtain - திரை மறைவில்
Nip in the bud - முளையில் கிள்ளுதல்
Shoulder to shoulder - தோளோடு தோள்
Build Castles in the air - ஆங்காயக் கோட்டை கட்டுதல்
to take a decision - முடிவெடுத்தல்

சில ஆங்கிலப் பழமொழிகள் தமிழில் பெயர்க்கப்பட்டு, தமிழோடு கலந்து விட்டன.

எ.டு.

Barking dog seldom bite
குரைக்கும் நாய் கடிக்காது
All that glitters is not gold
மின்னுவதெல்லாம் பொன்னல்ல

ஆங்கிலேயர் வரவால், சில புதிய பழமொழிகள் தமிழில் தோன்றியுள்ளன.

1. உடுத்திக் கெட்டான் வெள்ளைக்காரன்
உண்டு கெட்டான் சோனகன்
புதைத்துக் கெட்டான் தமிழன்

2. ஊசியின் காதிலே ஒட்டகம் நுழையுமா?

3. ஒரு குண்டிவே கோட்டை பிடிக்கலாமா?

4. ராங்கி (Rank) மிஞ்சி ரூம் (room) தேடுகிறது
ஆக்கிப் போட ஆள் தேடுகிறது.

**ஒலியன்**

ஆங்கிலத்தில் 'F' என்ற ஒலியன் தமிழில் இல்லை. ஆனால். SOFA, FILM, முதலிய ஆங்கிலச் சொற்களைப் அப்படியே பயன்படுத்த வேண்டிய கட்டத்தில், தமிழில் இடர்ப்பாடு நேருகிறது. அச்சமயத்தில், ஆய்த எழுத்தை மெய்யின் முன் அமைத்து சேஃபா, ஃபிலிம் என்றும் சிலர் எழுதி 'F' ஒலியனைக் காட்டுவார்கள்.

**எண்**

தமிழில் பால்பகா அஃறிணைப்பெயர்களுக்குக் "கள்" விகுதி சில இடங்களில் இணைப்பதில்லை.

| | |
|---|---|
| மாடு வந்தது | ஒரு புத்தகம் |
| மாடு வந்தன | பத்துப் புத்தகம் |

ஆனால், ஆங்கில மொழித் தாக்கத்தால் மாடுகள் வந்தன என்றும் பத்துப் புத்தகங்கள் என்றும் எழுதுமுறை தற்போது நடைமுறையில் வந்துள்ளது.

**வினைச் சொற்கள்**

தமிழில் இறப்பு, நிகழ்வு, எதிர் காலம் காட்டும் வினைச் சொற்களே இருந்தன. ஆனால், ஆங்கில மொழியில் உள்ள வினை வகை முறையை ஒட்டித் தமிழில் வினைச் செற்கள் புதிதாகத் தோன்றியுள்ளன.

Present Continuous — நடந்து கொண்டிருக்கிறான்

Past Continuous — நடந்து கொண்டிருந்தான்

Present perfect — முடித்திருக்கிறான்

Past Perfect — முடித்திருந்தான்

தொடரமைப்பு

தமிழில் எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்ற முறையில் சொற்றொடர் அமையும். ஆனால் ஆங்கிலத்தில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்ற முறையில் தொடர் எழுதப்படும். இந்த முறையைப்படித்துப் பழகிவிட்ட காரணத்தினால், வினைச் சொல்லை இறுதியில் போட்டு எழுதும் தமிழ் முறைக்கு மாறாக "அவன் நடந்தான், சென்னையை நோக்கி" என்று சிலர் எழுதுகின்றனர். He walked towards Madras என்ற ஆங்கிலத் தொடரின் அமைப்பு, மொழி பெயர்ப்பதும் படிந்துள்ளதை உணரலாம்² இந்த நடையில் ஒரு புதுவேகம் இருப்பதாகத் தெரிகிறது.

ஆங்கிலத்தில் Simple, Compound, Complex என்ற மூவகைத் தொடர்கள் உள்ளன. இவ்வகைத் தொடர்கள் தமிழிலும் தற்போது எழுதப்பட்டு வருகின்றன.

அவன் ஊருக்குச் சென்றான் — Simple sentence

அவன் ஊருக்குச் சென்று திரும்பினான் — Compound Sentence

ஊருக்குச் சென்ற அவன் திரும்பி வந்தவன் — Complex Sentence

இடை வரும் தொடர்

ஆங்கிலத்தில் இடைவரும் தொடர் (Parenthetical Clause) என்பது உண்டு. அது ஒரு சொற் தொடருக்குள் வரும் மற்றொரு சொற்றொடராகும். இம்முறையைத் தமிழிலும் சிலர் மேற்கொள்கின்றனர்.

# நான்காம் வேற்றுமை

கு. இராமகிருட்டினன்.
பஞ்சாபு பல்கலைக்கழகம், சண்டிகர்

தமிழை வேற்றுமொழி அறிந்த மாணவர்கட்குக் கற்பிக்குங் கால் பல இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. தமிழைத் தமிழறிந்தவர்களுக்குக் கற்பிப்பதைக் காட்டிலும் தமிழறியாதவர்களுக்குக் கற்பிக்கும் பொழுது நான்காம் வேற்றுமையின் சிறப்புப் போதருகிறது. சொற்றொடர் அமைக்கும்பொழுது நான்காம் வேற்றுமை பெரிதும் பயன்படுகிறது. நான்காம் வேற்றுமை கற்பிக்கும் பொழுது அதன் உருபுகள், பெயர்ச்சொற்கள் பாகுபாடு, தொடரமைப்பு, வழக்கு முதலியவற்றில் சில இடர்பாடுகள் ஏற்படுகின்றன. அவ்விடர்பாடுகளையும், அவற்றைக்களையும் சில முறைகளையும் கண்ணுறுவோம்.

நான்காம் வேற்றுமைபற்றித் தமிழிலக்கண நூல்கள் விரிவாக வகுத்தும் தொகுத்தும் எடுத்துரைக்கின்றன. தொல்காபியம், நன்னூல் முதலிய இலக்கண நூல்கள் நான்காம் வேற்றுமையைபற்றி எடுத்துரைக்க, இவற்றின் உரையாசிரியர்களும் விளக்கியுரைக்கிறார்கள். நான்காம் வேற்றுமை அதன் அமைப்பு, பயன் முதலியனபற்றித் தொல்காப்பியம் தன் 74, 90, 95, 102, 104, 105, 106 (தொல். சொல். இளம்பூரணம்) நூற்பாக்களில்[1] எடுத்துரைக்கிறது. நன்னூலும் அவற்றைப்பற்றித் தன் 247, 298, 317, 318, 319 (நன். காண்டிகை உரை) நூற்பாக்களில்[2] புலப்படுத்துகிறது.

தொல்காப்பியமும் நன்னூலும் ‘கு’ என்பது நான்காம் வேற்றுமை உருபு எனப் பகர்கின்றன. ஆனால் வேற்றுமைப் பெயர்களுக்கும் வேற்றுமை உருபிற்கு மிடையிற் சில சாரியைகள்

(அ, உ) வரலாம். தமிழைத் தமிழறியாதவர்கட்குக் கற்பிக்கும் காலை நான்காம் வேற்றுமை உருபாகக் 'கு' என்பதை விடுத்து, 'க்கு', 'அக்கு', 'உக்கு' என மூவுருபாகக் கொள்ளின் எளிமையாகக் கற்பிக்கலாம். இம் மூன்றும் வெவ்வேறு பெயர்களுடன் புணரும்.

முதலில் பெயர்ச் சொற்களையும் (nouns) வேற்றுமை உருபேற்கும் சொற்களையும் (inflexional bases) வேறுபடுத்திக் காட்ட வேண்டும். எல்லாப் பெயர்ச்சொற்களும் இயல்பான நிலையில் வேற்றுமை உருபு ஏலா. சில இயல்பான நிலையில் வேற்றுமை உருபு ஏற்கும் (எடுத்துக்காட்டு: அவன், இவள், நூல்) சில வடிவு திரிந்து வேற்றுமை உருபு ஏற்கும் (எ. டு: நான், நாடு, மரம், ஆறு). எனவே வேற்றுமை உருபு ஏற்கும் சொற்கள் இயல்பான பெயர்ச் சொற்களாகவோ, உருத்திரிந்த சொற்களாகவோ இருக்கும். வேற்றுமை உருபுகள் உருபு ஏற்கும் சொற்களோடுதான் புணரும் என்று தெளிவு படுத்த வேண்டும். இவ்வகைச் சொற்களை வகைப்படுத்திக் காட்ட வேண்டும். இவை எல்லா வேற்றுமைகளுக்கும் பொருந்தும்.

'இ', 'ஈ', அல்லது 'ஐ' என்னும் உயிரெழுத்தோடோ, 'ய்' என்னும் மெய்யெழுத்தோடோ ஒரு வேற்றுமை உருபேற்கும் சொல் முடியுமாயின் அதனோடு 'க்கு' நான்காம் வேற்றுமை உருபாகப் புணரும்.

என், எம், நம், உன், நின், உம், நும், தன், தம் முதலிய சொற்களுக்கு 'அக்கு' என்பது நான்காம் வேற்றுமை உருபென்று கற்பித்தால், மாணவர்கள் எளிதாகப் புரிந்து கொள்வர். நன்னூல் தன் நூற்பா 247 இல் மேற்கூறிய சொற்களோடு புணரும்பொழுது அகரச் சாரியை இடையில் வரும் என்று கூறுவதையும் நோக்க வேண்டும். மேலும் அகரச்சாரியையோடு என், எம் முதலியவற்றைப் புணர்க்கும் பொழுது ன், ம் முதலிய இறுதி ஒற்று இரட்டிக்காது என்று தெளிவுபடுத்துகிறது. தன் நூற்பா 205 இல் 'தனிக்குறின் முன்னொற் றுயிர்வரின் இரட்டும்' என்று கூறியதற்கு விலக்காக இதனைத் தெளிவு படுத்துவதை உணர்ந்து மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும்.

எனவே, அந்த அகரச் சாரியையோடு சேர்த்து நான்காம் வேற்றுமை உருபாக 'அக்கு' என்பதனை ஆக்கிக் கொள்வது நன்று.

பிற (9) உயிரெழுத்துகளுள் அல்லது பிற மெய்யெழுத்துகளுள் ஒன்றால் முடியும் வேற்றுமை உருபேற்கும் சொல் ''உக்கு' என்னும் நான்காம் வேற்றுமை உருபு பெறும் எனலாம். இங்கேயும் 'உ' என்பது சாரியையே உகரச் சாரியையோடு சேர்ந்து நான்காம் வேற்றுமை உருபு 'உக்கு' என்றாகிறது. ஆயின் இங்குச் சில விதிவிலக்குகள் உண்டு. ரகரவொற்றில் முடியும் சொற்கள் 'க்கு' ம் 'உக்கு' ம் பெறும். எ. டு:- அவர் - அவர்க்கு, அவருக்கு; ஊர்-ஊருக்கு, அது, இது, எது எனுஞ் சொற்களும் விதி விலக்காக அதற்கு, இதற்கு, எதற்கு என்றாகும் மேற்கூறிய மூவுருபுகளில் ஒன்றையும் கொள்ளவில்லை. அதன் + கு = அதற்கு என்றாகிறது எனலாம். ஆனால் பேச்சுமொழியில் அது என்பது அதுக்கு என்றோ அதனுக்கு என்றோ ஆவதையும் ஒப்பு நோக்கலாம்.

'கு' என்பது நான்காம் வேற்றுமை உருபு என்றாலும், 'இடம்' என்பது தற்காலத்தில் இலக்கிய வழக்கிலும், 'கிட்ட', 'கிட்டே' என்பன பேச்சு வழக்கிலும் பயின்று வருவதைக் காணலாம். 'என்னிடம் வா' என்பது இலக்கிய வழக்கிலும் 'என்கிட்ட வா', 'என்கிட்டே வா' என்பன பேச்சு வழக்கிலும் ஒரு பொருளில் வழங்குவதைக் காணலாம். நான்காம் வேற்றுமை உருபாக இடம், கிட்ட. கிட்டே என்பன இருப்பதைக் காணலாம். உருபேற்கும் சொற்களோடு 'இடம்' சேரும்பொழுது வினையிலும் பெயரிலும் சில தகுதிகள் நோக்க வேண்டும். என் வீட்டுக்கு வா' என்பதனை 'என் வீட்டிடம் வா' என்றோ 'என்னிடம் வா' என்பதனை 'எனக்கு வா' என்றோ சொல்வதில்லை.

நான்காம் வேற்றுமை உருபும் சில சமயங்களில் தொக்கி விடுகின்றன. பள்ளிக்கூடம் போ, இல்லஞ் சென்றான், புலியனூர் வந்தான் என்பனவற்றில் நான்காம் வேற்றுமை உருபுகள் தொக்கி நிற்கின்றன. ஆங்கிலத்தில் 'கு' என்பதற்கு இணையான

'10' என்பது இவற்றை மொழிபெயர்க்கும்பொழுது தொக்கி நிற்பதில்லை என்பதனையும் உள்ளுதல் வேண்டும். இவ்வாறு நான்காம் வேற்றுமை உருபு தொக்கி நிற்பது சில இடங்களில் மட்டுந்தான்.

மேலும் மெய்யீற்றுப் புணர்ச்சி விதிகளின்படி இலக்கியங்களில் 'கு' மட்டும் வருவதையும் பிற்பாடு விளக்கலாம். ஆசிரியன்+கு என்பது ஆசிரியற்கு என்றும், அவள்+கு என்பது அவட்கு என்றும், கல்+கு என்பது கற்கு என்றும் ஆவதை எடுத்துக் காட்டலாம்.

செய்யுளில் நான்காம் வேற்றுமை உருபு 'அ' வாக உருவெடுக்கிறது (தொல். நூற்பா 104, 105). ஆசிரியர்க்கு எனற்பாலது ஆசிரியர்க்க எனவரும்.

நான்காம் வேற்றுமை உருபுக்குப் பின் வல்லொற்று மிகும் என்பதைப் பலவாறு எடுத்துக் காட்டிப் புலப்படுத்த வேண்டும்.

வேறு சில வேற்றுமை உருபுகள் வந்தாலும், கொள்ளும் பொருளால் அத்தொடர்கள் நான்காம் வேற்றுமைப் பொருளிலேயே வந்தவை என்கிறார் தொல்காப்பியர் (நூற்பா 106-இளம்). 'இவளைக் கொள்ளும் இவ்வணி என்புழி இவட்குக் கொள்ளும் இவ்வணி என்றாக' என்று இளம்பூரணர் விரித்துரைக்கிறார். அதுபோல் நான்கனுருபில் வந்தாலும் பிற பொருள்கொள்ளும் என்கிறார் (102) உரையாசிரியர்.

தொடரமைக்கும் பொழுது நான்காம் வேற்றுமை பத்து வகையான பொருள்களில் வருமென்று (நூற்பா 74) தெரிவிக்கிறார். நன்னூல் ஏழு வகைப் பொருள்களில் வருமென்று (நூற்பா 298) தெரிவிக்கிறது. உரையாசிரியர்கள் மேலுஞ் சில பொருள்களைத் தெரிவிக்கின்றனர்.

தமிழறியாதார் தமிழ் கற்கும்பொழுது நான்காம் வேற்றுமை உருபைப் பொருத்தமான இடத்தில் பயன்படுத்தத் தடுமாறுவர். அவர்களுக்கு அவை வரும் இடங்களைப் பலமுறை வகுத்தும் தொகுத்தும் சுட்டிக் காட்ட வேண்டும்.

பெயர், வினை, வினையெச்சம் (வினையடை), பெயரெச்சம் பின் வரும் பொழுது வேற்றுமை உருபேற்கும் சொற்களில் நான்காம் வேற்றுமை உருபைப் பயன்படுத்தலாம். எ.டு:- அழகனுக்கு மகனா அல்லது நண்பன்; அவனுக்கு இருக்கிறது; அறைக்கு மேலே அல்லது கீழே; இந்த வீட்டுக்கு அடுத்த வீடு.

ஆங்கிலம் வழியாகத் தமிழ் கற்பிக்கும்பொழுது இன்னுஞ் சில தொடர் இடர்ப்பாடுகள் வருகின்றன. எனக்கு வீடு இருக்கிறது; 'எனக்குத் தம்பி இல்லை' முதலிய தொடர்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் பொழுது மாணவர்கட்கு ஐயம் எழும். ஏனெனில் ஆங்கிலத்தில் 'I have a house' 'I have no younger brother' என்பனவற்றில் 'to' இல்லை. ஆங்கிலத்தின் 'There is a house to me', 'There is no younger brother to me' என்பனவற்றைப் போலத் தமிழ்த் தொடர்கள் இருக்கின்றன என்று தெளிவுபடுத்த வேண்டும். Have, has, have not அல்லது has not என்பனவற்றைத் தமிழில் மொழி பெயர்க்கும் பொழுது நான்காம் வேற்றுமை உருபு 'கு' வையும் 'இரு' அல்லது 'இல்லை' எனும் வினையையும் பயன்படுத்த வேண்டும் என்று தெளிவுறுத்த வேண்டும்.

அதே போல, 'I hant', 'I do not want', 'I know', 'I do not not know' என்பனவற்றை மொழிபெயர்க்கும்பொழுது நான்காம் வேற்றுமை உருபைப் பயன் படுத்த வேண்டும். எ.டு:- எனக்கு வேண்டும் (I want).

சில ஆங்கிலத் தொடர்களைத் தமிழில் மொழி பெயர்க்கும் பொழுது மரபுத் தொடர்கள் போல் மொழி பெயர்க்க வேண்டும். I hear, I do not hear, I can see, I can not see, I receive letters, I do not receive letters என்பனவற்றைத் தமிழில் மொழிபெயர்க்கும் பொழுது நான்காம் வேற்றுமை வேண்டும். அவை, 'எனக்குக் (காது) கேட்கிறது, எனக்குக் காது கேளாது, எனக்குக் கண் தெரியும், எனக்குக் கண் தெரியாது, எனக்கு மடல் கவருகிறது, ஏனக்குக் கடிதம் வரவில்லை' என்று மொழி பெயர்க்கப்படுகின்றன. இவை தமிழறியாதோர்க்கு இன்றியமையாதவை.

தமிழில் பெயர்ச் சொற்களுக்குப் பின் சில வினையெச்சம் வந்தால் பெயர்ச் சொற்கள் நான்காம் வேற்றுமை உருபு ஏற்கும். உள்ளே, வெளியே, மேலே, கீழே, முன், முன்பு, முன்னாலே, பின், பின்பு, பின்னே, பின்னாலே முதலியவை பெயர்ச் சொற்களுக்குப் பின் வந்தால் அவை அறைக்கு உள்ளே, வெளியே...என்று ஆகும். இந்த வகையாகப் பயன்படுத்து வதைத் தமிழ் கற்போர் கன்குணர வேண்டும்.

சில சமயம் ஆங்கிலத்தில் 'for' என்பது தமிழில் 'கு' எனும் நான்காம் வேற்றுமை உருபாக மொழி பெயர்க்கப்படும். Buy for Rs. 10.00 என்பது பத்து உருபாய்க்கு வாங்கு. என்று மொழி பெயர்க்கப்படுகிறது. அது போலவே 'கு' என்பது சில சமயம் 'of' என்ற பொருளையும் தரும். 'இதற்குப் பொருள்' என்பது 'The meaning of this' 'its meaning' என்று மொழி பெயர்க்கப்படும். அஃது 'அவனுக்கு மகன் நக்கீரன்' (His son is Nakkiran) என்பது போலாகும். இது போலவே ஆவனுக்கு வயது' (His age) என்றாகும்.

தமிழ் அறியாதோர்க்குத் தமிழ் கற்பிக்கும் பொழுது நான்காம் வேற்றுமையின் இன்றியமையாமை நன்கு உணரப் படுகிறது. தமிழர் தமிழைக் கற்கும்பொழுது இதன் சிறப்பு அவ்வளவாகத் தெரியவில்லை. தமிழரல்லாதார்க்குத் தமிழ் கற்பிக்கும்பொழுது இதனை உள்ளத்தில் கொண்டு பல்வகை எடுத்துக் காட்டுகள் தந்து மாணவர்களுக்கு நான்காம் வேற்று மையைக் கற்பிக்க வேண்டும். தமிழாசிரியர்கள், தமிழரல்லாத மாணவர்கள் இதன் சிறப்பை அறிந்து விழிப்புடன் பயன் படுத்துவது இதன் சிறப்பாகும்.

*Reference Books:-*


1. தொல் காப்பியம், சொல்லதிகாரம், இளம் பூரணம், கழக வெளியீடு, 1963.
2. ,, ,, சேனாவரையருரை, ,, ,, 1952
3. நன்னூல் காண்டிகையுரை ஆறுமுக நாவலர் பதிப்பு, 1953
4. ,, விருத்தியுரை (சங்கர நமச்சிவாயர் விருத்தியுரை) கழகம், 1968

## சார்பெழுத்துகள்

வி. இராமலிங்கம்,
தாகூர் கலைக் கல்லூரி,
புதுச்சேரி.

தமிழ் இலக்கண நூல்களில் தொன்மை வாய்ந்தது தொல்காப்பியம். அது எழுத்து, சொல், பொருள் என்ற முப்பெரும் பிரிவுகளைக் கொண்ட பனுவலாகும். 'இந்நூலில் உள்ளசூத்திரங்களை 1595 என இளம்பூரணரும் 1611 என நச்சரும் வகுத்து உரை எழுதியுள்ளனர்'[1] தொல்காப்பியத்தைப் பின்பற்றிப் பல இலக்கண நூல்கள் எழுந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது பவனந்தி முனிவரின் நன்னூலாகும். இவ்விரு இலக்கண நூல்களைக் கொண்டு சார்பெழுத்து பற்றி இங்கு நோக்குவோம்.

### எழுத்து: முதல்-சார்பு

'மொழிக்கு முதல் காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலி எழுத்து,[2] எனக் கூறுகிறது நன்னூல். அவ்வெழுத்து முதலெழுத்து, சார்பெழுத்து என இருவகைப்படும்.

'எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன அகர முதல் னகர ஈறாக உள்ள முப்பதே'[3] என்று கூறிய தொல்காப்பியர் சார்ந்து வருதலைத் தமக்கு இலக்கணமாக உடைய மூன்றைச் சார்பெழுத்தெனச் சாற்றுவார்.

---

1. க. வெள்ளைவாரணன்-தமிழ் இலக்கிய வரலாறு-தொல்காப்பியம் பக்.6
2. நன்னூல் நூற்பா-58.
3. தொல்காப்பியம் நூற்பா-1.

இதுவரை வந்த இலக்கண நூல்களில் முதன்முதலில் சார் பெழுத்து என வெளிப்படையாக கூறுவது நன்னூலே. தொல் காப்பியர் சார்பெழுத்து என்று வெளிப்படையாகக் கூறாமல், ''சார்ந்து வரல் மரபின் மூன்றலங்கடையே'' என்ற குறிப்பினால் சார்பெழுத்து மூன்றெனக் கோடிட்டுக் காட்டுவார்.

**பெயர்க்காரணம்:**

'சார்பெழுத்து என்று பின்னவை பெயர் பெற முன்னவற்றின் சிறப்பு நோக்கி அவற்றிற்கு முதலெழுத்து என்று பெயர் வழங்கியிருக்கலாம்'[4] என்பார் டாக்டர். ஆ. வேலுப்பிள்ளை.

**இலக்கணம்:**

'ஒரு மொழியைச் சார்ந்து வரும் இயல்பு இன்றித் தனித்து இயங்கும் இயல்பு தமக்கு இல என்றலின் அவை தம்மையே எடுத்து ஓதிக் காட்டலாகாமையின் '[5]என்பதை பொது இலக் கணமாகக் கூறுகிறார் சிவஞான முனிவர். இதற்கு விளக்கமாக வெள்ளைவாரணர் 'இவற்றியல்பு தனியே வர இயலாது. ஒன்றினைச் சார்ந்து வருதலே என்பது புலனாம். எனவே, தன்னியல்பின் நிற்றல் ஆற்றாதனவாய் மொழியைச் சார்ந்து வரும் இயல்புடைய எழுத்துக்களே சார் பெழுத்துகள்''[6]என்று கூறுவார்.

'முதலெழுத்துக்களைத் தனியே ஒலித்துக் காட்ட முடியும். ஆனால் சார்பெழுத்துக்களை யாதேனும் ஒரு சொல்லில் வைத்துத்தான் ஒலித்துக் காட்ட முடியும். எனவேதான் சார் பெழுத்தின் இலக்கணத்தினை மொழி மரபில் ஆசிரியர் கூறி உள்ளார்,[7] என்று கூறுகிறார் டாக்டர் சோ.ந. கந்தசாமி.

---

4. டாக்டர் ஆ. வேலுப்பிள்ளை-தமிழ் வரலாற்றிலக் கணம். பக்.101
5. சிவஞான முனிவர் உரை-நன்னூல்.
6. க. வெள்ளைவாரணன்-தொல்காப்பியம் நன்னூல் ஒப்பீடு. பக். 31
7. டாக்டர் சோ.ந. கந்தசாமி-தொல்காப்பியத் தெளிவு. பக். 72

ஆனால் 'ஒலியியல் கருத்துப்படி இக்கருத்து ஒப்புக் கொள்ளத் தக்கது அல்ல'[8] என்று கூறி கந்தசாமியின் கருத்தை மறுக்கிறார் டாக்டர் செ. வை. சண்முகம்.

'சார்ந்து வரல் மரபின்'[9] மூன்றலங்கடையே

'சார்ந்துவரின் அல்லது தமக்கியல்பு இல எனத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்'[10] என்ற தொல்

காப்பிய நூற்பாக்களை அடிப்படையாகக் கொண்டு தனித் தொலித்தற்கு ஏற்ற முதலெழுத்து தன்மையில்லாதனவாய் மொழியைச் சார்ந்து தோன்றும் ஒலிகளைச் சார்பெழுத்து என வழங்குதல் தமிழிலக்கண மரபாகும்.

'தாமே தமித்து நிற்கையின் முதலெழுத்தென்றாயின அவையே தம்மோடு தாம் சார்ந்தும் இடஞ் சார்ந்தும் இடமும் பற்றுகோடும் சார்ந்தும் விகாரத்தால் வருதலின் சார்பெழுத் தென்றாயின எனக் கொள்க'[11] எனக் கூறுவார் நன்னூல் உரையாசிரியர்.

'சார்பு என்பதற்குப் பற்றுக்கோடு எனலாம். சார்பெழுத் தெனில் ஒன்றைப் பற்றுக் கோடாகக் கொண்டு வரும் எழுத் தாகும்'[12] தத்துவ நூ லாரும் ஒன்றிலிருந்து தோன்றுவதையே சார்பு(நிதானம்) எனக் கூறுவர்.

**எண்ணிக்கையும் - விரியும்:**

இலக்கண நூலாரிடையே அதிக கருத்து வேறுபாடு உள்ள வற்றில் சார்பெழுத்து முதலிடம் பெறுகிறது.

---

8. டாக்டர் செ.வை. சண்முகம்-எழுத்திலக்கணக் கோட் பாடு. பக். 102
9. தொல்காப்பியம். நூற்பா-1.
10. தொல்காப்பியம். நூற்பா-101.
11. இரா. இளங்குமரன் நன்னூல் எழுத்து.
12. டாக்டர் தி. முருகரத்தினம் -தமிழ் எழுத்தியல் அன்றும் இன்றும்

'சார்ந்து' வரல் மரபின் மூன்று'
'குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன'[13]
என்று தொல்காப்பியர் சார்பெழுத்தை

மூன்றென மொழிவார். ஆனால், பின்னால் வந்த நன்னூலாரோ

உயிர் மெய் ஆய்தம் உயிரளவு ஒற்றளபு
அஃகிய இ.உ. ஐ, ஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத்தாகும்' [14]
என மொழிகின்றார்.

'தொல்காப்பியர் சார்பெழுத்துகள் புள்ளியிட்டு எழுதப்பட்டதாகக் கருதுகிறார். '[15] இக்கருத்தினை ஆழ்ந்து நோக்கும் போது உரையாசிரியர்களுக்கு இடையிலேயே இக்கருத்துக்கு மறுப்புண்டு என்று உணரலாம்.

**உரையாசிரியர்கள் கருத்து:**

தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான நச்சினார்க்கினியர் ஆய்தம் மட்டுமே புள்ளி எழுத்தாக இருந்தது எனக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் பேராசிரியர் மூன்று சார்பெழுத்துகளும் புள்ளியிட்டே எழுதப்பட்டிருக்குமென்று கூறுகின்றார். நன்னூலாரோ எகர ஒகர மெய் தவிர ஏனைய புள்ளி பெறா என்று கூறுகிறார்.

**மாத்திரை:**

தொல்காப்பியர் எழுத்துக்களின் மாத்திரையை வரையறுத்துக் கூறும் போது சார்பெழுத்துகட்கு அரை மாத்திரை என விதித்து நூற்பாவும் அமைத்துள்ளார்.

---

13. தொல்காப்பியம். நூற்பா - 2.
14. நன்னூல். நூற்பா-60.
15. வெ. இசக்கிமுத்து - ஆய்வுக்கோவை (சார்பெழுத்து) பக்.48

'மெய்யின் அளவே அரையென மொழிப'[16]

'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே'[17]

இக்கருத்தினைத் தழுவியே நன்னூலாரும்,

'அரை யொற்று இ,உ,க் குறுக்கம் ஆய்தம்'[18]

என நூற்பா வகுத்துள்ளார். குற்றியலுகரம், குற்றியலிகரம் அரை மாத்திரை அளவுதான்.

ஐகாரக் குறுக்கத்தைக் குறிப்பிட வந்தவர்கள் சில கருத்துக் களைத் தருகின்றனர்.

தொல்காப்பியர் ஐகாரக் குறுக்கத்திற்கு ஒரு மாத்திரை அளவு என்று கூறுகின்றார். இக்கருத்தையே நன்னூல் ஆசிரியர் வழிமொழிகின்றார்.

ஒளகார குறுக்கத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது தொல் காப்பியர் வெளிப்படையாகக் குறிப்பிட்டுப் பேசவில்லை. ஆனால், நன்னூல் ஒரு மாத்திரை எனப் பேசுகிறது.

மகரக் குறுக்கம் தனக்குரிய மாத்திரையில் குறைந்து ஒலிக்கும் என்கிறார் தொல்காப்பியர்.

'அரைஅளபு குறுகல் மகரம் உடைத்தே'[19]

பிறப்பு:

'சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலனெத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றுந்
தத்தஞ் சார்பிற்பிறப் பொடு சிவணி
ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும்'[20]

என்ற நூற்பாவின் மூலம் சார்பெழுத்தின் பிறப்பை உணர்த்து கிறார் தொல்காப்பியர்.

---

16. தொல்காப்பியம். நூற்பா - 11
17. தொல்காப்பியம். நூற்பா - 12
18. நன்னூல். நூற்பா -
19. தொல்காப்பியம் நூற்பா - 13
20. தொல்காப்பியம் - பிறப்பியல் - நூற்பா - 101

சார்பெழுத்துகள் தத்தமக்குச் சார்பாகிய எழுத்துகளது பிறப்பிடத்தே பிறத்தலோடு பொருந்தி அவ்விடத்தே தமக்குரிய இயல்பில் நடக்கும்.

நன்னூலார் சார்பெழுத்தின் பிறப்பை,

> 'ஆய்தக்கு இடம்தலை; அங்கா முயற்சி
> சார்பெழுத்து ஏனவும் தம்முதல் அனைய'[21]

என்று கூறுகின்றார்.

'சார்பெழுத்துகள் எப்போதும் அல்லது ஒரு சில குறிப்பிட்ட எழுத்துகளுடன் இருந்தே வழங்குவன எனப் பொருள்படும். அதாவது அவை இன்றைய மொழியியல் கருத்துப்படி ஒரு குறிப்பிட்ட எழுத்தியல் சூழலிலேயே வழங்கும். உரையாசிரியர்கள் இந்தச் சூழல், இடம், பற்றுக்கோடு, சார்பு ஆகியவற்றால் அமைவது என்பர்'[22]

தற்கால மொழியியலார் சார்பெழுத்துகளைப் பொதுவாக மாற்றொலிகள் என்பர். தொல்காப்பியர் சார்பெழுத்து மூன்றெனக் கூறுகிறார். நன்னூலார் பத்தென மொழிகிறார். நன்னூல் சார்பெழுத்தெனக் கூறிய பத்தைப் பற்றியும் தொல்காப்பியமும் கூறுகிறது. ஆனால், தொல்காப்பியல் மூன்றை மட்டுமே சார்பெழுத்துகளாகக் குறிப்பிடுகிறார். நன்னூல்ார் பத்தெனக் கூறியமைக்குக் காரணம் தொல்காப்பியர் காலத்திற்குப் பின் மாத்திரைக் குறுக்கங்களையும் மாத்திரைப் பெருக்கங்களையும் சார்பெழுத்தாகக் கருதும் மனநிலை எழுந்தது எனலாம்.

---

21. நன்னூல் நூற்பா - 87.
22. டாக்டர் அருச்சன தட்சிணாமூர்த்தி - எழுத்தியல் கட்டுரைகள். பக். 29

# அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்துறைகளில் தமிழ்ப் பயன்பாடு

**கி. கருணாகரன்**

பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர்

இன்றையச் சூழலில் நாம் எங்கும் புதுமை, எதிலும் புதுமை என்பதைப் பார்க்கிறோம். நம் வாழ்க்கையின் பல்வேறு நிலைகளில தற்கால அறிவியல் தொழில் நுட்பங்களின் தாக்கத்தைக் காண்கிறோம். புதிய கருத்துக்கள், எண்ணங்கள், கண்டுபிடிப்புகள் போன்றவைகள் தோன்றும் போது அவை சமுதாயத்தில் பல்வேறு விளைவுக்ளை ஏற்படுத்துகின்றன. இவைகள் எல்லாம் சமுதாயத்தில் ஏற்படும் மாற்றங்களுக்குக் காரணமாகவும் அமைகின்றன. இம்மாற்றங்களின் விளைவாக சமுதாயத்தில் பயன்படுத்தப்படும் மொழியும் பல மாற்றங்களுக்கு உள்ளாகிறது. ஆகவே, சமுதாயத்தில் மாற்றங்களோ அல்லது வளர்ச்சியோ ஏற்படும் பொழுது அவை அச்சமுதாயம் பயன்படுத்தும் மொழியிலும் பிரதிபலிக்கின்றன. எனவே, சமுதாயத்தில் ஏற்படும் புதுமைகள் மொழியில் ஏற்படும் புதுமையாக்கத்திற்கு (language modernisation) வழிவகுக்கின்றன. மற்றொரு வகையில் சொல்வதென்றால் சமுதாயம், நாடு மற்றும் மொழியில் ஏற்படும் புதுமையாக்கங்களுக்கு அறிவியல் தொழில் நுட்பங்கள் முக்கியமான காரணமாக அமைகின்றன எனலாம்.

இக்காலத்தில் மொழியில் பயன்படுத்தப்படும் அறிவியல் மற்றும் தொழில் நுட்பம் என்ற சொல்லே பிறமொழிகளில் அல்லது சமுதாயத்திலிருந்து பெறப்பட்ட ஒன்றாகும். மொழியைப் பயன்படுத்துவோர் பிற மொழிச் சொற்களைக் கடன் வாங்கும் பொழுது பல்வேறு முறைகளைக் கையாளுகின்றனர்.

ஒலி பெயர்ப்பு செய்து தம்முடைய மொழியில் பயன்படுத்துவது அல்லது புதிய சொற்களை உருவாக்குவது போன்றவையாகும். ஆகவே முதல்படியாக தாய்மொழியில் கலைச் சொற்களைப் (technical terms) பல்வேறு அறிவியல் தொழில் நுட்பத்துறைகளில் உருவாக்குவது அவசியமாகிறது. அறிவியல் தொழில் நுட்பத்துறையில் மொழியைப் பயன்படுத்துவதற்கு இது ஆரம்ப நிலையாகக் கருதப்படுகிறது.

அறிவியல் தொழில் நுட்பத்துறையில் பயன்படுத்தப்படும் மொழிவகையானது சமுதாயத்தின் பல்வேறு பிரிவுகளுக்கிடையே அறிவியல் செய்திகளைத் தெளிவாகவும், எளிமையாகவும், ஆற்றல் மிக்க வகையிலும் எடுத்துச் சொல்வதாக இருக்கவேண்டும். மற்றொரு வகையில் சொல்வதென்றால் அவ்வாறு உருவாக்கப்படும் மொழி நடையானது மற்ற மொழிவகைகளில் இருந்து வேறுபட்டதாகவும் இலக்கியங்களிலும் மற்ற துறைகளிலும் பயன்படுத்தும் மொழிவகைகளில் இருந்து வேறுபட்டதாகவும் இருக்க வேண்டும். அறிவியலில் பயன்படுத்தப்படும் மொழியானது சில தனிப்பட்ட பண்புகளைக் (characteristic features) கொண்டிருக்க வேண்டும். அதாவது திரும்பத்திரும்பச் சொல்லுதலைத் தவிர்த்தல், பழைய கூறுகளின் பயன்பாட்டினைத் தவிர்த்தல் போன்றவையாகும். இவ்வாறு அமையாவிட்டால் மொழியானது சமுதாயத்தில் அதன் முக்கியத்துவத்தை இழந்து தற்காலச் செய்திப்பரிமாற்றத்திற்குப் பயனில்லாது போய்விடும் சூழல் ஏற்பட்டுவிடும் ஆகவே, மொழிப்பயன்பாட்டில் ஒரே சீரான மொழிவழக்குகள் பயன்படுத்துவதற்கு வகை செய்யும் தரப்படுத்தல் (standardisation) என்ற கொள்கை பயன்படுத்தப்படுகிறது. மொழியில் உள்ள சில கூறுகளைக் கொண்டு அறிவியல் தொழில் நுட்பங்களைத் தரப்படுத்த முடியும். அறிவியல் துறைக்குத் தமிழை ஈடுபடுத்தும் செயல்படுத்தும் பொழுது கலைச்சொற்களை உருவாக்குதல் என்பது முக்கியமான பணியாகக் கருதப்பட்டு வருகிறது.

அறிவியல் துறைக்கேற்ற வகையில் தமிழை வளப்படுத்தும் போது தேவையான கலைச்சொற்களை உருவாக்குவது முக்கியமான பணி என்றாலும் கருத்துக்களைத் தெளிவாகவும் கோர்வை

யாகவும் எடுத்துச் சொல்லும் மொழிக்கட்டமைப்பு அல்லது உரைக் கோவையே (discourse) மிகவும் இன்றியமையாததாகக் கருதப் படுகிறது. இத்தகையக் கட்டமைப்பு, கருத்துக்களை வெளிப் படுத்துவதற்கு மிகவும் தேவையானதாகும். தேவையான கலைச் சொற்களைக் கையாண்டு அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையிலும் எடுத்தாளும் வகையிலும் மொழிய மைப்பைச் சீர்படுத்துவதே இத்தகைய கட்டமைப்பின் பணி யாகும். இதுவொருவகையில் மொழியில் பயன்படுத்தப்படும் பல்வேறு வாக்கியங்களின் நிலைபேறாக்கமே எனலாம். இது போன்ற கட்டமைப்பில் பொருள் மயக்கம் (ambiguity in meaning) ஏற்படாத வகையில் பார்த்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் கட்டமைப்பில் ஏற்படும் பொருள் குழப்பம் கருத்துக் களைத் தவறாக புரிந்து கொள்ள வழி வகுத்துவிடும்.

இன்று கல்வி நிறுவனங்களில் பயன்படுத்தப்பட்டுவரும் அறிவியல் புத்தகங்களை மதிப்பீடு செய்து பார்க்கும் போது அவற்றில் இத்தகைய பொருட்குழப்பம், நீண்ட வாக்கிய அமைப்பு, மிகப் பழைய சொற்களின் பயன்பாடு ஆகியவை பரவலாக இடம்பெற்று இருப்பதைக் காணமுடிகிறது. இத் தகைய நிலை அறிவியல் கருத்துக்களைப் புரிந்து கொள்வதற்குத் தடையாக உள்ளது. அறிவியல் உரைக்கோவையில் (scientific discourse) மற்றொரு முக்கியப் பகுதியாகக் கருதப்படுவது அதில் ஈடுபடுத்தப்படும் கலைச்சொற்கள் மற்றும் வேறுபட்ட அமைப் புக்களுக்கிடையே உள்ள கருத்துக்களின் படிநிலை அமைப் பாகும் (grading). சான்றாக, பருப்பொருள் என்ற கருத்தை, அச்சொல்லைப் பயன்படுத்துவோரின் தரம் மற்றும் கல்வி நிலை போன்றவற்றிற்கிணங்க பல வகைகளில் விளக்கிச் சொல்ல முடியும். இக்கருத்தை விளக்குவதற்கு ஆறாம் வகுப்பு மாண வனுக்குப் பின்வரும் வகையில் சொல்வது மிகவும் பொருத்த முடையதாக அமையும்.

**பருப்பொருள் என்றால் என்ன?**

''ஓர் இடத்தை அடைத்துக் கொள்ளும், அழுத்தத்திற்கு உட்படும் நுட்பமான துளைகளை உடைய, விசைக்கு ஓரளவு

தடை ஏற்படுத்தும். நிலைமைத் தன்மையுடைய எடையுள்ள பொருட்கள் அனைத்தும் பருப்பொருட்கள் எனப்படும்.''

இதே கருத்தை விளக்க மேனிலைக் கல்வி கற்போர்க்கும் பின்வரும் வகையில் விளக்கப்படுகிறது:

''பருப்பொருள் எனப்படுவது குறிப்பிட்ட இடத்தை அடைத்துக்கொண்டு நமது உணர்வுகளுக்குத் தொடர்ச்சியாக கட்டுப்படுகிற ஒன்றைக் குறிக்கும். பருப்பொருளில் ஒரு வரம்பிற்குட்பட்ட பகுதியைப் பொருள் எனக் கூறுகிறோம். ஒரு பொருளின் நிறை என்பது அதில் உள்ள பருப்பொருளின் அளவைக் குறிக்கும். ஒரு சிறு பொருளின், அதன் அண்டைப்பகுதிகளின் இடைத்தூரம் புறக்கணிக்கத்தக்க அளவிற்குச் சிறியதாக இருந்தாலும் குறிப்பிட்ட நிறையை உடையது எனக் கொள்ளலாம். எந்தவொரு தருணத்திலும் இத்தகைய நுகளின் நிலையை ஒரு புள்ளியால் குறிக்கலாம். ஆகவே பொருள் என்பது இவ்வகையில் வரையறுக்கப்பட்ட பல நுகள்களைக் கொண்டதாகக் கருதப்படும்.''

### அறிவியல் பாடங்களைத் தயாரித்தல்

இயற்பியல், வேதியில் உயிரியல், பூமியின் அமைப்பியல், வானவியல் போன்ற அறிவியல் பாடங்கள் சேர்ந்த கலவைதான் பொது அறிவியல் என்பதாகும். உயிர் அறிவியல் என்பது இயற்கையுடன் தொடர்புடையது. அறிவியல் நுறைப் பாட வளர்ச்சிக்கு உயிர் அறிவியல் துறையில் ஒரு பொதுவான விதி தேவைப்படுகிறது. இன்று மொழியியலில் கூட அனைவரும், ஒத்துக் கொள்ளக்கூடிய பொதுவான விதிகளைக் கொண்ட எழுத்துமுறை ஒற்படுத்தப்பட்டு வருகிறது. உயர் கல்வியில் பயன்படுத்தப்படும் அறிவியல் பாடப் புத்தகங்களில் உரைநடை முறையைவிட, கேள்வி-பதில் முறையே அதிக அளவில் உள்ளது. ஆகவே, இது போன்ற முறை அறிவு வளர்ச்சியைப் பெருக்க உதவும் வகையில் அமைந்து வருகிறது.

### உரைநடையும் செயற்பாட்டு உத்திகளும்

உயிர் அறிவியலில் பல்வேறு சொற்களிடையே காணப்படும் ஒற்றுமை, விளக்கங்கள், எடுத்துக்காட்டு செயற்பாடு மற்றும்

அதன் தோற்றம், காலம் போன்றவற்றிற்கு இணையான சொற்கள் போன்றவற்றைத் தரப்படுத்தப்பட்ட சொற்கோவைகளில் இருந்தே பயன்படுத்தமுடியும்.

பின்வரும் விளக்கங்களிலிருந்து சில உண்மைகளை நாம் அறிந்து கொள்ள முடியும்:

1. அறிவியல் என்பது ஒருகுறிப்பிட்ட பிரிவிற்குச் செய்திகளை அறிவிக்கிறது.

2. அவ்வாறு செய்திகளைச் சொல்லும் போது அங்கு சில அளவுகோல்கள், பயன்படுத்தப்படும் பிரிவினரிடையே காணப்படுகிறது,

எடுத்துக்காட்டாக, அறிவியலைப் பல்வேறு கல்வி நிலைகளில் உள்ளோர்க்குக் கற்பிக்கும் போது செய்திகளைச் சொல்லும் முறையில் வேறுபாடு காணப்படுகிறது (கருத்துக்கள், கண்டுபிடிப்புக்கள், உருவாக்கங்கள் போன்றவற்றிற்கு விளக்கம் கொடுக்கும் போது). குறிப்பாக, குறைந்த அளவு கல்வி கற்றோர் கடினமின்றி புரிந்துகொள்வதற்கு இம்முறை உதவுகிறது. இதே போன்றநிலை வாய்மொழி மூலங்களாகிய அறிவிப்புக்கள் வானொலி, திரைப்படம், தொலைக்காட்சி போன்ற வற்றிலும் வளர்ச்சியடைந்துள்ளது. இதுபோன்ற முறையால் அறிவியல் கருத்துக்கள் ஆற்றல் மிக்க வகையில் சமுதாயத்தில் உள்ள பெரும்பாலான மக்களிடம் சென்று, அவர்கள் பயனடைய வழிவகுக்கிறது. இதனால், பரவல் செய்தித் தொடர்புச் சாதனங்களின் வாயிலாக சமுதாயத்தில் உள்ள மக்கள் அனைவருக்கும் அறிவியல் மற்றும் தொழில் நுட்பக்கல்வி அறிவு கிடைக்கிறது.

மொழிப்புதுமையாக்கம் (language modernization) என்ற தலைப்பின்கீழ் இருவிதமான செயல்முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அவையாவன: 1. எளிமையாக்கம் (simplification), 2. விரிவாக்கம் (elaboration). இவ்விருவகையான செயல் முறைகளும் அறிவியல் கருத்தைச் சமுதாயத்தில் உள்ள இருவேறு

பிரிவுகளுக்கிடையே சமுதாய மொழியில் சூழலில் விளக்கப் பயன்படுகிறது. எனவே, ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்குச் சுருக்கமாகவும் எளிமையாகவும் விளங்குவது அவசியமாகிறது. குறைந்த அளவே படித்த மற்றொரு பிரிவினருக்கும் விரிவாகச் சொல்வதும், அறிவியல் தொடர்பான கருத்துக்களைப் புதுமையாக்கம் செய்வதும் இக்கால இந்திய மொழிகளில் மிகவும் பயனுள்ளதாக அமையும்.

## மொழிபெயர்ப்பும் அறிவியல் மொழியும்

அறிவியல் பாடநூல்களைத் தயாரிப்பதில் மிகவும் கருத்தூன்றிக் கவனிக்க வேண்டிய மற்றொன்று மொழிபெயர்ப்பாகும். அறிவியல் பாட நூல்களை மொழிபெயர்ப்பது மிகவும் கவனமாக மேற்கொள்ளப்படல் வேண்டும். மூலநூலில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்கள் யாவற்றையும் தவறாமல் மாற்றலும் மலும் குறிக்கோள் மொழியில் சொல்லுதல் வேண்டும். அறிவியல் நூல்களை மொழிபெயர்க்கும்போது பல குறிப்புக்களை நாம் கருத்தில் கொள்ளல்வேண்டும். ஒலியமைப்பு மிகவும் துல்லியமானதாக இருத்தல் வேண்டும். குறிக்கோள் மொழியில் பயன்படுத்தப்படும் சொற்கள் மூல மொழிச்சொற்கள் ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கனவாக இருத்தல் வேண்டும். மேலும் நூல் யாருக்கென்று தயாரிக்கப்படுகிறதோ அவர்களால் அச்சொற்கள் எளிதில் புரிந்து கொள்ளத்தக்கனவாகவும், பின்னர் அச்சொற்களை அவர்கள் தம் மொழிப்பயன்பாட்டில் பயன்படுத்தத் தக்கனவாகவும் இருத்தல் வேண்டும்.

சொற்றொடர்களின் அமைப்புமுறை செய்திப் பரிமாற்றத்தைத் தூண்டத்தக்கதாக இருத்தலோடு உரைக்கோவையானது ஓர் ஒழுங்கான அமைப்பையும் பெற்றிருத்தல் வேண்டும்.

மொழிபெயர்ப்பில் மூலமொழியின் ஒலிகளைக் குறிக்கோள் மொழிக்கு மாற்றுவதில் சில சிக்கல்கள் எழக்கூடும். ஒரு மொழியிலிருந்து பிறிதொரு மொழிக்கு அறிவியற் கருத்துக்களை மொழிபெயர்க்கும் பொழுது பல கொள்கைகளையும் கருதுகோள்களையும் நாம் மொழி பெயர்க்கிறோம்.

# 'Be Going To'

A, Kamatchi
University of Kerala,
Kariavattom.

Palmer (1979:120-6) Specifies that in English, BE GOING TO is a better canditate for the marker of 'the future tense; but even this is not simply a marker of the future, but rather indicates a progression from the present to the future. Though the structure with the form 'pookiR'- "be going to" would be a non - factual due to the involvement of futurity. it is obvious that the event defined by the sentence could be definite.

Pure futurity:

Sentence (1), in fact, suggests that it is definite that the person referred to by the pronoun 'naan' "I" will go to New Delhi tomorrow.

(1) naaLe naan Tellikku pookapookiReen

a n going to New Delhi tomorrow)

As the event described by the sentence will definitely take place at the time denoted by the temporal expression involved in the sentence, sentence (1) asserts the pure futurity, as stated by palmer (1976:163) that the BE GOING forms are in some sense the 'purest' future forms of English; they simply predict that an action will take place.

Apart, the form 'pookiR -' in sentence (2) describes as
(2) naan naaLe veelaye to TańkapookiReen

(I am going to start the work tomorow)

the speaker's utterance confirms that the activity which he is going to do will start tomorrow.

Aspect 'poo' versus 'pookiR-' type:

As far as Tamil is concerned, when the construction with the form 'poo' is involved in a sentence, one can actually not determines whether it belongs to BE GOING TO type or the aspect involvement, without reference to the context. For instance, the sentence with the aspect means that the speaker and hearer of the sentence are going to face the event which will, they earlier expected, not take place' Thus, irrespective of the subjects involved in (3) and (4) the difference between them is as follows:

(3) ate naan vaańka pookiReen
(I am going to buy it)

(4) ate avan vaańka pookiRaan
(He tries to buy it)

On one interpretation, in (3), which involves the BE GOING To type, the assertion of the speaker that he will buy it is realized from the sentence, but then, in (4), besides the sense that it is sure the person specified by the subject will buy it, the notion of unexpectedness - the event denoted by the sentence is believed (by the speaker and the heared) not to take place - is also obtained from the sentence. Here, though they distinguish each other, by using the different subjects of the sentence, the subject only does not coutrol the distinction discussed above. In other words, (3) itself may ambigously provide both the meanings, as earlier explained,

based on the context it occurs. It is assumed that the aspect 'poo' involvement - sentence describes as the speaker, and even the addressee, remain unsatisfied over the event (defined by the sentence) which some one is going to do. In this case. if the subject were first person pronoun, the description is different. That is, in (3), unlike the interpretation mentioned above, the speaker feels happy in doing the activity interpreted by the sentence and however, this activity seems to make some other person rather than the speaker or the hearer, unsatisfied.

**Happy News:**

The sentence with the form 'pookiR-' "be going to" may, in some cases, assert the happiest information for the speaker of the sentence, Take, for example, (5), which involves the form 'pookiR-' ; the action

> (S) naan cinimaavukku pookapookiReen
> (I am going to cinema)

the speaker will do in future with respect to the speech time is the happiest action for the speaker and therefore, he intuittively wants to inform to others. Such a notion could be otherwise called 'hot news' (at least for the speaker). Though such a type of sentences nails down the futurity, the form, future, in general, is not employed here.

Someimes, the form 'pookiR-' can refer to 'near future', even if the sentence has no other temporal experession. In this regard, it is to be recalled that no sentence which involves the simple future form denotes the different kinds of futurity - nearness or remoteness. For instance,

> (b) avan muTikkappooRaan
> (He is going to finish (it))

sentence (b) means the notion of near future rather than of remote future.

The notion of volition is also expressed by the sentence with the form 'pookiR-' Thus, it is observed that the speaker of (7) is willing to do the activity the sentence describes.

(7) naan reNTu kutire vaaṅkapooReen
(I am going to buy two horses)

In addition, for that purpose, he tries to consult with the addressee of the sentence. In other words, from the addressee, the speaker wants to get some suggestions with regard to purchasing the horses. Here, it is to be remembered that the speaker may feel as the consultation with the hearer of the sentence could lead to the speaker's satisfaction regarding his future activity mentioned in the sentence.

Future use:

The form 'pookiR-' is also used to refer to the future use (for the speaker or the hearer or both) of something mentioned by the sentence. Here the future use does not mean a thing with respect to the speech time but with respect to the event time, according to sentence (7). Thus, for example, as far as (7) is concerned, the two horses the speaker is going to buy will be used for his purpose in future with respect to the event time of buying the horses, described in the sentence.

## Bibliography

1. KAMATCHI, A. (1984) "TIME, TENSE AND ASPECT IN TAMIL", Unpublished M. Phil. Dissertation, University of Kerala, Trivandram.

2. PALMER, F.R. (1976) "THE ENGLISH VERB" Longman: London.

3. ,, (1979) "MODALITY AND THE ENGLISH MODALS" Longman: London.

4. ZANDVOORT, R.W. (1975) "A HANDBOOK OF ENGLISH GRAMMAR" (Seventh Edition) Longman . London.

# பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியங்களில் மொழியுணர்வு

ப. கிருஷ்ணன்.
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை

தொல்காப்பியர் காலத்திலிருந்து இக்காலம் வரை தமிழ்ப் புலவர்களை மொழியுணர்வு பிணித்திருக்கிறது. அக நிலையிலும் புற நிலையிலும் (Subjective and Objective), நேர் நிலையிலும் எதிர் நிலையிலும் (Positive and Negative) இவ்வுணர்வு புலவர் களைச் செயல்பட வைத்திருக்கிறது. புதிய பண்பாடுகளின் கலப்பு, புறச் சமயங்களின் செல்வாக்கு, ஏதிலார் படையெடுப்பு போன்றவற்றால், தமிழகம் அலைக்கழிக்கப்பட்டிருக்கிறது. இருப்பினும் தமிழகத்தின் வரலாற்றுச் சங்கிலி தெறித்து விடாமல் வலுவுள்ளதாக வைத்தது மொழியேயாகும். கால வெளி கடந்து தமிழர்களை ஒரு தனித் தேசிய இனமாகக் (Nation) உலகுக்குக் காட்டி நிற்பதும் மொழியேயாகும். ஆகவே மொழியும் மொழியுணர்வும் தமிழர் வாழ்வின் உள்ளியக்கமாக காலந்தோறும் இயங்கி வந்திருக்கிறது.

தமிழக வரலாற்றில் மற்ற எக்காலத்தையும் விட சமய எழுச்சிக் காலத்தில் (கி.பி. 700-900) மொழியுணர்வு வீறு கொண்டதாக இருந்தது. புறச் சமயங்களை வெல்வதற்குரிய எறிபடையாகச் சைவ வைணவக் குரவர்கள் மொழியுணர்வைப் பயன்படுத்தினர். இக்காலத்துக்குப் பின்னர் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை மொழியுணர்வு இலக்கிய மரபையும் வளத் தையும் போற்றும் உணர்வாகவே விளங்கியது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இவ்வுணர்வு புத்தெழுச்சியும் புதுவேகமும்

பெற்றது. ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய அயல் மொழிகளின் ஆதிக்கம் தமிழுணர்வு வீறுகொள்வதற்குப் பின்புலமாய் அமைந்தது. தமிழின் பழைமை, சிறப்பு ஆகியவற்றைப் புலவர் வியந்து கூறியதோடு தாய் மொழிவழிக் கல்வியையும் இந்நூற்றாண்டில் வற்புறுத்தத் தொடங்கினர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழுணர்வைப் புதிய கோணங்களில் பார்த்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் நால்வர். 1. இராமலிங்க அடிகள் (1823-1874), 2. தண்டபாணி சுவாமிகள் (1838-1898), வேதநாயகம் பிள்ளை (1826-1889), 4. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை (1855-1897) ஆகிய நால்வரில் முன்னவர் இருவரும் சமயப் பின்னணியிலும் பின்னவர் இருவரும் சமுதாயப் பின்னணியிலும் தமிழுணர்வை வளர்த்தனர்.

### இராமலிங்க அடிகள் (1823-1874)

சிதம்பரத்துக்கு அருகிலுள்ள மருதூரில் பிறந்த இராமலிங்க அடிகள் தமிழிலும் வடமொழியிலும் வல்லவராய் விளங்கினார். அதனால் இவர் தமிழின் தகைமை பற்றியும், தனிச்சிறப்பு பற்றியும் கூறுவது மேலோட்டமான உணர்ச்சி பூர்வமாய் அமையாமல் ஆழ்ந்த ஆய்வு நோக்குடையதாக அமைந்துள்ளது. தமிழின் தலைமைப் பண்பு, சிறப்பு ஆகியன குறித்து இவர் சங்கராச்சாரியாரோடு உரையாடியதும் ஆரியம் முதலிய மேலை மொழிகளை விடத் தமிழே சுத்த சிவானுபூதியைத் தரும் பெற்றி வாய்ந்தது என்பதை விளக்கியதும் இவரது தமிழ்ப் பற்றுக்குச் சான்று பகர்வனவாய் அமையும். தமிழ் என்னும் சொல்லைப் பல்வேறு அலகுகளாகப் பிரித்துத் தத்துவ நோக்கில் இவர் விளக்குவது புதுமையானது. தமிழ் என்றால் இனிமை, நீர்மை, சிவம், ஒளி என்று தொகுப்பு நோக்கிலேயே இவர் காலம் வரை பொருள் கண்டவர்களுக்கு இவரது பகுப்புநோக்கு புதியது; தருக்க நெறியோடு தமிழை உயர்வு படுத்திக்காட்ட முனைவது.

தமிழ் என்னும் சொல்லிலுள்ள எழுத்துகளை ஐந்து அலகுகளாக (த்+அ+ம்+இ+ழ்) இவர் பிரிக்கிறார். இவ்வைந்தெழுத்துகளுள் த், ழ், ம் ஆகிய மூன்று மெய்களும் 'ஐடசிக்

கலை'யை உணர்த்துவதாகவும் அ, இ ஆகிய இரண்டு எழுத்துகளும் 'சித்கலை'யை உணர்த்துவதாகவும் கூறுகிறார். உயிருக்கும்மெய்க்கும் உள்ள தொடர்பும், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள தொடர்பும் தமிழ் என்னும் சொல் வாயிலாகவே விளக்கம் பெறுகின்றன. இக்காலத்தில் சமுதாயப் பின்னணியில் தமிழ் விளக்கம் பெறுவதைப்போல இராமலிங்கர் காலத்தில் சமயப் பின்னணியிலும் தத்துவப் பின்னணியிலும் விளக்கம் பெற்றுள்ளது. ஒவ்வொரு காலத்திலும் சமூகத்தில் முனைப்பும் செல்வாக்கும் பெற்றிருந்த சிந்தனைகள் தமிழுடன் ஒட்டி உறவாடுவதை இதனின்றும் அறியமுடிகிறது.

ஒரு மொழியைத் தாய்மொழி என்று கூறுவதே உலக மரபு. தமிழையும் இவ்வாறுதான் கூறுகிறோம். ஆனால் இராமலிங்கர் தமிழைத் தந்தை மொழி என்றும் கூறுகிறார். தமிழ் ஆண் தன்மையுடையது; ஆளுமைத் திறம் வாய்ந்தது என்பது அவரது ஆணித்தரமான கருத்து.

பழந்தமிழ்ப் புலவர்களைப் போல தமிழுக்குப் பல அடைமொழிகளை இட்டுப் பாடுவதில் இராமலிங்கர் பேரானந்தம் கொள்கிறார். இலங்குதமிழ், இன்தமிழ், கருநெறித் தமிழ், சீர்வல்ல தமிழ், செந்தமிழ், செய்தமிழ், சொற்றமிழ்: தண்டமிழ், திருத்தகு சீர்த்தமிழ், திருநெறித்தமிழ், சீந்தமிழ், தென்சொல், தேமதுரத்தமிழ், நற்றமிழ், பைஞ்சீர்த் தமிழ், புத்தருந் தமிழ், மெய்த் தமிழ், வடிக்குந்தமிழ், என்று தம் திருவருட்பாவில் தமிழைப் புகழ்கிறார். நற்றமிழ் வளர்த்த ஞான சம்பந்தரைத் தமிழின மறுவடிவமாகக் காண்கிறார்.

இராமலிங்கரின் தமிழுணர்வில், தமிழ் வடமொழியை விடவும், இந்தியாவில் தமிழகம் தவிர ஏனைய ஐம்பத்தைந்து நாடுகளில் (பழைய பிரிவு) வழங்கும் மொழிகளை விடவும் உயர்வடைகிறது. கால அடைவிலான தமிழுணர்வு வரலாற்றில் இப்புகழ்ச்சியும் சிந்தனையும் புதியதல்ல; நாயக்கர் காலத்திலேயே இத்தகைய எண்ணம், தற்காப்பு மனநிலை தமிழ்ப் புலவர்களிலும் தோன்றிவிட்டன. நாயக்கர் காலத் தமிழுணர்வுக்குக் குமர குருபரர் பாடல்கள் உரைகல்லாய் அமையும்.

சமய வாதியாகவும் பின் சமயங் கடந்த ஞானியாகவும், சன்மார்க்க வாதியாகவும் பின் சுத்த சமரச 'சன்மார்க்க வாதியாகவும், குடும்பத் தலைவராகவும், பின் அகப் பற்றையும் புறப்பற்றையும் துறந்த மனவெளி மானுடராகவும் தூய ஒளி வெள்ளமாகவும் வாழ்ந்த இராமலிங்கர் தமிழ்ப் பற்றைத் துறந்து விட வில்லை, அதுதான் அவருக்குப் பற்றற்றான் பற்றோ?

**தண்டபாணி சுவாமிகள் (1838-1898)**

இராமலிங்கரின் அருட்பா'வை எதிர்த்து நூலெழுதியவர் தண்டபானி சுவாமிகள்; ஆயினும் அவரது தமிழ்ப்பாவை எதிர்த்து நூலெழுதவில்லை. இராமலிங்கரின் தமிழுணர்வு சார்ந்த கருத்துகள் தண்டபாணி சுவாமிகளின் உணர்வைச் செழுமைப்படுத்துவதற்குரிய ஊட்டச் சத்தாக அமைந்ததை அவரது பாடல்களின் வழியே அறியலாம். தமிழ் மாலை என்ற தலைப்பில் பாடிய 'தமிழ்த் தாய்' வணக்கப் பாடலும், தமிழ் அலங்காரச் செய்யுட்களும் அவரது தமிழ்ப் பற்றை அறிவதற்கும் கணிப்பதற்கும் துணைபுரிகின்றன.

தமிழ் விடுதூதுவுக்குப் பின் தமிழின் சிறப்பை நீள நினைந்து பாடிய பாடல் இவரது 'தமிழ்' அலங்காரமேயாகும்.. நூறு செய்யுட்களை உள்ளடக்கியது இப்பாடல். இப்பாடலில் பத்து இடங்களுக்கு மேல் தமிழையும் வடமொழியையும் ஒப்பிட்டுத் தமிழை உயர்வுபடுத்துகிறார், 'வட மொழியை விடத் தமிழே உயர்வுடையதென்று முருகக் கடவுள் கூறுகிறார் (பாடல்.1); தமிழை விட வடமொழி உயர்வுடையது என்று அகத்தியனே கூறினும் அவன் அறிவிலியாகக் கருதப்படுவான் (பாடல்.1); நாட்டின் தென்பாகமே வலப்பாகம் என்று வடமொழியாளரே கூறுவதால் தென்மொழியாகிய தமிழே வலமுடையது (பாடல்.2); வடமொழி யாகாதி கருமங்களை உடையது; தென்மொழி பக்தியை உடையது. எனவே தமிழே உயர்வுடையது (பாடல். 3); கொலை வேள்வியைப் போதிப்பது வடமொழி; கொல்லாமையைப் போதிப்பது தமிழ்; எனவே தமிழே உயர்வுடையது (பாடல்.2)! கலைமகளின் வலக்

கொங்கை தமிழ்: இடக்கொங்கை வடமொழி: வலமே பெற்றி வாய்ந்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? (பாடல். 5); உலகைக் காத்தவர் தமிழறிந்த அகத்தியரேயன்றி, வடமொழி யறிந்த பாணினியல்லர் (பாடல்.5); இயத்தை விடப் பொதியமே புகழால் உயர்ந்தது; தமிழாற் சிறந்தது (பாடல்.6); தமிழே தந்தைமொழி (பாடல்.21); மயிலையில் இறந்தவளைப் பிழைக்க வைத்தது தமிழேயன்றி வடமொழியன்று (பாடல்.25); சிவனும், திருமாலும் தம் திருவிழாக் காலங்களில் தமிழ்ப்பாடலையே முதலில் பாட வைத்தனர். (பாடல்.42); கலை மகள் கொல்லா வேதமான குறளுக்கே முதன்மை தந்தாள் (பாடல்.46); தமிழ் அமிழ்தினும் மேம்பட்டது; அதற்கு ஒப்புமை கூறத்தகுந்த வேறு மொழியில்லை (பாடல். 97) எனப் பல நிலைகளில் தமிழை உயர்வு படுத்துகிறார். மற்ற மொழிகளை விடவும் தமிழை உயர்வுபடுத்திப் பார்க்கும் பரஞ்சோதி முனிவர், கருணைப் பிரகாசர், சிவஞான சுவாமிகள், தமிழ் விடுதூது ஆசிரியர், இராமலிங்க அடிகள் ஆகியோரின் உணர்வுகளுக்கு முழு வடிவம் தருவதைப்போல் தண்டபாணி சுவாமிகள் தம் தமிழ் அலங்காரச் செய்யுளை அமைத்துள்ளார்.

இராமலிங்கஅடிகள் தமிழை 'எம் மொழிக்கும் பித்ரு பாஷை' என்று கூறித் தந்தை மொழி என்பர். இக் கருத்துப் பின்னணியில்தான் தண்டபாணி சுவாமிகளும் தமிழைத் தந்தை மொழி என்கிறார். அந்திரம் முதலிய மொழிகளுக்குத் தந்தை மொழியெனத் திகழ்வது தமிழ் (பாடல். 21) என்பது அவரது கருத்து. இராமலிங்கரைப் போலவே தண்டபாணி சுவாமிகளும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளைக்கு அவர் பாடிய ஒருபாடல் கருத்துக்கு முன்னோடி ஆகிறார். கலைமகளின் வலது மார் பகத்தைத் தமிழாகவும் இடது மார்பகத்தை வடமொழியாக வும் தண்டபாணி சுவாமிகள் பாடுவதின் பின்னணியில்தான் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையும் கலைமகளின் வலது விழி யாகத் தமிழையும் இடது விழியாக வடமொழியையும் தம் தமிழ்த்தாய் வணக்கப் பாடலில் பாடுகிறார். எனவே தமி ழுணர்ச்சிக் கருத்துகள் சுயம்புவாக ஒருவர் உள்ளத்தில் தோன்றாமல் தொடர் நிலையில் தனக்கென ஒரு வர லாற்றைப் படைத்துக்கொண்டே வளர்ந்திருக்கிறது எனலாம்.

வேதநாயகம் பிள்ளை (1826 - 1889)

திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள குளத்தூரில் பிறந்த வேத நாயகம்பிள்ளை தமிழிலும் ஆங்கிலத்திலும் நல்ல புலமை உடையவராக விளங்கினார். வழக்கு மன்றத்தில் பதிவுப்பொறுப்பாளராகவும், முறைமன்றத் தலைவராகவும் (முன்சீப்) அவர் பணி புரிந்ததால் மிகச் சாமானிய மக்களோடும் தொடர்பு கொள்ளும் வாய்ப்பு அவருக்குக்கிட்டியது. எனவே ஏனையோரிடம் காணப் படும் தமிழுணர்வை விடவும் அவரிடம் காணப்படும் தமிழுணர்வு ஊன்றிப் பார்க்கத் தகுந்தது; முக்கியத்துவம் உடையது.

உரைநடை கவிதை என இரு நிலைகளிலும் அவர் படைப்பிலக்கியங்களை இயற்றியுள்ளார். அவரது உரைநடையுள் குறிப்பிடத் தகுந்தது பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் புதினமாகும்.. இப்புதினத்தில் 'வழக்குரைஞர்கள்' என்ற தலைப்பில் தமிழைப் பற்றிக் குறிப்பிடுகிறார். ஒரு மொழியை மனம் நிறைந்து புகழ்வதுடன் பரம திருப்தி அடைந்து விடாமல் ஆக்க நிலையில் மொழியுணர்வைக் காண்கிறார் வேதநாயகர். கட்டுமானம், திட்டம், செயற்பாடு ஆகிய நிலைகளில் அவரது தமிழுணர்வு வெளிப்படுகிறது. வடமொழியோடும் வடமொழி வாணர்களோடும் மட்டுமே தம்மை இணைத்துப் பார்த்துக் கொண்டிருந்த தமிழ்ப் புலவர்களிடையே இவர் வேறுபட்டு விளங்கினார் ஆங்கிலத்தோடு தமிழை ஒப்பிட்டுப் பார்த்தார்; ஆங்கிலத்தை விடவும் தமிழில் உயர்வு கண்டார். அவரது தமிழ் உணர்வில் தென்னகப் பண்பும் வாழ்க்கைமுறையும் பழக்க வழக்கங்களும் உயர்வு பெற்று விளங்கியது; தாய்மொழி வழிக்கல்வி மாட்சி உடையதாக விளங்கியது.

இருப்பினும் அவர் கண்ட தாய்மொழி வழிக்கல்வி என்ற இலட்சியக் கனவு இன்னும் ஆகாய கங்கையாகத்தானே இருக்கிறது. சில கோணங்களில் பார்த்தால் மொழியுணர்வு, மரபுணர்வு ஆகியவற்றில் வேதநாயகர் பாரதிக்கு முன்னோடி போல் தோன்றுகிறார். பாரதியின் 'எந்தையும் தாயும்' எனத் தொடங்கும் பாடல், 'செந்தமிழ் நாடெனும்' எனத் தொடங்கும் பாடல், வேறு வேறு பாஷைகள் பேசுவாய்' போன்ற பாடல் அடிகள், ஆகியன வேதநாயகரின் கருத்துச் செல்வாக்கிலிருந்து உருப்பெற்றவையாகதோன்றுகின்றன.

# தேம்பாவணி மொழியியல் பின்னணி

இ. யோ. குழந்தையரசடிகள்
சேலம்,

1726-27 ஆகிய ஆண்டுகளில் தேம்பாவணி இலக்கிய வானில் அரும்பியது. வடவேங்கடம், தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம் மொழிகள் பலவற்றின் தாக்கத்திற்கு உள்ளாகியது.

தென்னிசன் என்னும் ஆங்கிலப் பாவலர் பாடினார்:
''மாந்தர் வருவர், மாந்தர் செல்வர் -(1)
யான்தனிச் செல்வேன் என்றும் தானே''.

ஆற்றின் போக்கினைப் பாடினார் அவர். என்றும் சென்று கொண்டிருப்பது ஆறு. தமிழ்மொழி என்றும் உள்ள தென்தமிழ். தமிழ் மொழியின் வரலாறு ஒரு வற்றாத பேராறு.

முதன்முதலாக மொழியியலின் ஒளிவிளக்கெனத் தேம் பாவணியை அடையாளம் காட்டியவர் அறிஞர் பரிதிமாற் கலைஞர் ஆவார். 18-ஆம் நூற்றாண்டின் மொழியியல் நிலை, தமிழில் அயல் மொழிகளின் தாக்கம் முதலியவற்றை ஆராயப் பெரிதும் உதவுவது தேம்பாவணி. அணிவளன் ஏன் ஆரிய வளன் எனப்படுகிறான்? செமித்தியவளன் என ஏனோ குறிப்பிடப்பட வில்லை? ஏவுகனை எனத்தாவும் வினாத்தொடர் இவை.

வீரமாமுனிவர் காலத்தில் செமித்திய மொழியினம் (SEMITIC) என்னும் பாகுபாடு பிறக்கவே இல்லை என்பதே மொழியியல் தரும் விடை. செமித்திய இனத்தின் தந்தை யார் என்பது தான் கேள்வி.

வீரமாமுனிவர் விடை தருகின்றார்.

''நூல்வரும் சுருதிவேலி நொறில்தவம் விளைத்த சீலம் -(2)
சால்வரும் மாட்சிநோவன் தானும், தான் தவத்தின்ஈன்ற
வால்வரும் சேமும், காமும், யாப்பனும், மக்களாக
நால்வரும், நால்வர் காந்தை நான்கும் அன்று இறந்திலாரே''.
- (தேம். 14/118)

சேம் என்பவரின் வழிவழி வந்த இனமே செமித்திய இனம். ஆரியவளன் எனப்படும் தலைவனது இயற்பெயர் சூசை ஆகும். (பாயிரம் 2,3,4, தேம்.3/41). மொழிபெயர்க்கும் இனிய மரபு கம்பர் காலத்திற்கும் முற்பட்டது. சூசை (யோசே) என்னும் பெயரின் மொழி பெயர்ப்பே வளன். வளன் என்னும் பெயர் இயேசுவின் வளர்ப்புத்தந்தை சூசையைக் குறிக்கும்.

கம்பர் மரபில் வந்தவர் வீரமாமுனிவர். கம்பர் பாடல்களில் தோய்ந்தவர் வீரமா முனிவர். கம்பர் நடையினை ஆராய்ந்தவர் வீரமாமுனிவர். கம்பர் பாடல்களில் இரணியன் என்னும் பெயர் கனகன் என மொழி பெயர்க்கப்படுகின்றது. (எ. கா. சுந்ரகாண்டம்: ஊர்தேடு படலம்-302; உருக்காட்டுப்பலம்-536; பாசப்படலம்-1004).

சந்திரமதி என்னும் பெயர் யசோதா காவியத்தில் ''மதிமதி'' என (83, 161) மொழி பெயர்க்கப்படுகிறது.

கோதமனார் தர்மபுத்திரனை அறவோன் மகன் என மொழி பெயர்க்கின்றார். (புறம். 366).

வில்லிபாரதத்தில் (விராட பருவம், கரந்துரை சுருக்கம்) ''ஆர்கொல்நீ யென்ன அறன்மக னுடனோர்...'' என வில்லி புத்தூராழ்வார் பாடுகிறார். அறனழகன் என்பது தர்மபுத்திரன் என்னும் பெயரின் மொழிபெயர்ப்பு.

'ஆதாம்' என்னும் பெயர் ஆதன் என்றும் அழகிய தமிழ் வடிவில் தேம்பாவணியில் பதிவாகின்றது. அதே பெயரில் நேர் மொழிபெயர்ப்பு மண்ணன். ''ஆதோம்'' என்றால் மண். (தேம். 7/24;11/5).

தாந்தே படைத்த தம் இறவா இலக்கியத்தில் பேய் ஒன்றன் பெயர் 'விரகவாயுவு, -(3) (தேம். 23/82 எனும் மொழி பெயர்ப்பாகி வீரமாமுனிவர் விரல் அசைவில் உயிர்க்கின்றது.

'கருணை' (கிருபை) என்பது வட சொல். அதுவே தூய தமிழில் 'அருள்' என அமையும். 'கருணையன்' (25/7, 100) அருளின் பெயரோன் (26/50) அருளோன் (26/179) ஆகிய அத்தனை பெயர்களும் யோவான் என்னும் பெயரின் மொழி பெயர்ப்பே ஆகும். 'யோ, என்பது 'யாவே' என்று இறைவனை யும்' 'ஆன்' என்பது அருளையும் குறிக்கும்.

(யோ + ஆன் > யோவான்.)

மாபாரதத்தில் நகுலனைக் காண்கின்றோம். பரிக்கு நகுலன் என்பது பண்பட்ட ஒரு மரபு. 'நகுலன்' வேறு 'நகுவன்' வேறு. எப்படியோ தேம்பாவணியில் நகுலன் என்று பிழைபட அச்சேறி விட்டது. நகுவன் -(4) என்னும் பெயரே நகுலன் எனக் காலப் போக்கில் மாறிவிட்டது. அதுவும் கிறித்துவத் திருநூலில் பழைய ஏற்பாட்டில் காணும் பெயர் ஒன்றன் மொழி பெயர்ப்பே ஆகும்.

கிறித்துவத் திருநூலிலும் பெயர்களை மொழிபெயர்த்தல் என்பது உண்டு. ஈபுரு மொழிப் பெயர்கள் பல கிரேக்கம், இலத்தீன் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டன என்பது உண்மை.

[Messiah > Christos > Christus > Christ;
Cepha > Petros > Petrus]

உண்மை இவ்வாறிருக்க, ஒரு சிலர் இன்று ஏற்கனவே தமிழில் வழங்கும் அருளப்பர் (John) சின்னப்பர் (Paul) இராயப்பர் (Peter) என்னும் நல்ல தமிழாக்கங்களை நீக்கிப் புதியமொழி பெயர்ப்பு என எண்ணி யோவான், பவுல், பேதுரு எனும் பிறமொழிப் பெயர்களுக்குப் புத்துயிர் ஊட்டப் புறப் படுதல் ஏனோ?

அரசியல் மாற்றம்-படையெடுப்பு-விளைவாகத் தலைதடுமாற்றம். இவை அன்றாட வாழ்வியலில் மட்டுமன்று, மொழியியலிலும் மாற்றங்களையும், தடுமாற்றங்களையும் ஏற்படுத்துவது கண்கூடு.

கலிங்கத்துப்பரணி காட்டும் உண்மையும் இதுவே. புதிய சொற்கள் புகுவதற்கு வாய்ப்பு வழங்கும் சூழலைப் படம் பிடிப்பது பரணி. போரில் சிறைப்படுத்தப்பட்ட கருநாடக நாட்டுப் பெண்களின் பேச்சில் சில தெலுங்குச் சொற்களும், சில தமிழ்ச் சொற்களும் கலந்து விளையாடின. கலிங்கத்துப் பரணி வழங்கும் காட்சி இதுவே.

''மழலைத்திரு மொழியிற்சில வடுகும்சில தமிழும்
குழறித்தரு கருநாடியர் குறுகிக்கடை திறமின்''.
(கலிங்கத்துப்பரணி-43)

வடுகு என இப்பாடலில் வழங்குவது தெலுங்கு. கலிங்கத்துப் பரணியின் காலத்திற்கு முன்னும் பின்னும் அரசியல் மாற்றங்கள் பல அவ்வப்போது நிகழ்ந்தன.

அயல்மொழிச் சொற்கள் பல அவ்வக்காலங்களில் வழக்கில் புகுந்தது உண்மை. தெலுங்குமொழியின் தாக்கம் தமிழ்மொழியில் நாயக்க மன்னர் ஆட்சியையொட்டித் தோன்றியதை தேம்பாவணி தெளிவுபடுத்துகின்றது.

இன்றைய தமிழில் 'சிப்பி' இடம் பெறுகிறது. இதன் பழைய வடிவம் 'இப்பி' என்பதே. 'இப்பி' என்னும் வழக்கினைப் பழந்தமிழ் நூல்களில் காண்கிறோம். (எ.கா: புறம்-53)

மேனாட்டு அறிஞர்-(5) ஒருவர் 'சிப்பி' தெலுங்கு என்று குறிக்கின்றார். மேற்குறிப்பிட்ட புறநானூற்றுப் பாடல் 53 உரையில் சிப்பி என்னும் சொல் இடம் பெறுகின்றது. நாயக்கர் காலத்தில் தெலுங்கு மொழியின் தாக்கத்தால் 'இப்பி' என்னும் வழக்கு வீழ்ந்து 'சிப்பி' சிறப்பிடம் பெற்றிருக்கக் கூடும். இச் சூழலில் தேம்பாவணியில் 'சிப்பி' என்னும் சொல் (தேம்.7/41) இடம் பெறுகின்றது.

'வலக்கை', 'இடக்கை' என்னும் செந்தமிழ் வழக்குகளுக்கு மாறாக வலதுகை, இடதுகை என்னும் வழக்குகள் சோசுவன் வெற்றிப்படலத்தில் (தேம். 15/117) இடம் பெறுவது தெலுங்கு மொழித் தாக்கத்தின் விளைவே என்று எண்ணலாம்.

'நாய்கன்', 'நாய்கி' என்னும் சொற்கள் (தேம். 20/69,70) நாயகன், நாயகி எனும் வட சொற்களின் சிதைவே. இவை நாயக்கர் காலத்தில் தமிழில் நுழைந்தன.

அதர் என்னும் வழக்கு கருணையன் மாட்சிப்படலத்தில் (தேம். 26/14) இடம் பெறுகிறது. இது பழந்தமிழ் வழக்கு (புறம்:138, 150; குறள்-594) என்பது அனைவரும் அறிந்த உண்மை. 'அதர்' என்னும் சொல்லே 'தாரி' என்று சிதைந்தது. (தேம். 26/33) தெலுங்குமொழியின் தாக்கத்தினை இவ்விடத்தி லும் காணலாம்.

'இராயன்' (தேம். 7/41; 36/71) என்னும் சொல் இராயர் ஆட்சியில் புகுந்தது. கல்ராயன் மலை என்னும் வழக்கு நாம் அறிந்த ஒன்று.

'அக்கடை' (தேம். 14/8) என்னும் சொல் தூய தமிழே யாயினும் 'அக்கடா' என்றும் தெலுங்குச் சொல்லின் எதிரொலி யாக அமைந்து உள்ளது.

ஆர்க்காட்டு நவாபு சந்தாசாகிபு வீரமாமுனிவரோடு தொடர்பு கொண்டிருந்தார். விளைவாக. சடுதி எனும் சொல் (தேம், 7/35,13/72,15/162,25/13) தமிழ் இலக்கியத்தில் இடம் பெறுகிறது. ஆராய்பவருக்கு இச்சொல்லின் அடி புலப் படும் (ஜடிதி)

'கோயல்' என்னும் இந்தி ஒலிக்கு ஏற்ப வீரமாமுனிவர் 'கையில்' (தேம். 17/4) என்னும் வழக்கினைக் குயிலினைக் குறிக்கக் கையாள்கின்றார்.

போர்ச்சுகீசியர் பொறித்த சொல் பிரித்து சாந்து (தேம். 7/16)-(6) எனத் தேம்பாவணியில் அமைகின்றது.

வரலாற்றின் போக்கினை மாற்றிய சொற்கள் இவை.

(1) Men may come and men may go
But I go on for ever

- Alfred Lord Tennyson.

(2) Shem (Sem)-Genesis 8/18.
Semite, Semitic < Sem (Shem).

(3) Giagantic "Erotic whirlwind"-Inferno.

(4) Genesis 21/6 God hath made me to laugh. (நகு)-laugh.

(5) A Dictionary Tamil and English.
Based on John Philip Fabricius.
"Malabar-English Dictionary".
Third Edition, Revised & Enlarged, 1933.

(6) Spiritu sancto Portuguese.

# பொருள் மருட்சி

ப. கொழந்தசாமி

சென்னைப் பல்கலைக்கழகம்.

மொழியின் அடிப்படைப்பயன் கருத்துப் பரிமாற்றம் ஆகும். பேசுபவர்/எழுதுபவரின் கருத்தை, உணர்வுகளைக் கேட்பவர்/படிப்பவர் உணருமாறு, புரிந்துகொள்ளுமாறு செய்வதுதான் சிறந்த கருத்துப் பரிமாற்றமாகும். அவ்வாறு கருத்துப் பரிமாற்றம் நிகழும்போது செய்தியினை அளிப்பவருக்கும் பெறுபவருக்குமிடையில் பொருள் தெளிவின்மை ஏற்படுமானால் தவறான பொருள்புரிந்து கொள்ளவோ, பொருள் புரியாத நிலையோ ஏற்படலாம். அப்போது கருத்துப் பரிமாற்றம் செவ்வனே நிகழாமல் மொழியின் அடிப்படைப் பயன்பாடு பாதிப்பிற்குள்ளாகின்றது. இது தவிர்க்கப்படவேண்டியதாகும்.

ஆய்வேடுகள் இவ்வாறான பொருள் குழப்பங்களைத் தவிர்த்துத் தெளிவான எளிமையான நடையில் எழுதப்பட வேண்டும். அப்போதுதான் தடங்கலின்றி ஆய்வுப் பயனைப் பெறமுடியும். மேலும் தவறான பொருள் புரிதலைத் தவிர்க்க இயலும். அவ்வகையில் இக்கட்டுரை பொருள்மருட்சியினை விளக்கி அதைத் தவிப்பதற்கான வழிமுறைகளைக் கூறுவதாக அமைகின்றது.

பொருள் மருட்சி பொருள் மயக்கத்தினாலும் பொருள் தெளிவின்மையினாலும் ஏற்படுகின்றது. பொருள் மயக்கம், பொருள் தெளிவின்மை ஆகியவற்றிற்கிடையே தெளி வான, சரியான வேறுபாடு சுட்ட இயலாதெனினும், இரண்டையும் பிரித்துப்பார்த்தல் இயலும். அவ்வகையில் முதலில் பொருள் மயக்கம் பற்றி விளக்கப்படுகின்றது.

பொருள் மயக்கம் (Ambiguity)

சொற்களும் தொடர்களும் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைத் தருமானால் அது பொருள் மயக்கம் எனப்படுகிறது. இங்குச் செய்தியினை அளிப்பவர் சொன்ன பொருளைச் செய்தியைப் பெறுபவர் மாற்றிப் பெறும்போது சிக்கல் நேர்கின்றது.

'அவள் தாய்வீடு சென்றாள்'

என்னும் தொடரில் பொருள் மயக்கம் அமைந்துள்ளதை எடுத்துக் காட்டாகக் கருதலாம். அவள் தன்னுடைய தாய்வீட்டிற்குச் சென்றாள், அவளுடைய தாய் தன் வீட்டிற்குச் சென்றாள் என்னும் இருபொருள்கள் இத்தொடரில் அடங்கியுள்ளன. இப்பொருள் மயக்கம் சூழ்நிலையாலும் முன்பின் இயைபினாலும் தவிர்க்கப் படுகின்றது. இருந்தபோதிலும் தெளிவாக எழுதுவதே சிறப்பானதாகும்.

பொருள் மயக்கம் ஒலி, தொடரமைப்பு, சொல்நிலை ஆகிய நிலைகளில் ஏற்படும். ஆய்வேடுகளில் தொடரமைப்பு, சொல்நிலை ஆகியவற்றால் மட்டும் பொருள் மயக்கம் நேர்வதால் அவை பற்றி இங்கு விளக்கப்படுகின்றது. தொடரமைப்பில் ஏற்படும் பொருள் மயக்கத்தை

'புலி கொல் யானை'

என்னும் தொடர் மூலம் விளக்கலாம். புலியை யானை கொன்றதா? யானையைப் புலி கொன்றதா? என்பதை உறுதியாக அறிய இயலாதநிலை இத்தொடரில் ஏற்படுகின்றது. ஆகையால் தொகையாக அமைக்காமல் வேற்றுமை உருபுகளை விரித்தெழுதல் பொருள் மயக்கத்தைத் தவிர்க்கும் வழி என்பதை அறியலாம். எனவே வேற்றுமைத் தொகைகள் பொருள் மயக்கத்திற்குக் காரணமாக அமைகின்றன என்பது புலனாகின்றது.

அடுத்ததாக, தொடரமைப்பில் அண்மையுறுப்புகளின் அமைப்பு முறையும் பொருள் மயக்கத்திற்குக் காரணமாகின்றது.

'பழைய துணிக்கடை'.

என்னும் தொடரில் கடை பழையதா? துணி பழையதா?

என்னும் மயக்கம் ஏற்படுகின்றது. இது அண்மையுறுப்பு அமைப்பு முறையில் ஏற்படும் பொருள் மயக்கமாகும். இவ்வாற மைவது ஒலியழுத்தத்தாலும், சூழ்நிலையாலும் தெளிவு பெறப் படுகின்றது. அவ்வாறின்றி இருக்கும்போது பொருள் மருட்சி நீங்குவதில்லை. இங்குப் பொருள் தெளிவுபெறப் பழைய துணிகளை விற்கும் கடை என்றோ துணிக்கடை பழமையானது என்றோ தேவையானவாறு விரித்து எழுதிவிடுதல் நன்று. ஆய் வேடு எழுதும்போது இவ்வாறு தொடர்களைப் பொருள் மயக் கம் ஏற்படாத அளவு விரித்தெழுதுலே சிறந்ததாகும்.

அடுத்து, சொற்கள் பலபொருள்தந்தும் குறிப்புப் பொருள் தந்தும் அமையும் போதும் பொருள் மயக்கம் ஏற்படுகின்றது.

'நீ கரையேற முடியுமா?'

என்னும்போது நீர்நிலையிலிருந்து கரையேறுதல், வாழ்க்கைச் சிக்கல்களிலிருந்து மீளுதல் ஆகிய பொருள்கள் தோன்றிப் பொருள்மயக்கம் ஏற்படுகின்றது.

வட்டாரவழக்குச் சொற்களும் பொருள்மயக்கம் ஏற்படுத்து கின்றன. ஒரு வட்டாரமக்கள்பேசும் மொழியில் ஒரு பொருள் குறிக்கும் சொற்கள் பிறிதொரு வட்டாரவழக்கு மொழியில் மற்றொரு பொருள் தரலாம் அல்லது பொருள் புரியாமலும் போகலாம். இங்கு வேற்றுப்பொருள் தரும்போது பொருள்மயக்கம் ஏற்படுகின்றது. பெண்குழந்தைகளைக் குறிக்கும் 'பிள்ளை' என்ற சொல் பொது வழக்கிலும், கொங்கு வட்டார வழக்கிலும் பெண்பாலைக் குறிக்க, சென்னை வட்டாரத் தமிழில் ஆண்பாலைக் குறிக்கப் பயன்படுகிறது. திருநெல்வேலி வட்டாரவழக்கில் இருபாலாரையும் குறிக்கப் பயன்படுகிறது. இவ்வாறான வட்டார வழக்குச் சொற்களைப் பயன்படுத்தும்போது பொருள் மயக்கம் ஏற்படுகின்றது. இது போன்ற வட்டர வழக்குச் சொற்களைத் தவிர்த்து, பொது மொழியை ஆளும்போது பொருள்மயக்கம் தவிர்க்கப்படுகின்றது. மேற்கூறிய செய்திகளால் தொடரமைப்பும், சொல்நிலையும் பொருள்மயக்கத்தை ஏற்படுத்துகின்றன என்பதும், அவற்றைத் தவிர்த்து எழுதுதல் நன்று என்பதும் விளங்கும்.

பொருள் தெளிவின்மை (Vagueness)

பொருள் மருட்சியில் மற்றொரு வகை பொருள் தெளிவின்மை என்பதாகும். சொல்லுக்கோ, தொடருக்கோ குறிப்பிட்டுப் பொருள் சுட்ட இயலாத நிலையில் பொருள் தெளிவின்மை ஏற்படுகின்றது. இது நான்கு நிலைகளில் அமைவதாக எம். கெம்ப்சன் (பக்.124-127) கூறுகின்றார். அவை

1. குறியீட்டுத் தெளிவின்மை: சொல்லுக்குரிய பொருள் தெளிவாக விளங்கும். ஆயின் அக்குறியீட்டுக்குரிய உலகப் பொருள் எதுவென உறுதியாகச் சுட்ட இயலாது.

2. வரையறுக்க இயலாத பொருள்: அதாவது இச்சொல்லுக்கு இதுதான் பொருள் என்று குறிப்பிட்டுக்கூற இயலாத பொருள்.

3. தனிவிளக்கம் அளிக்க இயலாமை: சொல்லின் பொருள் தெளிவாக விளங்கும். ஆயின் தனிவிளக்கமாகக் கூற இயலாது.

4. தனிவிளக்கம் அளித்தலில் தொடர்பின்மை: அதாவது இது அல்லது அது என்று பொருள் விளக்க இயலும்போது ஏற்படும் தெளிவின்மை.

குறியீட்டுத் தெளிவின்மையில் சொற்பொருள் மட்டும் தெளிவாக விளங்கும். ஆயின் அக்குறியீட்டிற்குரிய உலகப் பொருள் வரையறுக்க இயலாததாக அமையும். இதனால் பொருள் தெளிவின்மை ஏற்படும். ஆங்கிலத்தில் 'Town' 'City' என்ற சொற்கள் இவ்வகையில் அமைவன. தமிழில் 'வண்டி' என்ற சொல் இவ்வகையில் அமைகின்றதெனலாம். இச்சொல் இன்று பொது நிலையில் எல்லா வாகனங்களுக்கும் பொதுவாகப் பயன்படுத்தப்படுகின்றது.

குறிப்பாகச் சுட்டிக்கூற இயலாத பொருள் நிலையில் பொதுவான வகையில் சொற்களும் தொடர்களும் அமைவதால் பொருள்தெளிவின்மை ஏற்படுகின்றது. உடைமைக்கும் உடைமையாளருக்கும் இடையில் அமையும் சொற்கள் இவ்வகையின.

'இராமனுடைய கை' என்னும்போது தெளிவாகப் பொருள் விளங்குகின்றது. பொருளையும் குறிப்பிட்டு, வரையறுத்து 'இது இராமனுடைய கை' என்று சுட்டலாம். அக்கையை யாரும் எடுத்து உரிமை கொண்டாட முடியாது, எந்தவொரு சூழ்நிலையிலும் அது இராமனுடைய கையாகவே இருக்கும். ஆயின் 'இராமனுடைய புத்தகம்' என்னும்போது இராமன் எழுதிய புத்தகமா? இராமன் விலைக்கு வாங்கிய புத்தகமா? இரவல் வாங்கி வைத்திருக்கிறானா? என்பன போன்ற வினாக்களுக்கு விடையளிக்க இயலாத நிலை ஏற்படுகின்றது. இதனால் பொருள் தெளிவின்மை ஏற்படுகிறது. சூழ்நிலையால் இத்தெளிவின்மை ஓரளவு விலக்கப்படுமாயினும் தெளிவாக எழுதிவிடுதல் சிறப்பானதாகும்.

தனிவிளக்கம் அளிக்க இயலாத நிலையில் பொருள் தெளிவின்மை ஏற்படுகின்றது. ஆங்கிலத்தில் 'neighbour' என்னும் சொல்லை இதற்கு உதாரணமாக அமைக்கலாம். தமிழில் இது போன்ற சொற்கள் பெரும்பான்மை இல்லையாயினும் 'உடன் பிறப்பு' போன்ற சொற்களில் பால், வயது, உறவுமுறை முதலியன சுட்டப்படாததால் பொருள் தெளிவின்மை ஏற்படுகின்றது.

தனிவிளக்கம் அளிக்கும்போது தொடர்பின்மை காரணமாகப் பொருள் தெளிவின்மை ஏற்படும். அதாவது இது அல்லது அது என்று பொருள்விளக்க இயலும்போது ஏற்படும் தெளிவின்மையாகும்.

''விண்ணப்பதாரர் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் அல்லது ஐந்து ஆண்டு முன் அனுபவம் பெற்றிருக்க வேண்டும்'' என்ற தொடரில் சூழ்நிலை காரணமாக மூன்று பொருள்கள் அமைகின்றதெனலாம்.

1. முதல் வகுப்பில் தேர்ச்சி
2. ஐந்து ஆண்டு முன் அனுபவம்
3. இரண்டும் இருத்தல் நலம்.

இதுபோன்ற தொடர்கள் அடிக்கடி மொழியில் பயன்படுத்தப் படுவதால் பொருள் தெளிவுடன் குறிப்பிடுதல் சிறப்பானதாகும்.

அடுத்து, பிறமொழிச் சொற்களைத் தவிர்த்துத் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தவேண்டும் என்னும் விருப்பத்தினால் புதுக்கருத்தில் சொற்களை ஆளும்போது பொருள் தெளிவின்மை ஏற்படுகின்றது. இதைத்தவிர்க்கப் பிறமொழிச் சொற்களை அடைப்புக் குறிக்குள் தருதல் நலம். சான்றாக ஓர் ஆய்வேட்டில் வீடுகட்டப் பயன்படும் பொருட்களைப் பற்றி விளக்கும்போது 'சிறுசிறு கருங் கற்கள்' என்பது 'ஜல்லி' என்ற சொல்லுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சிறுசிறு கருங்கற்கள் என்பதன் பொருள் விளங்கினாலும் வரையறுத்துப்பொருள் உரை இயலாத நிலை ஏற்படுகின்றது. 'ஜல்லி' என்ற சொல்லை அடைப்புக் குறிக்குள் தந்திருந்தால் பொருள் தெளிவாக விளங்கி நிற்கும்.

தொடரில் ஓரிருசொற்கள் (குறிப்பாக எழுவாய்) சுட்டப் படாத நிலையிலும் பொருள் தெளிவின்மை ஏற்படுகின்றது. ஆய்வேட்டில் இவ்வாறு அமைக்காமல் தொடர் முழுவதையும் எழுதிவிடுதல் பொருள் தெளிவுதரவல்லது. ஓர் ஆய்வேட்டில் மக்களின் பழக்க வழக்கங்களைக் குறிப்பிடும்போது 'உண்டபின் திண்ணையில் அமர்கின்றனர்' என்று குறிக்கப்பட்டுள்ளது. எவ்வேளையில்? எதை உண்டபின்? யார்திண்ணையில் அமர் கின்றனர். என்று தெளிவாக அறிய இயலவில்லை. இதனால் பொருள் தெளிவின்மை ஏற்படுகின்றது. இவ்விடத்தில் முழுதையும் விரிவாக எழுதியிருப்பின் சிறப்பாகப் பொருள் புலப் படுத்தப்பட்டிருக்கும்.

பேச்சுமொழிக்கும் எழுத்துமொழிக்கும் உள்ள அடிப்படை வேறுபாடு பெரும்பாலும் பேசுபவர் எதிரில் இருப்பதாலும், சூழ் நிலையாலும், பேச்சின் முன்பின் இயைபுநோக்கியும் பொருள் குழப்பத்தை நீக்கித் தெளிவு பெறலாம். ஆயினும் அவ்வாறு அமையாது பொருள் தெளிவு பயக்குமாறு பேசுவதே சொல் வன்மையின் சிறப்பாகும். தான் எண்பொருளவாகச் சொல்லவும், பிறர்வாய் நுண்பொருள் காணவும் பொருள் தெளிவு இன்றி மையாதது

# அண்ணாவின் மொழிக்கோட்பாடு

அ. சக்கரவர்த்தி

சென்னைப் பல்கலைக்கழகம்

மொழி மனிதனின் பண்பட்ட வளர்ச்சியை வெளிப்படுத்தும் கருவியாக விளங்குகிறது. மனிதனுக்குச் சிந்திக்க எண்ணம் கால் கொண்ட அப்போதே மொழி பிறந்ததாக அறியமுடிகிறது. உலகமொழிகள் அனைத்துமே அந்தந்த நாட்டின் தட்பவெப்ப நிலைக்கேற்ப அமைந்து இலங்குவதோடு அவ்வந்நாட்டுப் பண் பாட்டு நிலைக்களன்களாகத் திகழ்வது கண்கூடு.

வளர்ச்சி பெற்ற இவ்வுலகில் பல்வேறுபட்ட மொழிக் குடும்பங்கள் காணப்பெறுகின்றன. அவைகளுள் ஒருசிலவே தலையாயதாகவும் வளர்ச்சிநிலை எய்தியதாகவும் விளங்கு கின்றன. அவற்றுள் ஒன்று திராவிடமொழிக்குடும்பமாகும். இம்மொழிக்குடும்பத்துள்ளும் தமிழ்மொழி உயர்தனிச்சிறப்பைப் பெற்று விளங்குகின்றது.

தமிழ்மொழி பல்வேறு காலநிலைகளில் பல மேலாண்மை மொழிகளின் மொழியாளர்களின் இடையூறுகளைக் கடந்து வளர்ந்து வந்திருக்கின்றது. "தொல்காப்பியனார் காலத்தி லேயே தமிழில் வடமொழி கலக்கத்தொடங்கிவிட்டது. பிறகு பௌத்த சமண சமயங்களின் வழிப் பாலிமொழி வந்து கலந்தது பல்லவர் காலத்தில் மீண்டும் வடமொழி செல்வாக்குப் பெறு கின்றது. இச்செல்வாக்கு, பக்தி இலக்கியக் காலம் வரையிலும் தொடர்கின்றது. அதனை அடுத்துச் சோழர் காலத்திலும் வடமொழியே செல்வாக்குப் பெற்ற மொழியாக இருந்திருக் கின்றது. பிறகு இசுலாமியர்களின் படையெடுப்பால் அரபு மொழியும், பார்சிய மொழியும் இந்துஸ்தானியும் வந்து கலந்

தன. ஐரோப்பியர் வருகையினால் போர்ச்சுக்கீசியமொழி, பிரெஞ்சு மொழி, ஆங்கிலமொழி வந்து கலந்து ஒரு கலப்பு மொழியாகவே தமிழ் காட்சி தந்தது.'' என்ற கூற்று மேற் கூறிய கருத்தை உறுதிசெய்கின்றது.

இந்தியநாடு விடுதலை பெற்றுக் குடியாட்சி மலர்ந்தது. மாநில அரசிலும் நடுவணரசிலும் காங்கிரசுக் கட்சி ஆட்சி அமைத்தது. இந்தியத் துணைக் கண்டம் முழுமைக்கும் ஒரே கட்சி ஆட்சி அமைத்திருப்பதால், ஒரே மொழி ஆட்சிமொழி யாக விளங்கியது. அது ஆங்கிலம். ஆங்கிலம் இந்தியர்க்கு அயல் மொழி அயல்மொழியைத் தவிர்க்க இந்திய மொழிகளுள் ஒன்றைப் பொது மொழியாக, ஆட்சிமொழியாக அமைக்க அரசு முடிவுசெய்தது.

இந்திய அரசியல் சட்டத்தின்படி அப்போது இந்தியாவின் தேசிய மொழிகளாக இருந்த பதிநான்கு மொழிகளுள் ஒன்றான இந்திமொழியை மட்டும் பொது மொழியாக ஆக்கினர். பொதுமொழி என்ற நிலைக்கு இந்தியை உறுதிசெய்தவுடன் ஆட்சிமொழியாக்கிடவும் அரசுமேற்கொண்டது. இந்தியா முழுமையிலும் இந்திமொழி வளம்பெற்றிட வேண்டும் என்பதற் காக பல சூழல்களில் 'மொழித் திணிப்பு' அரசால் மேற் கொள்ளப்பட்டது. மொழி வல்லாண்மையை எதிர்த்து தமிழகம் உட்பட இந்தி பேசாத மாநிலத்தவர்கள் பலர் உயிரிழக்கவும் நேரிட்டது. தமிழகத்தில் தமிழறிஞர்களும் அரசியல் தலைவர் களும் அவ்வப்போது இந்தித் திணிப்பை முன்னின்று எதிர்த்துத் தமிழை அயல்மொழித் தாக்கத்தினின்றும் காத்து வந்தனர். அவர்களுள் சிறந்து விளங்குபவர் அண்ணா. தமிழறிஞரும், அரசியலாளருமான அண்ணாவின் மொழிக் கொள்கையை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.

''ஆட்சி மொழிக்கு எப்போதும் செல்வாக்கு மிகுதி'' இது வரலாற்றால் தெரியவரும் உண்மை. ''ஒரு மொழி ஒரு புதிய இனத்திற்கு அறிமுகம் ஆகும் போது அறிமுகம் ஆக்கப்படும் போது அஃது வெறும் கருவி என்ற அளவில் மட்டுமல்லாது

அறிமுகப்படுத்தப்படுவதில்லை. அந்த மொழிவழி, அந்த மொழிக்குரிய மக்களின் கலை, பண்பாடு, நாகரிகம் முதலான வையும் புதிதாகப் பயிலும் மக்களின் மனதில் ஏற்படுகிறது. உலகெங்கிலும் ஆங்கில, பிரெஞ்சு காலனிகள் பரவியபொழுது அந்தந்த மொழிகளும் குடியிருப்பு நாடுகளில் திணிக்கப்பட் டன. மண்ணைக்கைப்பற்றும் ஆதிக்கவாசிகள் மண்ணுக்குரிய மொழியைப் படிப்பதில்லை, பேசுவதில்லை, எழுதுவதில்லை மாறாக மண்ணின் மக்களைத் தங்கள் மொழியைப் படிக்க, எழுத, பேசப் படிக்குவித்தனர்.'' என்ற அறிஞர் கருத்தை உறுதி செய்யுமுகத்தான் வடநாட்டுக் காரர்கள் தென்னாடுகளிலும் மற்றைய மாநிலங்களிலும் தங்கள் செல்வாக்கை மேலும் மேலும் பெருக்கிக்கொள்ளவும் வாழ்க்கை ஏற்றத்தை அமைத்துக் கொள்ளவும் இந்திமொழியை ஆட்சிமொழியாக்கி மற்றவர் களை அடிமைகொள்ளவும் முயன்றனர், முயலுகின்றனர் இந் நிலையை அண்ணா,

> ''மரபு அழிக்கும் சதித்திட்டமாகவே நாம் இந்த இந்தியைக் கருதுகிறோம வெறும் மொழிப்பிரச்சனையாக அல்ல''

என்று காட்டுகின்றார் ஏனென்றால் ''அவ்வப்போது தோன்றும் எண்ணங்களை மட்டும் பெறுவது போதுமென்றால் எந்தமொழி யில் கற்றுக்கொண்டாலும் அம்மொழியில் பேசலாம்; போதும் ஆனால் விடுதலை உணர்ச்சிபெற அவ்வப்போது தோன்றும் உணர்ச்சிமட்டும் போதாது; அடிமைப்படுவதற்கு முன்பு உரிமை பெற்றவர்களாக இருந்த போது உலகம் மெச்ச வாழ்ந்தபோது அந்த மக்களின் முன்னோர்கள் எங்ஙனம் இருந்தனர் என்பது தெரிய வேண்டும்; அது குறித்துப் பேசவேண்டும்: பாரதியார் கூறியபடி அப்போதுதான் எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே! என்ற நிலை கிடைக்கும். அந்த நிலையை அவரவர் தத்தமது தாய்மொழி மூலமாகவே பெற முடியும் எனவே தாய்மொழி காப்பாற்றப் பட வேண்டும்'' என்றும் அவர் மேலும் காட்டுகின்றார்.

''இந்தியைப் பொதுமொழியாக ஏற்பது வேறு. இந்தியை ஆட்சிமொழியாக ஏற்பது வேறு. இந்த இரண்டும் ஒன்றன்பின்

ஒன்றாக நிகழ வேண்டும்'' என்று காந்தியடிகள் கருதியதாகக் கூறுவர். ஆனால் இக்கூற்று உண்மையாக இருந்தாலும் கூட அயல்மொழி ஆங்கில நீக்கத்திற்காக கூறியதாகக் கருதலாம். ஆனால் அவ்வுண்மையை இன்றைக்கு முற்றிலும் பொருத்திப் பார்க்கின்றபோது எந்த அளவிற்கு வடநாட்டு மொழியாகிய இந்தியின் மேலாண்மை இருக்கிறது என்பதையும் உணரலாம்.

பல்வேறு நிலைகளில் மக்களுக்குள் பாகுபாடுகள் இருப்பினும் மொழி உரிமைக்கு முனைந்து நிற்கின்ற போது ஒருமித்த கருத்துடையவராக மாறிவிடுகின்றனர். ஏனென்றால் ''மொழி உணர்ச்சி ஒரு இன மக்களுக்கு உயிரூட்டம் தருகிறது'' என்பதே யாகும். மொழி அழிந்திடின் அம்மொழி பேசுகின்ற மக்களினமும் அழிந்துவிடுவது உறுதியாகின்றது. அதனால்தான் எல்லாவற்றினும் மேலாக மொழியைக் கருதுகின்றனர். போற்றுகின்றனர். ''நாடு இல்லையெனினும் பெற்றுவிடலாம் இஸ்ரேலைப் போல ஆனால் மொழி அழிக்கப்படும் போது இனமும் அழிக்கிறதல்லவா'' என்ற கூற்றும் மேற்கூறிய கருத்தை உறுதி செய்ய துணைநிற்கின்றது.

தமிழினம் தொன்மைச் சிறப்புடையது. அவ்வினம் அழிந்து விடாமல் இருக்கவேண்டுமானால் தமிழ்மொழி காப்பாற்றப்பட வேண்டும். தமிழ் இனத்தை, திராவிட இனத்தைக் காக்கும் பொருட்டே அண்ணா, பெரியார் போன்ற சான்றோர்கள் தமிழ்மொழிக்கு எவ்வகையிலேனும் ஊறு வருகின்ற போது தளராமல் எதிர்க்க முனைந்தனர். ''ஆட்சிமொழியாக இந்தி என்று ஆகிவிட்ட பிறகு எவரும் அம்மொழியிடம் 'பயபக்தி விசுவாசம்' காட்ட முற்படுவரேயன்றி தமிழா கற்பர்... ஆட்சி மொழியாக இந்தி புகுந்தால் உலகு நம்மை அம்மொழிகொண்டு அளந்திட முற்படுமேயன்றி அழகு தமிழ் கொண்டா அறிந்திட முடியும்'' என்று அண்ணா கேட்கின்றார். தந்தை பெரியாரும் ''இந்திமொழி தமிழ்நாட்டையும் தமிழனையும் வடநாட்டானுக்கு-பார்ப்பனருக்கு அடிமைப்படுத்துவதல்லாமல் வேறு எந்த காரியத்திற்கும் பயன்படாது.'' என்கின்றார். ''பல்வேறு மொழி பண்பாட்டு நாகரிகங்களைக் கொண்ட இந்தியாவில் ஒரு

வட்டார மொழியை மட்டும் ஆட்சிமொழியாக்குவது இந்திய ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் குலைத்து ஒரு மொழிப் பகுதி மற்ற மொழிப் பகுதிகளை அடிமை கொண்டு விடுவதற்குத் துணைபுரிவதாகவே உள்ளது'' என்று அண்ணா குறிப்பிடுவதி லிருந்தும் உண்மை நிலை விளங்குகின்றது.

ஒரு நாட்டு மக்கள் அல்லது மாநில மக்கள் தங்கள் தங்கள் திறமைக்கேற்ப ஒன்றுக்கு மேற்பட்ட மொழியைக் கற்றுக் கொள்வது என்பது வேறு. ஆட்சியில் உள்ள அரசால் கட்டாயப் படுத்தி மொழியை மக்களிடையே திணிப்பது என்பது வேறு. அவ்வாறு திணித்திடின் அச்செயல் வன்மை நிலையாகுமே யொழிய மென்மை நிலை என்பதற்கில்லை.

இந்தியை எதிர்க்கின்ற அறிஞர்களின், அரசியலாளர்களின் மொழிக்கொள்கைதான் என்ன? அண்ணாவின் மொழிக் கொள்கைதான் என்ன? இந்தியாவில் உள்ள பதினைந்து தேசிய மொழிகளுக்கும் சம உரிமை அளித்துவிட்டு. பிறகு நம் நாட் டளவில் தொடர்புக்கு ஒரு மொழியை பொதுமொழியாக ஏற்றுக் கொள்வோம் என்று இந்தியையும் ஏற்றுக்கொண்டு அதையே ஆட்சிமொழியாகவும் ஆக்கிவிட முனைகின்றபோது மற்ற பதினான்கு மொழிகளைப் பேசுகின்ற மாநில மக்களின் மொழி மரபை, மொழி வளர்ச்சியைத் தடைசெய்வதாகத்தான் இருக்கிறது. அதனால்தான் மொழிக்காகப் போராடுகின்ற மக்கள் சற்று வன்மையையும் கையாள முனைகின்றார்கள்.

தமிழின் தொன்மை, மேன்மை, பல்வேறு இடையூறுகளுக் கிடையிலும் அது வளர்ந்த செழுமை இவைகளை உணர்ந்த அண்ணா பிறமொழி ஆதிக்கத்தால் தமிழ் நலியக்கூடுமோ, என அஞ்சி அம்மொழிகாக்க முன்நின்றார். தமிழ் உணர்வை மக் களுக்கு ஊட்டினார். தமிழ் நாட்டில் தமிழ் ஆட்சிமொழியாக விளங்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார். ''ஆட்சி மொழி என்றால் சட்டமன்றம் முதல் நீதிமன்றம் வரையில் அனைத் துமே தமிழிலேயே நடைபெற வேண்டும்'' என்றும் வலியுறுத்தி னார். தனிநாடு கோரிக்கையை வலியுறுத்தியதன் பயனாக தமிழ்மொழி உணர்வும் இன உணர்வும் மக்கள் கொண்டனர்.

'சென்னை மாநிலம்' மொழியின் பெயராலேயே தமிழ்நா என்று பெயர் மாற்றம் பெறுவதற்கும் வழிவகை மேற்கொண் டார்.

தமிழகத்தில் தமிழிலேயே ஆட்சி நடைபெற வேண்டும். இது சுதந்திரம் வழங்கிய உரிமைகளில் ஒன்று, ஆங்கிலம் ஆட்சி மொழியாக இல்லாது போனால் ஆங்கில அறிவைப் பெற முடியாதா? பெற வேறு வழியில்லையா என்பதைச் சான்றோர்கள் பரிசிலனை செய்யவேண்டும். மத்திய ஆட்சியில் ஆங்கிலம இணைமொழியாக நீடிக்கும் ஆதலால் இங்கும் (தமிழ்நாட்டில்) ஆங்கிலம் நீடிக்க வேண்டும். என்று சிலர் கூறுகின்றார்கள். அதிலிருக்கிற விவாத அல்லது நியாயத் தன்மைகளை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை'' ஆகவே தமிழ்நாட்டில் ஆட்சி மொழியாகவும் நடைமுறைவாழ்வில் பயன்படும் மொழியாகவும் தமிழே விளங்க வேண்டுமென்பது அண்ணாவின் கருத்துகளால் புலப்படும் உண்மை. பல்வேறு துறையில் அறிவை வளர்த்துக் கொள்ள ஆங்கில மொழியை அயல்மொழியாக இருப்பினும் துணையாக வைத்துக்கொள்ளவும் உடன்படும் அவர், இந்தியை அனுமதிக்காததற்குக் காரணங்கள் பல உண்டு. 'தடி எடுத்தவன் தண்டல்காரன்' என்பதற்கேற்ப வல்லாண்மை செலுத்தும் மொழியே செழிக்கும் என்பதால் அந்நிலையை முளையிலேயே வீழ்த்தவே அவர் இந்தியை எதிர்த்தார் எனலாம்.

ஒரு நாட்டின், மொழியைக் கொண்டே அந்நாட்டின் தொன்மை, மேன்மைகளை அறியமுடிகிறது. இந்திமொழி ஆதிக்கம் பெற்றுத் 'தமிழ்' மறைந்தொழிந்தால் தமிழர்களின் தொன்மை, மேன்மை, சிறப்பு மறக்கப்படுவதோடு, இந்திப் பண்பாடும் வடநாட்டவரின் செல்வாக்கும் உயரும் என்பது வெளிப்படையாகவே தெரிகிறது. இந்தியநாட்டின் தேசிய மொழிகளாகிய பதினைந்து மொழிகளையும் சம உரிமையுடனும் சிறப்புடனும் அரசு நடத்த வேண்டுமென்பதே அண்ணாவின் கருதுகோளாகும். அந்தந்த மாநில மொழிகளே அவ்வம்மாநில ஆட்சிமொழியாக விளங்க வேண்டுமென்பதும். இணைமொழியாக எல்லோரும் ஆங்கிலத்தைக் கொண்டால் தவறொன்றுமில்லை என்பதும் அண்ணாவின் மொழிக் கோட்பாடுகள்.

# Language Harmony For a Creative Living In Multi-Lingual India

R. Shanmugam.

Madurai Kamaraj University.

Language can be a bridge between man and man - man and his environment. It can also be a wall, shutting out perceptions - closing of Communication. Language is the means by which our perceptions translate themselves into thoughts. It is also the means by which we exchange thoughts with each other in mono-lingual or bi-lingual or multilingual social context.

Yet, language is far more than a passive instrument and far less than a perfect tool. The language we use plays a decisive role in the nature of ideas we form and express.

A knowledge of the inner workings of language, from basic sounds to complex grammar and its uses and abuses are indispensable for a man who wants to play a successful role in creative life. Without language, imagination, thought - even self - knowledge - are impossible.

Man alone can talk and he alone can use non-verbal symbols like written words, pictures, graphs, numbers etc.,

Man alone can bridge the gap between one person and another, conveying thoughts, feelings, desires, attitudes and

sharing in the rituals, the traditions, the conventions and also the knowledge and the superstitutions of his culture. He is, the one living being that can truly understand and misunderstand. On this basic skill, depends everything we call civilization, without this skill-without this language function. there would not have been any progress at all from time immemorial in the individual human life, in the community life and in the life of the nations around the world.

All known societies in the world, however "primitive" it may be, possess fully developed languages. To be deprived of speech is to lack the indispensable pre-requiste for a human community.

Let us look at the language component of our country for understanding the phenomenon unity in diversity"- the solidarity and amity.

According to the 1961 census Report, in India, We have 1652 languages, spoken by various major and minor communities. These languages are grouped acerding to their family basing on the structural pattern and historical relationship.

There are four major families of languages in India, namely 1) Indo-Aryan, 2) Dravidian 3) Austric and 4) Tibeto-Chinese. 1) The Indo-Aryan family claims 532 languages, 2) the Dravidian family 148, 3) The Austric 53, and 4) The Tibeto-Chinese. 227. Among the others, the sikim family possesses 9 languages. The remaining 601 languages are not indentified with any of the these family of languages.

Some 400 of these languages are tribal languages.

There are 12 major languages identified with the various Indian states: They are (1) Assamese, (2) Bengali (3) Guja-

rathi (4) Hindi (5) Kannada (6) Kashmiri (7) Malayalam (8) Marathi (9) Oriya (10) Punjabi (11) Tamil and (12) Telugu.

Besides these 12 major languages, Sindhi and Urudu have not been identified with any one particular state. English, the language of the so called modern intelligensia and sanskrit, the classical language providing identify and rootedness to all major language speakers in India, though appear now, poles apart-two extremes-in antiquity, in culture and in civilization, they, once - in the distant past-belonged to the same family of languages, namely Indo-European family. Hindi alone is spoken in six states: (1) Himachal Pradesh (2) Haryan (3) Rajasthan (4) Uttar Pradesh (5) Madhya pradesh and (6) Bihar.

Oriya, Assamese and Bengali in the eastern region of India, Marathi and Gujarathi in the Western part, Punjabi and Kashmiri in the northern section and Hindi in the centre are the Indo-Aryan languages.

Telugu, Tamil, Kannada, Malayalam in the southern region are the Dravidian languages.

These major languages are dominant as identity token, but not homogeneous in terms of communication. In fact they all have a number of regional, social and occupational dialects.

None of the Austric (Munda) and Tibeto-Chinese languages have either the numerical strength or a strong literary tradition so as to dictate recognition as a major language.

The sahitya Academy, New Delhi has recognized 22 languages as the national languages, of India including English for its various creative activities.

The iinguistic diversity mentioned, here, in the macro-structure of the country is reflected in its micro - structures, the contituent states. Eventhough most of the state boundaries are carved on the basis of dominant languages, the states continue to be multilingual.

The minority languages in the states range from 4.96 percent in Kerala to 84-54 percent in Nagaland of their respective populations.

In fact, it is often commented by the major world Demographers, that one could call India a country of linguistic minorities on the basis of the prevelent linguistic scene.

Even Hindi-Urudu, which forms the majority language spoken approximately by 46 percent of the total Indian population is a minority language in the context of the totality speakers using non-Hindi languages.

Here, the point one has to bear in mind is, that all the states in India are not mano-lingual and the minority speakers can not be ignored for the sake of the nation's amity and solidarity.

The linguistic heterogeneity need not blind us to the phenomenon of regional Universals, which do not bind India, as one language are and one culture area, The two thousand years of cultural continuity has resulted in such interpretation of elements of language and culture that modern Indo-Aryan and Dravidian languages are closer to each other than any one of them to its parent language.

One need not feel despair over this scene of diversity of languages and language families.

We have a best model within our own country a muslim Chief-Minister for a peaceful unifiedmulti-lingual administrative

Indian state in pondicherry. pondicherry state composes of speakers of Bengali-from Chandra Nagoor, Telugus from Enam Malayalees from Mahe, Tamils from pondicherry. Along with English and Hindi pondicherry state has recognized these four Indian languages as its state languages. The administration and the people do not find any difficulty. There is no languages conflict in pondicherry. Amity, solidarity and harmony prevailes in pondicherry. In contiguous regions from north to south, or from east to west there would hardly be any break in communication in terms of mutual inteligibility among two neighbouring language speakers in India.

Not only features of the spoken language form, but also the theme content the social themes, religions themes-the story plots, the motifs in the roal tradition and the modes of expression in the written literature display a Unity, verging almost on uniformity of pattern and configuration. Most to the names of the major Characters of the two great epics of India, Mahabaratha and Ramayana are still the proper names of the people in most parts of the country. Even names, Rama, Arjuna, Krishna, Dharmma and Govinda are the popular names all over India-Most of the names of the places-villages and towns-all over India derive from sanskrit names of ancient mythologies.

These ancient names, themes, plot-structures, characters in oral as wellas written tradition, even today, help the people all over the country to create a feeling of an Indianness and to generate the *pan-Indianness*. Modern creative writers in India even today project the plots, the themes, and the characters of the ancient mythologies skillfully in their creative works.

Now, where do we stand? Do we realize that language helps in innumerable ways in our life? De we know how to make use of these languages for creseative life?

Consider for a moment how politeness in language help to bring friendship in a social context between aliens. Address ing aliens bhaiyya (brother), bhehan (sister) and adding a sulfix "ji" maataaji (mother), Bhehanji (sister) in Hindi help to form a close-relationship reducing the distance between the inter-acting persons in social interaction.

Examine how the appropriate courteous phrases and expressions along with right voice and tone in the language help to create a proper understanding in various social contexts in human interaction.

The predictable and patterned system of language in use, in between a husband and wife, in between neighbours, in between other family members in between teacher and taught, in between a client and a lawyer, in between a patient and a doctor, in between a customer and as trader, in between an employer and an employee etc. decides the progress, the development, and the success or otherwise in creative living of the persons involved in the social context.

The joy and the sorrow, the pain and the pleasure, the anxiety and the frustration, the love, compassion and the hate, the despair and the serenity, the conflict and the harmony, the cruelty and the kindness are some of the psychological states of human mind. But they are the products of one's own, thought and action manifested throught one's own use of the language, one employs in social contexts and social interaction.

Language Expressions in spoken as well as written communication leading to anti-personal and anti-social sentiments mostly generate bitterness, anger, animosity, enimity, hatred and sorrow among friends, neighbours, relations and the people who come in contact through social interaction.

# சந்திப்பிழை

மு. சந்தானம்,
அருள் ஆனந்தர் கல்லூரி,
கருமாத்தூர்.

'எங்கும் பிழை எதிலும் பிழை' என்னும் அளவுக்கு இன்று தமிழ்ப் பிழைபட எழுதுகின்றோம். மாணவர்கள், பொது மக்கள், பத்திரிக்கையாளர்கள் என்றும் பல திறத்தாரும் இவ்வாறு எழுதுவதற்குக் காரணம் என்ன? போதுமான மொழியறிவின்மை ஒரு காரணமெனினும் தமிழ்மொழியமைப்பும் அதற்கு ஒரு தலைமையான காரணமாக அமைந்ததை மொழி நூல் வல்லவர்கள் அறிவர். மொழியமைப்பிலுள்ள சிக்கல்களே மொழியறிவைப் பெறுவதிலும் ஒரு தடையாக அமைந்து பிழைமலிவுக்கு வழிவகுக்கின்றன. ஆகவே மொழியமைப்பையும் மறுபரிசீலனை செய்து, வேண்டிய திருத்தங்களைச் செய்வதும் ஏற்றுக் கொள்வதும் மொழிவளர்ச்சிக்குப் பெரிதும் உதவுவதாக அமையும்.

தமிழில் பொதுவாக நிலவிவரும் பிழைகளில் சந்திப்பிழைகள் ஒருவகை. இச்சந்திப்பிழைக்குரிய காரணங்களை ஆராய்வதும் அவற்றைத் தவிர்த்தற்குரிய வழிவகைகளைப் பற்றிச் சிறிது சிந்திப்பதும் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## சந்தியின் தோற்றம்

சந்திகள் எப்படித் தோன்றின? சொற்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து பொருட் பயனளிக்கின்றன; அவ்வாறு தொடருங்கால் தொடர் மொழிகளும் தொகை மொழிகளும் உருவாகின்றன; சொற்கள் நெருங்கி இணைகின்ற பொழுது தொல்

முனைகள் ஒன்றோடன்று தொடர்பு கொண்டு ஒலிச் சேர்க்கையை உண்டாக்குகின்றன. இவ்வொலிச் சேர்க்கைகள் ஒலித் திரிபுக்கும் வழிவகுக்கின்றன. இத்திரிபு காலப் போக்கில் மிகுதியாகி விளங்குதற்கரிய செயற்கைத் தன்மையைப் பெற்றதுமுண்டு. இவை பின்னர் புணர்ச்சி விதிகளாக வரையறுக்கப் பெற்றுள்ளன.

வேள் + தியன் = வேட்டியன் ; முள் + தீது = முஃடீது

செய்யுட்கள் இத்தகைய சந்திகளைப் பெற்றதாலேயே பலரும் பயின்று பொருளுரை முடியாத அளவுக்கு இரும்புக் கடலையாகிவிட்டது. இவ்விதப் புணர்ச்சித் திரிபுகளால் புதிய பொருளொன்றும் அத்தொடருக்குக் கிடைப்பதில்லை. இது முதல்நிலை. இதற்கு மேலும் புணர்ச்சி வளர்ந்தது, கருத்து வேறுபாடு தரத்தொடங்கி, சொல்நிலையில் இணைவதோடன்றிப் பொருள் பயக்கும் புதிய கூறு தமிழ்ப்புணர்ச்சியில் இடம் பெற்றுள்ளது. தொகையாற்றலால் கிடைக்கும் பொருட் பேறுகள் இவ்வகையைச் சாரும். விட்டு இசைத்தால் ஒரு பொருளும் சேர்த்திசைத்தால் பிறிதொரு பொருளும் தருகின்ற பொருட்பேறு சந்தியிலக்கணத்தின் இன்றியமையாத ஒரு கூறாகும். சந்தியின் தவிர்க்க இயலாத் தலைமைக்கும் நிலைமைக்கும் இதுவே காரணம் எனலாம்.

| | | |
|---|---|---|
| கம்பிக்கட்டு | — | கம்பியால் கட்டிய கட்டு |
| கம்பி கட்டு | — | கம்பியைக் கட்டுக |
| தந்த சிலை | — | கொடுத்த சிலை |
| தந்தச்சிலை | — | தந்தத்தாலான சிலை |
| கை குட்டை | — | குட்டையான கை |
| கைக்குட்டை | — | சிறு துணி |

வேற்றுமையும் அவ்வழியும்:

சந்தி இலக்கணத்தைப் பொருளடிப்படையில் இருகூறாக எண்ணுவர்.

1. வேற்றுமைப் புணர்ச்சி

2. அல்வழிப் புணர்ச்சி

ஆனால் எல்லாச் சந்தி விதிகளும் இப்பாகுபாட்டின் அடிப் படையிலேயே வகுக்கப்படவில்லை. எல்லா இடங்களிலும் வேற்றுமைக்கும் அல்வழிக்கும் வெவ்வேறு வகையான புணர்ச்சி மாற்றங்கள் ஏற்படுவது இல்லை. இருவகையிலும் ஒரே வகை யான மாற்றத்தைப் பெறும் பொழுது இவ்வகைமை பொதுவாக அமையாது ஒரு பகுதி சார்ந்த பாகுபாடாக விளங்குகிறது.

அல்வழி, வேற்றுமை என்பன இடத்திற்கிடம் வேறுபடுவதும் கற்றுணர்ந்தவர்களுக்கே சந்தேகத்தைக் கிளறிவிடுவதுமுண்டு. இவ்வாறு சிக்கல் நிறைந்த இலக்கணக் குறிப்புகளைக் கொண்டு விதி வகுக்கப்படுவதால் பொது நிலையிலுள்ளவர்கள் தடுமாறு வதற்கு ஏதுவாகிறது. இடம் நோக்கியும் பொருள் நோக்கியும் நுட்பமான வேறுபாட்டை கொண்டு பாகுபடுத்தப்படுவதால் சராசரி மனிதர்கள் இடர்படுகின்றனர். இது மொழி வளர்ச்சிக்கு முட்டுக் கட்டையாக அமையும் ஒரு கூறாகும்.

முதலும் இறுதியும்:

சொற்கள் தொடருங்கால் நின்ற சொல்லின் ஈற்றெழுத்தும் வரும் சொல்லின் முதல் எழுத்துமே சந்திக்கின்றன. அந்த அடிப் படையில் புணர்ச்சியை நான்கு வகைப்படுத்துவர்.

1. உயிர் ஈறு - உயிர் முதல் 3. மெய் ஈறு - மெய் முதல்

2. உயிர் ஈறு - மெய் முதல் 4. மெய் ஈறு - உயிர் முதல்

இவற்றுள் மெய் ஈற்றின் முன்னர் உயிர் வரும் பொழுது இயல்பாக உயிர்-மெய்யாக மாறி விடுவதால் பெரிதும் சிக்கல் இல்லை. இதனையும் மெய் ஈறும் உயிர் முதலுமாகத் தனித் தனியே வைத்தெழுதுதல் நல்லது.

உயிர் ஈறு உயிர் முதலோடும் புணர்வதை உடம்படுமெய் என்னும் தனிவகையாகக் கருதுவர்.

மெய் ஈறு மெய் முதலோடும் உயிர் ஈறு மெய் முதலோடும்

சேரும் பொழுது பலவகையான மாற்றங்கள் நிகழ்கின்றன இவ்விருவகையுமே சிக்கல் நிரம்பியதாக உள்ளன. இதனைச் சிந்தித்துத் திருத்தியமைத்தல் இன்றையத் தேவை ஆகும்.

உயிர் ஈற்றின் முன்னர் மெய் முதல் வரும் வகையில் குறிப்பாக வல்லின முதல் மொழிகளும் அடங்கும்.

உடம்படுமெய்:

உயிர் ஈறும் உயிர் முதலும் புணரும்பொழுது இடையில் வரும் ய், வ் என்னும் மெய்களை உடம்படுமெய் என்பர். இவ்வுடம்படுமெய்யின் வருகையால் ஒலிப்பெளிமை கிடைக்கிறதே தவிர பொருள் மாற்றம் நிகழ்வதில்லை. எனவே தொகை மொழியாக ஒரு சொல் போல் அமையும் இடங்களில் சேர்த்து ஒலிக்க வேண்டிய கட்டாயம் இருப்பதால் அவ்விடங்களில் மட்டுமே உடம்படுமெய்யினைப் பயன்படுத்திக் கொண்டு ஏனைய இடங்களில் இயல்பாகவே எழுதுவதும் ஒலிப்பதும் குழப்பத்தைக் குறைக்க உதவும்.

உயிர்-மெய்:

'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்

க ச த ப மிகும்' என்னும் விதி தெளிவாக இருப்பினும் 'விதவாதன மன்னே' என்னும் புற நடையால் குழப்பத்திற் தள்ளாகிறது.

'வரகுகதிர்', ஏரி கரை' என்று இலக்கணம் கூறினும் 'வரகுக்கதிர், ஏரிக்கரை' யென்றே வழங்கி வருகின்றன. அணுக் குண்டு' என எழுதுவோர் மிகமிகக் குறைவு. 'தொலைப்பேசி, என்பதே முறையான அமைப்பாயினும் 'தொலைபேசி' என்றே எங்கும் வழங்குகிறது. பல்கலைக்கழகமே கூட 'மதுரை காமராசர்' என்பதை ஏற்றுக் கொள்கிறது.

தொடச் நிலையிலும் கூட எழுவாய்த் தொடரில் வலி மிகாது எனினும் 'கொக்குப் பறக்கும்' 'தீப்பிடித்தது' என வலி மிகுந்து வருகிறது. 'தீப்பிடித்தது' என வலி மிகுந்து வருகிறது. 'தீப்பிடித்தது' என்பதை ஓரெழுத்தொரு மொழி என்னும்

வேறொரு புதுவகையில் அடக்கலாம். ஆனால் அப்போது விதி 'எழுவாய்' என்னும் இலக்கண உறவிலிருந்து ஓரெழுத்தொரு மொழி என்னும் சொல்லமைப்புக்கு மாறுகிறது.

இரண்டாம் வேற்றுமை வெளிப்பட்டு வருமிடங்களிலே கூட வலி மிகாமல் 'விபத்தினை தவிர்ப்போம்' என்றெழுது கின்றனர். இதனை எல்லோர்க்கும் உரிய பொதுவிதியாகவும் புதுவிதியாகவும் ஏற்கலாமா?

தவிர்த்தற்கரிய தொகைச் சொற்களைத் தவிர ஏனைய் தொடர் மொழிகளிலெல்லாம் இயல்பாக எழுதுவதால் ஒரே சீரான நிலையை உருவாக்கவும் பராமரிக்கவும் இயலும். இதனால் தவறுகள் தவிர்க்கப்படும். இதனையே சரவணத் தமிழன் அவர்களும் எடுத்துக் கூறுகின்றார். இருபதாம் நூற்றாண்டில் தமிழுக்கு இலக்கணம் எழுதப் புகுந்த அவரது அறிவுரை வருமாறு:

''இனித் தொடராக்க நிலையில் இன்றியமையாத்தொகைத் தொடர் இடங்களில் அன்றிப் பிறவிடத்துப் பிரித்தெழுதலாம். பால்க்கடல், கல்கண்டு போன்ற சொற்பிழைகள் முட்டாட்டாமரை, நாட்டாளிதழ், அட்டுண்டுழனி போலும் செறிவுப் புணர்ச்சி- வலியுறுத்தலின் எதிர் விளைவே''[1]

பொருள் தெளிவுற விளங்குதற்குத் துணை செய்ய வெண்டிய புணர்ச்சி இலக்கணமே பொருள் புறப்பாட்டுக்குத் தடையாக மாறிவிட்டது. இலக்கணம் கூறும் விதிகளுக்கு மாறான சொல்வழக்குகள் தோன்றி உள்ளதும் இவண் நினைக் கத் தகும்.

'தமிழ் நாடு அரசு' என்பது தமிழ்நாட்டரசு என வழங்கு தல் வேண்டும். அங்குக் கண்டேன் என்பதே சரியான வழக் கென அ. கி. பரந்தாமனார் கூறியுள்ளார். ஆனால் சரவணத் தமிழன் மிகுந்தும் மிகாதும் வருமென்கிறார். இவ்வாறு இரு மாறுபட்ட நிலைகள் இலக்கணத்தில் இருப்பது எங்கும் எதிலும் ஒரு திடத்தன்மையில்லை என்பதற்குத் தகுந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

பண்டிதர் தமிழும் பத்திரிக்கைத் தமிழும்:

கடுமையாக, எளிதில் விளங்காத விதிகளை வகுத்துக் கொண்டு பிழை மலிவுக்குத் தம்மையறியாமல் வழி வகுக்கும் பண்டிதர் ஒரு புறம், மக்களுக்குப் புரிந்தால் போதும் இலக்கண வரம்புகள் பற்றிக் கவலையில்லை என தம் விருப்பம் போல் எழுதிவரும் ஜனரஞ்சகப் பத்திரிக்கையாளர்கள் ஒருபுறம் என இருவேறு நிலைகள் எழுத்துவழக்கில் இப்பொழுது நிலவி வருகின்றன. இவ்விரண்டினையும் சீர்தூக்கி ஆராய்ந்து ஏற்புடைய மாறுதல்களைப் பொது முடிவாக அறிவிக்க வேண்டும். மொழி நூல் வல்லுநரும் எழுத்தாளர்களும் ஒன்று கூடி ஒரு முடிவுக்கு வருவது எதிர்காலத் தமிழ் வளர்ச்சிக்கும் தமிழ் மாணவர்களுக்கும் காலத்தால் செய்யும் உதவியாகும்.

மனச்சுமை:

சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் நன்னூலாருக்கே சந்தி விதிகளைக் கூற நூற்று ஐம்பத்தேழு நூற்பாக்கள் தேவைப் படுகின்றன, இத்தனை நூற்பாக்களையும் அவையுணர்த்தும் கருத்துக்களையும் படித்துணர்ந்து பயன்படுத்துதல் அரிதினும் அரிதாகும். விரைவாகவும் தெளிவாகவும் மொழியறிவைப் பெருக்குதற்கு ஏதுவாக இவற்றைத் திருத்தியமைக்க வேண்டும்; எளிமைப்படுத்துதல் வேண்டும்.

பொருளுணர்தற்குத் தேவையான புணர்ச்சிகளைத் தவிர ஏனையவற்றையெல்லாம் கைவிடுவது மலையேறுவோர்க்குச் சுமையைக் குறைப்பதுபோல் மொழிபயில முனைவோர்க்கு மனைச் சுமையைக் குறைப்பதாகும்.

முடிவுரை:

தொகைச்சொற்கள் ஒரே சொல் போன்றன. ஆகையால் அவை தவிரப் பிற இடங்களில் வரும் புணர்ச்சிகள் இயன்றவரை கைவிடப் பெறுதல் வேண்டும்.

சந்தி விதிகள் எளிதில் அனைவரும் மனதில் கொள்ளுவதற் கேற்பச் சுருக்கமாகவும் தெளிவாகவும் அமைக்கப்பெறுதல் வேண்டும்.

# தமிழ் நிகண்டுகளின் யாப்பு

மா. சற்குணம்,

ஸ்ரீ. சி. பா. சு. தமிழ்க்கல்லூரி, மயிலம்

தமிழில் சொற்பொருள் உரைக்கும் கருவிநூல்களாகிய நிகண்டுகள், தொடக்ககாலம் முதல் வெவ்வேறு யாப்புகளில் இயற்றப் பெற்றுள்ளன. தமிழ் நிகண்டுகளின் யாப்பு குறித்து ஆராயும் நோக்குடன் இக்கட்டுரை எழுதப்பெறுகிறது.

கிடைத்துள்ள நிகண்டுகளுள் காலத்தால் முந்தியதான சேந்தன் திவாகரம் 'நூற்பா முறையில் அமைந்துள்ளது. தமிழில் கிடைத்துள்ள முதல் நூலாகிய தொல்காப்பியம் முதலான பண்டைய நூல்களில் அமைந்திருந்த எதுகை நயமிக்க சொல்லாட்சி முறைகள் நிகண்டுகளில் நன்கு வளர்ச்சிபெற்று அமைந்துள்ளன. தொல்காப்பிய உரியியலின்கண் ஒரே அடியில் வெவ்வேறு சொற்களுக்குப் பொருள்கூறும் நூற்பாக்கள் பல இடம்பெற்றுள்ளன. அந்நூற்பாக்களில் பல எதுகைமுறையின் இயைபிற்கேற்ப அடுத்தடுத்து வைக்கப்பெற்றிருப்பதைக் காணலாம். சான்றுக்கு இரு நூற்பாக்களைச் சுட்டலாம்.

''உருவுட் காகும் புரையுயர் பாகும்'' (உரி.4)

''குருவும் கெழுவும் நிறனா கும்மே'' (உரி.5)

இந்நூற்பாக்களின் முதற்சீரில் அமைந்துள்ள உரு, குரு என்னும் சொல்லோசை மனப்பாடம் செய்வோர்க்கு ஒருவகையில் எளிதாகுமாறு அமைந்துள்ளன எனலாம். தொல்காப்பியத்தின் கண் இவ்வாறு பலவிடங்களில் நூற்பாக்கள் அமைக்கப் பெற்றுள்ளன. ஒருநூற்பாவில் அமைந்துள்ள அடிகள் பலவற்றின் தொடக்கத்திலும் ஒரே எதுகையுடைய சொற்களை வைத்துப்

பாடும்முறை நூற்பா யாப்பாலான திவாகர நிகண்டில் தொடங்கி பல நிகண்டுகளிலும் பின்பற்றப்பட்டுள்ளது.

திவாகரத்தின் பதினோரம் தொகுதியில் உள்ள நூற்பாக்களை எதுகை முறையில்தான் ஆசிரியர் இயற்றியிருந்தார்.

''ஊறே யிடையூறு முற்றறி புலனும் (280)
நூறே பொடியு நூறு மாகும் (281)
ஏறி யுலகு மெல்லையு மாகும் (282)
சேணோ வுயர்வு நீளமு மாகும்'' (283)

எனும் இவ்வடிகளைத் காணுமளவில் பல்பொருள்சொற்கள் எதுகை முறையில் இயற்றப் பெற்றன என்பது எளிதிற் புலனாகும். பதினோராம் தொகுதியில் உள்ள நூற்பாக்கள் பெரும்பாலும் இவ்வாறே அமைக்கப் பெற்றன. ஆயினும் பின்வந்தோர் அவற்றை ஆதியிற்பொருள் அந்தத்துப்பொருள் எனப்பகுத்தும், அகரநிரலில் ஒழுங்குபடுத்தியும் அமைப்பாராயினர். திவாகரத்துக்குப்பின் கி.பி.16 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற அகராதி நிகண்டு முதலானவற்றை அறிந்தபின் சிலர் இம்முயற்சியில் ஈடுபட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது. நினைவில் வைத்துக் கொள்ள எளிதான முறைகளுள் ஒன்றாகிய எதுகை முறையில் ஆசிரியர் அந்நூற்பாக்களை இயற்றியது பொருத்தமேயாகும், எளிதில் நினைவுபடுத்திக்கொள்ள உதவுவதோடு மட்டுமன்றி, வேண்டிய சொற்களை எதுகை முறை நோக்கிக் கண்டுகொள்வதற்கும் பயன்படுமாறு அம்முறை அமைந்திருந்தது. பின்வந்தோர் அம்முறையை மாற்றி விட்டது போல பிங்கலந்தையிலும், நூலாசிரியர் அமைத்த முறையைப் பதிப்பாசிரியர் சிவன்பிள்ளை மாற்றியமைத்து விட்டார்.

கி.பி.14 ஆம் நூற்றாண்டில் தோன்றியஉரிச்சொல் நிகண்டு வெண்பா யாப்பால் இயற்றப்பெற்றது. தமிழிலக்கிய வரலாற்றில் பண்டைக்காலத்தில் நூற்பா, ஆசிரிய யாப்பு ஆகியவற்றையடுத்து வெண்பா யாப்பே பெருவழக்கானது போல, நிகண்டு வரலாற்றிலும் நூற்பா யாப்பையடுத்து வெண்பா யாப்புச் செல்வாக்குப் பெற்றுவிட்டது. வெண்பா யாப்பில் இடம்பெறும்

எதுகை, மோனை, தளையமைப்பு ஆகியன செய்யுட்களை எளிதில் நினைவில்கொள்ள ஏற்றவையாகும். ஆயினும், பின் வந்தோர் இதனைப் பின்பற்றவில்லை. 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நாமதீப நிகண்டு மட்டும் உரிச்சொல் நிகண்டைப் போல் வெண்பா யாப்பினால் இயற்றப்பெற்றது. உரிச்சொல் நிகண்டை அடுத்துத் தோன்றிய நிகண்டுகளாகிய கயாதரம், பாரதிதீபம் ஆகியவற்றுள் கட்டளைக் கலித்துறை என்னும் யாப்பு பயன்படுத்தப் பெற்றுள்ளது. கட்டளைக் கலித்துறை யாப்பு முற்காலத்தில் பெருவழக்காய் இருந்தது. யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம், நவநீதப்பாட்டியல் மற்றும் எண்ணற்ற கோவைகள் ஆகியன இந்த யாப்புமுறையில் அமைந்த நூல் களாகும். இனிய ஓசையும் எண்ணினால் வரையறை செய்யப் பெற்ற எழுத்தமைதியும், எதுகை மோனை முதலியவற்றின் நயமும் இவ்வகைச் செய்யுட்களைக் கற்போர்க்கு இன்பூட்டு வனவாய் அமைந்தன எனலாம். இத்தகுநலங்களால் நினைவில் நிற்க ஏற்றதொரு பாவினமாக இது கருதப்பட்டிருக்கும். கட்ட ளைக் கலித்துறையில் எழுத்தெண்ணிப்பாடும் முறை அமைந் திருப்பதால் வெண்பா யாப்பை நினைவில் கொள்வதைவிட இது மேலும் எளிதாய் அமைந்தது எனலாம். வெண்பாவிலிருந்த எதுகை, மோனை, தளைகள், இனிய ஓசை ஆகியவற்றுடன் எழுத்துகளின் எண்ணிக்கை வரையறை என்னும் ஒரு புதிய பற்றுக்கோடும் நினைவில் கொள்வதற்கு ஏற்றாற்போல் அமைந் தது எனலாம்.

நூல் முழுவதையும் தொடர்ச்சியாக மனம்கொள்வதற் கேற்பக் கயாதர நிகண்டின் அனைத்துச் செய்யுட்களும் அந்தாதி யாக இயற்றப் பெற்றுள்ளன என்பதும் இங்குக் கருதத்தக்கது. பாரதிதீபம் என்னும் நிகண்டும், நீண்ட அடிகளையுடைய கட்டளைக் கலித்துறை என்னும் பாவினத்தால் இயற்றப் பெற்றுள்ளது. அதில் அடைமொழியின்றிப் பொருட்பெயர்கள் தரப்பெற்றுள்ளன. மிகுதியான பொருட்பெயர்கள் இதன்கண் தொகுத்து அளிக்கப் பெற்றுள்ளன. இவ்விரண்டு நூல்களைத் தவிரப் பின்வந்த நிகண்டுகள் எவற்றிலும் இவ்வகை யாப்புப் பயன்படுத்தப் பெறவில்லை.

மனப்பாடம் செய்வதற்கு மேலும் எளிமையானதொரு யாப்பில் நிகண்டுகளைச் செய்யும் முயற்சி அடுத்து மேற் கொள்ளப் பெற்றது. அம்முயற்சி முதன்முறையாக கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் தோன்றிய சூடாமணி நிகண்டில் அமைந் துள்ளது. சூடாமணி நிகண்டு முழுவதும் விருத்த யாப்பால் இயற்றப் பெற்றது. ஏனைய யாப்புகளைவிட விருத்த யாப்பு இன்னோசை உடையது; நீண்ட அடிகளை அமைப்பதற்கு இடம்தருவதான ஒருவகை நெகிழ்ச்சி உடையது; ஏனைய யாப்பு வகைகளில் இருந்த அவ்வளவு இலக்கணக் கட்டுப்பாடுகள் இல்லாதது.

வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய யாப்புகளில் ஒரு வகை இலக்கண வரையறைக்குட்பட்டே நிகண்டு நூலார் சொற் களை அமைக்க வேண்டியிருந்தது. பலபொருளுடைய ஒரு சொல்லை வெண்பாவில் கூறுகையில் அடி நிரம்பிவிடின் ஒன்றிரண்டு பொருள்களை விட்டுவிட நேர்ந்திருக்கலாம். சொற்களைத் தளை வரையறைக்குட்பட்ட சீர்களாக அமைப்ப திலும் தடைகள் பல ஏற்பட்டிருக்கும். இவற்றால் குறைபாடுகள் சில அமைந்திருக்கக்கூடும் கட்டளைக் கலித்துறை யாப்பில் எழுத்தெண்ணிப்பாடும் வரையறைக்குட்பட்டே சொற்பொருள் களை உணர்த்த வேண்டிய நெருக்கடி உள்ளமையும் இங்குக் கருதத்தக்கது. இவ்வரையறைகள் இல்லாமல் இருந்தால் சொற் பொருள்களைத் தடையின்றி வெளியிட முடியும் எனக்கருதி, மண்டல புருடர் அதற்கேற்ற யாப்பாக விருத்த யாப்பைத் தேர்ந்தெடுத்தார் போலும். அவருடைய முயற்சி வெற்றி யளித்தது என்றே கூறவேண்டும். அவருக்கு முன்னும் பின்னும் பலர் நிகண்டு நூல்களைச் செய்திருப்பினும் சூடாமணி நிகண் டினைப் போல ஏனையவை செல்வாக்குப் பெறமுடியவில்லை. இதனை வையாபுரிப்பிள்ளை, ‘சூடாமணி என்னும் வாடாத நிகண்டு விளக்கின்முன் ரேவண சித்தர் முதலியோர் இயற்றிய நூல்கள் ஒளியின்றி மங்கிப்போயினவென்றே கூறவேண்டும்’ எனக் குறித்துள்ளார். பிற நிகண்டுகளைவிடச் சூடாமணி நிகண்டு மனப்பாடம் செய்வதற்கு ஏற்றாற்போல் எளிமையான முறை யில் அமைந்திருந்தமை, அது மிகுதியாகப் போற்றப்பட்டமைக் குக் காரணமாகும்.

கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஆசிரிய நிகண்டு, மிக நீண்ட அடிகளைக் கொண்ட பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள் போன்ற விருத்தப்பா யாப்பில் இயற்றப் பெற்றது. அதன்கண் சொற்களுக்கு உரைக்கப்பெறும் பொருள்கள் இத்தனை எனத் தொகுத்துச் சுட்டப்பெற்றுள்ளது.

''அமுதம்ப யம்பயசு கிரமின் னான்குமே
அன்புடைய பாலின்பெயர்''

இவ்வாறு அந்நிகண்டில் ஒவ்வொரு சொல்லுக்கும் இத்தனை பொருள் எனக் கொடுத்திருக்கும் முறை சொற்களுக்குரிய பொருள்களின் எண்ணிக்கையை மறவாது இருப்பதற்கான ஓர் எளியவழி எனலாம். சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதிமுறையில் தோன்றிய அரும்பொருள் விளக்க நிகண்டு, நாநார்த்த தீபிகை ஆகியன விருத்த யாப்பால் இயன்றவையே. ஓரெதுகைச் சொற்களில் பிறவெதுகைச் சொற்களைக் கலந்து செய்யுள் இயற்றுதல், அடைமொழிகளைப் புணர்த்திச் சொற்களைக் கூறுதல் என்பனவாகச் சூடாமணியில் இருந்த சில குறைகள் பின்வந்த நிகண்டுகளுள் படிப்படியாகத் தவிர்க்கப் பெற்றுள்ளன. அரும்பொருள் விளக்க நிகண்டில் கலப்பெதுகை யின்றிச் சொற்கள் உரைக்கப் பெற்றுள்ளன. நாநார்த்த தீபிகையில் சொற்கள் எதுகைக் கலப்பின்றியும் அடைமொழி களின்றியும் கூறப்பெற்றுள்ளன. விருத்த யாப்புமுறையில் பல் பொருட் சூடாமணியின் முதற்காண்டம், பொதிகை நிகண்டின் முதற்பகுதி, சிந்தாமணி நிகண்டு, விரிவு நிகண்டு ஆகியனவும் இயற்றப் பெற்றுள்ளன.

திவாகரத்தைப் போல் பின்தோன்றிய நிகண்டுகள் பல, நூற்பா யாப்பினால் இயற்றப் பெற்றுள்ளன. அகராதி நிகண்டு, பல்பொருள் சூடாமணியின் இரண்டாம் காண்டம், கயிலாச நிகண்டு சூடாமணி, பொதிகை நிகண்டின் இரண்டாம் பகுதி, பொருட்டொகை நிகண்டு, கந்தசுவாமியம், தமிழ் உரிச்சொற் பனுவல் ஆகியன நூற்பா யாப்பில் தோன்றிய நிகண்டுகளாகும். சொற்பொருள்களைஅறிவதற்கு,நூலின்செய்யுட்கள்அனைத்தை யும்வரன் முறையாக மனப்பாடம் செய்வதைவிடச் சொற்களை

அகர நிரலில் அமைத்து வேண்டியபொழுது பார்த்துத் தெரிந்து கொள்ளலாம் என்ற கருத்து 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியுள்ளது. அதன் விளைவாகத் தோன்றியதே அகராதி நிகண்டு. அக்கருத்துத் தோன்றியபின் இடையில் பின்பற்றப் படாது போன நூற்பாயாப்பிற்கு மீண்டும் செல்வாக்கு ஏற் பட்டது. மேற்குறித்த நூற்பா யாப்பாலான நிகண்டுகளுள் பல அகரநிரலில் சொற்களை நிறுத்திப் பொருள் கூறியுள்ளன என்பதை நிகண்டு வரலாற்றில் அறியலாம். சொற்களை அகர வரிசையில் அமைத்துப் பொருள் கூறுவதற்கு மற்ற யாப்புகளை விட நூற்பா யாப்பே ஏற்றது எனக் கருதப் பெற்றிருக்கலாம். சொற்பொருள்களின் எண்ணிக்கைக்கேற்ப செய்யுள் வரிகளை நீட்டியோ குறுகியோ இயற்றுவதற்கும், எதுகை மோனைகளை பொருட்படுத்தாது அகரவரிசை முறையில் சொற்களை வைத்தி யற்றுதற்கும் நூற்பா யாப்பு ஏற்றதெனத் தேர்ந்தெடுத்திருக்கக் கூடும்.

ஆகவே நிகண்டு இயற்றுதற்கு நூற்பா (ஆசிரியம்), வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம் ஆகிய யாப்புகள் செய்யுள் வரிகளை நீட்டியோ குறுக்கியோ இயற்றுவதற்கும், எதுகை மோனைகளைப் மனப்பாடம் செய்வதற்கு ஆசிரியம் அவ்வளவு ஏற்றதன்று என்பதால் நூற்பா யாப்பில் அமைந்த திவாகரம், பிங்கலந்தை ஆகியவற்றின் நூற்பா யாப்புமுறை யினின்றும் பின்வந்த நூல்கள் வேறுபடலாயின. நூற்பாவினும் வெண்பா எளிதானது, எழுத்து வரையறையும் சேர்ந்து அமைந்த கலித்துறையாப்பு அதனினும் எளிமையானது. வெண்பா, கலித் துறை ஆகியவற்றுக்கு இருந்த எதுகை, மோனை போன்ற ஒலி அமைப்புடன் விருத்தப்பாவில் ஓர் இனிய இசையோட்டமும் சேர்ந்துள்ளது, எனவே நிகண்டுகளில் விருத்தப்பா மிகுதியும் பயன்படுத்தப் பெற்றது. சொற்செட்டும், செறிவும் உள்ள பழைய நடை மாறி ஓட்டமும் எளிமையும் நெகிழ்ச்சியும் கொண்ட புதிய நடை வளரலாயிற்று என்பர். நிகண்டுகளில் ஏற்பட்ட இவ்வகையான யாப்பு மாற்றத்திற்கு மற்றுமொரு காரணமும் உண்டு. ஏற்கனவே இருந்த நிகண்டுகளின் சொல் தொகுதிகளை அடிப்படையாகக் கொண்டு பின்வந்தோர் புதிய சொல்லாட்சிகளையும் சேர்த்து நூல்களைச் செய்துள்ளனர்.

## 'நெடுநல்வாடையில் தொடரமைப்பு'

இரா. சாந்தி,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

பழந்தமிழ் இலக்கியங்களில் ஒன்றான, நக்கீரர் இயற்றிய 'நெடுநல்வாடை' என்னும் நெடும்பாட்டின்கண் அமைந்துள்ள தொடரமைப்பினை விளக்குவதே இவ்ஆய்வின் நோக்கமாகும்.

நெடுநல்வாடையின் பாடுபொருள் போர்க்களம் சென்ற தலைவனைப் பிரிந்துறையும் தலைவி, கூதிர்காலத்தில் வாட்டும் கொடிய வாடையில் தலைவனை எதிர்நோக்கியிருக்கும் நிலையில், பிரிவு ஆற்றலாய் நெட்டுயிர்த்தல் கண்டசெவிலி, தலைவியின் இன்னல் தீரும் பொருட்டு,

''நலங்கிளர் அரிவைக்கு
இன்னா அரும்படர் தீர விறல் தந்து......
இன்னே முடிகதில் அம்ம...
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே''
எனக் கொற்றவையைப் பரவுவதாக அமைந்துள்ளது.

வாக்கிய அமைப்பு:

வாக்கிய அமைப்பு என்று பார்த்தால், நூற்றி எண்பத்தெட்டு அடிகளைக் கொண்டமைந்துள்ள இந்நெடும்பாடல் முழுதும் ஒரே வாக்கியமாகவே அமைந்துள்ளது. அவ்வாக்கியத்தின் அமைப்பினைக் கீழ் வரும் கிளை மரப்படத்தால் விளக்கலாம்.

இவ்வியங்கோள் வாக்கியம் தன்னகத்தே பல எச்சத்தொடர்களைக் கொண்டு விளங்குகின்றது. அவ்வெச்சத் தொடர்கள்




தலைவியின் துயருக்குக் காரணமாக அமைந்துள்ள சூழலை — (பருவ நிலையை) கூதிர்காலத்தை-விளக்குவனவாக; தலைவி துயருறும் இடத்தில் அமைப்பினை விளக்குவனவாக, தலைவியைத் தேற்றும் தோழியர்கள், செவிலியர்களின் செயலை விளக்குவனவாக, தலைவன் உறையும் பாசறையையும், அப் பாசறைக்கண்ணே தலைவன் வினையாற்றும் பாங்கினையும் விளக்குவனவாகப் பல வகைகளில் செயற்படும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன.

அடிப்படையில் - புதைநிலையில் பார்த்தால் - இவ்வெச்சத் தொடர்கள் யாவும் வாக்கியத்தில் இருந்து வருவிக்கப்பட்டன வாகவே உள்ளன. சிலவற்றைச் சான்றாக கூறலாம்.

> வையகம் பனிப்ப......
> பொய்யாவானம் புதுப்பெயல் பொழிந்தென......

என்றமையும் இரண்டு எச்சத்தொடர்களையும் எடுத்துக் கொண்டால் இவை முறையே ‘வையகம் பனித்தது’ என்ற வாக்கியத்திலிருந்தும் ‘பொய்யாவானம் புதுப்பெயல் பொழிந்தது’ என்ற வாக்கியத்திலிருந்தும் வருவிக்கப்பட்ட எச்சத் தொடர்கள் என்பது புலனாகும்.

இதுபோலவே

மாமேயல் மறப்ப......

பறவை படிவன வீழ

கறவை கன்று கோள் ஒழிய......

போன்ற எச்சத்தொடர்களும் கூட முறையே மறந்தன... வீழ்ந்தன, ஒழிந்தன என்ற முற்றுப்பொருண்மையிலிருந்தே வருவிக்கப்பட்டன என்பது வெளிப்படையாம். இவ் எச்சத் தொடர்கள் யாவும் தலைமை வாக்கியத்தின் நேரடி ஆதிக்கத் தின் கீழ் உள்ள பெயர்த் தொடர் அல்லது வினைத்தொடர் இவற்றின் கீழ் அமையும் அடைத்தொடர்களாகவே செயல்படு கின்றன எனலாம். இதன் அடிப்படையில் மேலே குறித்த கிளை மரப்படத்தைச் சிறிது மாற்றிப் பின்வருமாறு அமைக்கலாம்.




இதுவே நெடுநல்வாடை என்னும் நெடும்பாட்டின் ஒட்டு மொத்தமான வாக்கிய அமைப்பாகும்.

**தொடரமைப்பு:**

வாக்கியங்களில் உறுப்புக்களாக அமைகின்ற தொடர்களின் அமைப்பு நெடுநல்வாடையில் எவ்வாறு அமைந்துள்ளது என் பதைக் காணும் போது, தொடர்களை அவற்றில் அமைந்துள்ள தலைமையுறுப்பின் அடிப்படையில் இரண்டு பெரும் பிரிவாகப்

பிரிக்கலாம். பெயரைத் தலைமையுறுப்பாகக் கொண்டமையும் தொடர்களைப் பெயர்த்தொடர்கள் என்றும்; வினையைத் தலைமையுறுப்பாகக் கொண்டமையும் தொடர்களை வினைத் தொடர்கள் என்றும் இரண்டாகப் பகுத்துக் கொண்டு ஆராயலாம்.

(எ.டு.) பல்லிருங் கூந்தல் ... பெயர்த்தொடர்

இன்னே முடிகநில் ... வினைத்தொடர்

**பெயர்த்தொடர்கள்:**

பெயர்த்தொடர்கள் → (பெயர் அடை) + பெயர்

என்ற அமைப்பில் அமைந்துள்ளன. இத்தொடர்களில் பெயர் அடைகள் விருப்புறுப்பாக வரும்தன்மையனவே. எனினும் நெடுநல்வாடையைப் பொறுத்தவரையில் பெயரடை இடம் பெறாத பெயர்த்தொடர்கள் அருகியே காணப்படுகின்றன. பெயர்கள் யாவும் அடைபெற்று வழங்குதலே பெருவழக்காக உள்ளது. ஒரே பெயர் ஒன்றுக்கு மேற்பட்ட அடைகள் பெற்று வருவதையும் இப்பாட்டில் காணமுடிகிறது. இதனைச் சங்க நெடும்பாடல்களுக்கான பொதுக்கூறு என்றும் கூறலாம்.

இதற்குச்சான்றாகப் பாடலின் தலைப்பையே கூறலாம்

நெடு நல் வாடை

இங்கு வாடை என்ற பெயர்ச்சொல் நெடு, நல் என இரண்டு அடைகள் பெற்று வருவதைக் காணமுடிகின்றது.

பல்லிருங்கூந்தல்,
வடவர்தந்த வான்கேழ் வட்டம்,
கொடுங்கோற்கோவலர்,
ஈரவெண்மணல்

எனப் பல தொடர்கள் இவ்வகையில் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. இவ்வடைத்தொடர்களை அவற்றின் அமைப் படிப்படையில் இரண்டாகப் பகுக்கலாம். ஒன்று இணைநிலை அமைப்பில் அமைந்த அடைத்தொடர்கள் (Coordinative

Attributes); மற்றொன்று துணை நிலை அமைப்பில் அமைந்த அடைத்தொடர்கள் (Subordinative Attributes.)

இணைநிலை அடைத்தொடர்:-

ஒரு தலைமைப் பெயரையே ஒன்றுக்கு மேற்பட்ட அடைகள் சிறப்பிக்கும் எனில் அவை இணைநிலை அடைத் தொடர்களாம்.

இவ்வகை அடைத்தொடர்களுக்கு,
ஈர வெண் மணல்
அகல் நெடுந்தெரு

நீள் திரள் தடக் கை என்றமையும் தொடர்களைச்சான்றாகக் கூறலாம். முதல் தொடரில் ஈர, வெண் ஆகிய இரண்டு அடைகளும் 'மணல்' என்னும் தலைமைப் பெயரையே இணையாகச் சிறப்பிக்கின்றன. இரண்டாவது தொடரில் அகல், நெடும் ஆகிய இரண்டு அடைகளும் 'தெரு' என்னும் தலைமைப் பெயரையே இணைந்து சிறப்பிக்கின்றன. மூன்றாவது தொடரில் நீள், திரள், தட ஆகிய மூன்று அடைகளுமே கை என்ற பெயரையே ஒருசேர இணைந்து சிறப்பிக்கின்றன. இவ் எடுத்துக்காட்டுக்களில் அடையாக அமைந்துள்ள ஒவ்வொன்றும் இணையான நிலையில் நின்று செயல்படுகின்றன.

துணைநிலை அடைத்தொடர்:

ஓர் அடைத்தொடரில் உள்ள உறுப்புக்கள் ஒன்று மற்றொன்றைச் சிறப்பிக்கும் வகையில் அமைந்து, மொத்தமாகத் தொடர் நிலையில் நின்று தலைப்பெயரைச் சிறப்பிப்பதனைத் துணைநிலை அடைத்தொடர் எனலாம். இதற்குச் சான்றாக

கொடுங் கோற் கோவலர்
பைங்கால் கொக்கு
நீடிதழ்க் கண்ணி.

போன்ற அடைத்தொடர்களைக் கூறலாம். இவற்றில் கொடு, பைம், நீடு முதலியன முறையே கோல், கால், இதழ் ஆகிய அடைச் சொற்களைச் சிறப்பிக்கும் அடைச்சொற்களாகவே அமைந்துள்ளன. அவ்வடைச்சொற்களுடன் இணைந்த பின்னரே தலைமைப்பெயர்ச்சொற்களாகிய கோவலர், கொக்கு,

கண்ணி ஆகியவற்றைச் சிறப்பிக்கின்றன. இதனால் இவற்றைத் துணைநிலை அடைத்தொடர்கள் எனலாம். நெடுநல்வாடையில் துணைநிலை அடைத்தொடர்களே பெருவழக்கில் உள்ளன.

**வினைத்தொடர்கள்:-**

நெடுநல்வாடையில் அமையும் வினைத்தொடர்கள் வினை அடை வினை என்ற நிலையில் அமைகின்றன. இவ்வினையடைகளை அவற்றின் அமைப்படிப்படையில் மூன்று வகையாகப் பகுக்கலாம்.

முதல்வகை வினையடைகள் வேற்றுமைத் தொடர்களாகச் செயல்படுகின்றன. சான்றாக

தண்ணீர் உண்ணார்
நலங்கிளர் அரிவைக்கு

என்றமையும் தொடர்களை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

இரண்டாவது வகை வினையடைகள் வினையடிப்பிறந்த விவை எச்சங்களாம். இவை முற்றுவிணை வாக்கியங்களிலிருந்தே வருவிக்கப்பட்ட வடிவங்களாம். இவை இப்பாடல் முழுதும் விரபி வந்துள்ளன. இவற்றுள்ளும் 'செய' எனும் வாய்பாட்டு வினையெச்சம் முதலிடத்தைப் பெறுகிறது. செய்து எனும் வாய்ப்பாட்டு வினை எச்சம் அடுத்த இடத்தைப் பெறுகிறது. சான்றாக, பனிப்ப, மறப்ப, கற்ப, வணங்க என்பவற்றைச் செயவெனும் வாய்ப்பாட்டு வினையெச்சத்திற்குச் சான்றாகக் கூறலாம்.

பொருத்தி, அமைத்து, சுதையுரீஇ, விளைஇ போன்றவற்றை 'செய்து' வாய்பாட்டு வினையெச்சங்களுக்குச் சான்றாகக் கூறலாம்.

மூன்றாவது வகையான வினையடைகள் வினையடிபிறவாத காலம், இடம், முறை இவற்றை உணர்த்தும் தன்மையன. அவை முறையே,

நள்ளென் யாமத்து (காலம்)
இன்னே முடிக (முறை)
நிலமிசைப் பரப்பி (இடம்)

என்றமைந்துள்ளன.

# Homonyms In Tamil

H, Chithiraputhiran,
Tamil University

0. Multiple meaning includes the two types of meanings, viz.,

1. related meaning and
2. unrelated meaning

These two types of meanings are the bases for the develop ment of the two important lexico-semantic concepts, Polysemy and Homonymy. Both polysemy and homonymy indicate the relationship between the form and meaning. In polysemy the meanings of a word are related in one way or other. In homonymy the meanings are different and unrelated. In homonymy two or more words are seen with formal phonological identy. In polysemy the various meanings of a word fall with in the semantic range. The polysemous meaning have a common criterial feature. In homonymy each meaning represents a separate lexeme. In dictionaries homonyms are treated with super script numbers.

1. To differntiate between polysemy and homonymy the lexicographers follow the methods:

1. Etymology of the word
2. Synchronic description of the relatedness and unrelatedness of meanings.

1.1. Some dictionaries base their decision upon the etymology to find out the real status of the word. But ther are some difficulties in this method. For example, the etymological relationship is not always clear. The relationship depends upon how far one goes deep into the history of the word and the language. The etymological criterion is possible only for the languages which have a very good historical dictionary. Otherwise the etymology may mislead.

1.2. The second method, that is, the relatedness and unrelatedness of meanings depends purely upon the native speakers feeling. Some meanings are related to some people and the same meanings are unrelated to some other people. Homonymy starts at a point where the speaker fails to conceive the meanings connected. But it is very difficult to find out at which point a polysemy ends and at which point a homonymy starts. Again there is a degree relatedness of the meanings. The lexico-semantists have to depend upon the inter-subjective decision and the lexicographic tradition before coming to a conclusion. According to Lyons (1977) the relation between polysemy and homonymy is indeterminate and arbitrary. Hence, in the absence of a historical dictionary, it is better, the lexicographer, instead of setting up some false etymons, should base his decision upon the average educated native speakers to relate the multiple meanings of a word.

There are different sources for the farmation of homonymy in Tamil. The different sources enumerated by Ullmann (1962) and Zgusta (1971) are studied with the background of Tamil in the following pages.

Homonyms are the phonologically identical lexemes. Homonyms have separate origins. They are absolute or partial

on the basis of their grammar and function. In the absolute homonymy words have complete identity both in the root forms and in the inflexions (paradigms), that is, they should have grammatical equivalence. But in partial homonymy the words have identity either in the root forms or in the paradigns.

Absolute homonym = + lexical (formal) identity
+ inflexional identity

Partial homonyms are of three types, viz.,

Type I. Two words are identical in the root form without having a single paradigm in common.

Type II. Paradigm of a word is formally identical with the paradigm of another word though the roots have different phonological forms and

Type III. A root is identical with the inflexion of another word.

Partial homonymy

+ lexical identity
— inflexional identity

+ inflexional identity
— lexical identity

Let us see some examples for the above type of homonyms

Absolute homonyms

| | |
|---|---|
| mālai[1] 'evining' | kavi[1] 'poet' |
| mālai[2] 'garland' | kavi[2] 'monkey' |

Partial homonyms

Type I.

| | |
|---|---|
| Cāy 'sedge' | taṇṭu 'stick' |
| Cāy 'to incline' | taṇṭu 'to collect' |

Type II.

| | | |
|---|---|---|
| irkkum[1] (even) rib of a palm leaf' | < | irkku |
| ir-kk-um[2] which will draw' | < | ir- |
| puraii[1] 'having protected' | < | pura (pati.50-4) |
| puraii[2] 'having resembled' | < | purai (Akam.152-23) |

Type III

ul̤l̤i 'onion' (ul̤l̤i) añci 'a king' (<añci)
ul̤l̤i 'having thought' añci 'having feared' (<añçu-i)
(ul̤l̤u-i)

ilai 'leaf'
il-ai 'not'

## 3. Sources of homonymy

3.1. A word when involves insome phonemic change accidentally coincides with another word. This is very common in pali and prakrit.

| | | |
|---|---|---|
| kāñci[1] 'a town' | < | kāñcipuram |
| kāñci[2] 'a tree' | | |
| otti[1] 'woman' | < | orutti |
| otti[2] 'mortgage' | | |
| nāraṅki[1] 'bolt of a door' | < | nātāṅki |
| nāraṅki[2] 'orange' | < | nāraṅga |

3.2. Acceptance of loan words from other languages causes increase the number of lexemes in a language. Homonymy arising due to the influence of loan words can be discribed as follows:

3.2.1. A loan word merges with an indigenous word which has an identical phonological shape.

ari$^{1}$ enemy ari (Skt.)
ari$^{2}$ rice (Ta.)

| | |
|---|---|
| nāval 'jaumoon' (Ta.) | kār$^{1}$ 'season' (Tan.) |
| nāval$^{2}$ 'novel' (Eng.) | kar' 'car' (Eng.) |

3.2.2. A tatsama form merges with a tadbhava form. Homonymy is created when the two forms are accepted in Tamil.

| | | | |
|---|---|---|---|
| kamiṇi$^{1}$ | 'woman' | < | kāmiṇi (Skt.) |
| kamiṇi$^{2}$ | 'a mantra | | gāmiṇi (Skt.) |
| kunci$^{1}$ | 'to upraise' | < | kuñc (Skt.) |
| kunci$^{2}$ | 'barbadosspride' | < | guñja (Skt.) |

3.2.3. Two are more words become homonyms due to the neutralising process of the foreign words.

| | | | |
|---|---|---|---|
| 1. | iratam$^{1}$ 'car' | < | ratha (Skt.) |
| | iratam$^{2}$ 'tooth' | < | rada (Skt.) |
| | iratam 'juice' | < | rasa (Skt.) |
| | iratam 'waist' | < | raśanā (Skt.) |
| 2. | kaṭi 'gee' | < | ghṛta (Skt.) |
| | kaṭi 'neck' | < | ghaṭikā (Skt.) |
| | kaṭi 'a measure' | < | khāri (Skt.) |
| | kaṭi 'cart' | < | gāḍi (Urdu) |
| | kaṭi 'moat' | < | gāṭi (Urdu) |

| | | |
|---|---|---|
| kaṇṭam 'throat' | < | kaṇṭha (Skt.) |
| kaṇṭam 'piece' | < | khaṇḍa (Skt.) |
| kaṇṭam 'time' | < | gaṇḍa (Skt.) |
| kaṇṭam 'bell' | < | ghaṇṭa (Skt.) |

3.2.4. Sometimes the meanings of a polysemous word drift so apart to an extent that there seems to be no connecion between them. Hence, a polysemous words treated as a homonymous one.

tuṇṭu 'piece'
tuṇṭu 'towel'
kālkaṭṭu 'tying the animals' leg'
kālkaṭṭu 'marriage'

Theoritically it is easy to distinguish polysemy and homonymy. But in practice, the lexicographers face many difficulties when they analyse the multiple meanings of a word. Tamil lexicion is the poineering work in this field. A thorough investigation of lexemes of Tamil will bring out many new sources especially the indigenous ones.

*References*

Balakrishnan, B.C. (1985) "Some Problems in Malayalam Lexicography" *akarātikkalaikkaruttaraṅku* (Mimeo) Tamil University, Thaujavur.

John Lyons, (19 7) *Semantics*, Cambridge University Press, Cambridge.

Stephen Ullmann, (1962) *An Introduction to the Science of Meaning*, Basil Blackweell, Oxford.

Zgusta, Ladislav (1971) *Manul of Lexicography*, Mounton, Hague.

# Compiling Bilingual Dictionaries (Tamil Bengali or Bengali - Tamil) Some Problems

Sukla, Chakrabarti
Calcutta University.

There are any number of reference dictionaries in almost all the developed Indian languages. But still when one looks for a modern Bilingual dictionary, giving due attention to pronunciation, meaning and grammatical indications, say in the case of Tamil-Bengali, it is yet to be compiled.

The lexicographer of such a dictionary faces certain problems, as it involves proper matching in every level, in the two languages concerned. This paper tries to draw one'-attention to certain problems faced while compiling a Tamils Bengali learners' dictionary, and some measures adopted to over come them.

(1) Pronunciation:

In a bilingual dictionary where both languages involved show considerable differences in their phonetic schemes, employing *a Phonetic transcription* instead of the usual practice of using the Roman Script is a must. Because the Roman script is interpreated differently in different languages.

| Some e.g. | Roman Script | Sound Values in Bengali | Sound Values in Tamil |
|---|---|---|---|
| | a | [ɔ] | a |
| | ā | [a] | ā |
| | i } | [No short, long distinction] | i |
| | ī | | ī |
| | e | e } both<br>k } | e |

(2) Meaning:

In a bilingual dictionary, though all the usual devices of definition, synonyms and Contextual illustrations are pressed into service it is found that in the cases of cultural items peculiar to one language language, definition by way of description is required. Where synonyms are not always found. In the case of poly-semous words contextual illustrations are the only satisfactory means which do justice to the two different languages.

| Tamil | Bengali |
|---|---|
| e.g. ai beat, blow | |
| White wash Veḷḷai aṛi | Cun Kam kɔra |
| ring the beli maṇi aṛi | ghɔṇṭa, bajao |
| to smell Vāsanai aṛi | gɔndho Śōka |
| ṭikaṭ Koṛi | ṭikiṭ Kaṭo |
| pâdai pōṛu | peth Kaṭo |

| Tamil | Bengali |
|---|---|
| naham Veṭṭu | Nokh *kaṭo* |
| kālam kaḷi } | śomɔy ,, |
| nēram pōkku } | |

As there are different verbs used in different contexts,

even with the same noun, only contextual illustrations can help.

| for e.g. Tamil | | Bengali |
|---|---|---|
| ṇir Kuṛi | drink water | Jɔlkhao |
| Sigaret kuṛi / piṛi | Smoke Cegarette | Sigaret Khao |
| Śoru Śāpiṛu | eat cooked rice | bhat khao |
| tiṭṭu Vāṅgu | get scoldings | galikhao |
| ṭikaṭṭu Vāṅgu | 'get a ticket (train, Cinema, etc. paying money) | ṭikiṭ kaṭo |
| Śiṭṭu Vāṅgu | get a token or pass. (for entry into a hospital or any place) | ṭikiṭ kɔro |

3) *Grammatical labels:*

Usually we find in Indian dictionaries indication of grammatical terms is not done in a very satisfactory manner. Neither they are uniform, nor they are exhaustive in their coverage. Usually nouns get the maximum importance, but verbs are not paid all the attention due to them. Mostly, among the non finite forms only the infinitive is listed or at the most participle. But the other parts of speech are woefully neglected, even wrongly indicated.

e.g. 'Kɔra, 'Khaoa' are shown as verbs in Samsad Bengali-English Dictionary where as they are a verbal nouns. '*gilgil*', '*dhum*' are marked as interjections where as they are imitative or onamotopoic words.

Here the problems are of two kinds

1) *grammatical labels*: It is found that traditionally both Tamil and Bengali use two different labels 'to indicate' a word which in structure and function seem to have no difference at all, e.g.

| *Optative* | *Meaning* | *Imperative* |
|---|---|---|
| Tamil avan Varaṭṭum | Let him come | Bengali fe a-suk |
| ,, maḷai varaṭṭum | Let it rain | ,, briṣṭi hok. |

Adoption of a common set of grammatical labels would bring out the similarity or dissimilarities also.

2) Though traditionally same grammatical labels are used, as in each language the semantic ranges are different, these labels are not very helpful. For e.g. the lexical entries in both Tamil and Bengali, might indicate Dative (by Dat) against a phrase. For example a word in Tamil

eg. enakku - Dative of nān, is entered as above, the Bengali, learner cannot really understand it properly. Because in Bengali, Dative case traditionally has a semantic function-only in connection with 'giving' e.g. amake dao - give me, where as. in Tamil, the dative case marker is used for many other Semantic ranges including giving.

Tamil 1) enakkuk koḍu - give me (giving)

2) enakkut tambi (relation) - my brother

3) enakkup pasi - I am hungry (state)

4) enakku munnal - before me (direction)

5) enakku onru - one for me. (distribution)

and many others.

So it is found, that instead of using just a traditional. label like Dative which may not be fully and correctly understood it is more useful in a Learners' Bilingual Dictionary either to avoid the labels or give the appropriate, even different labels as the cases may be.

# On Compiling a Bilingual Dictionary-Tamil-Bengali or Bengali-Tamil

Sujata Ghosh
Calcutta University

While compiling a Bilingual dictionary a lexicographer, has to attend to different types of problems. As for the definition of [meaning, usually devices like description, synonym, contextual illustration etc. are employed. If we take up the case of poly semous 'words, in every language we come accross such types of words which have more than one meaning.

These polysemous words particularly in the case of a Bilingual dictionary present some interesting problems.

First - the different shades of meaning of one form in one language do not exactly correspond to the shades of meaning in the other language. As for example.

| Bengali | Different Shades of meaning | Tamil Corresped by different words |
|---|---|---|
| 1) belo poṛeche | The sun is about *to set* | poḷudu sāyndu viṭṭadu |
| 2) dhar poṛeche | Sharpness has become less | kūrmaimaḷungi viṭṭadu. |
| 3) kaj poṛeche | works remains to be finisebed | vēlai kiḍak kiradu. |
| 4) bhar poṛeche | Responsibility has come over | bāram ēri irukkiradu. |

Secondly it is difficult to assign a central meaning which will fit all the 'local senses' or shades - in perfect correspondence.

In these cases the usual lexicographer practice is to single out one or two meanings as the central or basic meaning generally that meaning of a lexeme which occurs frequently in a language is recognised as its central meaning. A native speaker can easily understand it. But in the case of a Bilingual dictionary and also a learners' dictionary it is really difficult to search out the central meaning of these polysemous words. Because many times it is found that the meaning seem to exist only in the various context of the word.

As for examples.

| Bengali lag | Meaning | Tamil Pōṛu |
|---|---|---|
| 1) rɔŋ lagano | | Śayam pōḍu girān. |
| 2) amar name lagacche | Back biting me | Sapparu poṛu |
| 3) cini lagbe ? | Is sugar needed? | Sabdam pōṛu |
| 4) dag legeche | A Stain has been made | marundu pōṛu |
| 5) agun laga | Stapt of fire | malai Poru |
| 6) stamp lagano | Affixing a stamp | Piccay Poru. |

As we can see there is no central meaning assignable in both languages which will correspond to each other. So it is clear that against a poly semous words in one language, all its contextual shades are to be given to explore fully its usages and each one of these will have to be matched in the other language and it may not necessarily by a single word.

Thus it is fouud that in the case of poly semous words, devices like definition, synonym, or description do not satisfactorily bring out the meaning discrimination.

# இளம்பூரணரின் உரைத்திறன் - பிறப்பியல்.

சி. சுப்பிரமணிய பிள்ளை
கேரளப் பல்கலைக் கழகம்

இக்கட்டுரையில் தொல்காப்பியம் எழுத்ததிகார மூன்றாவது இயலான பிறப்பியலின் உரைத்திறன் குறித்து இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோரின் கருத்துக்கள் வழி உரைத்திறன் மதிப்பீடு செய்யப்படுகின்றது.

**இயல் பெயர்க்காரணம்:**

உரையாசிரியர்கள் இருவரும், 'எழுத்துக்களது பிறப்புணர்த்தினமையின்' பிறப்பியல் என்பர். ஆனால் பி. எஸ். எஸ். சாஸ்திரி 'எழுத்துக்களின் வகை, தொகை, தன்மை, அவ்வெழுத்து மொழிகளில் வரும் இடம் இவற்றை நூன்மரபு மொழிமரபு இவ்விரண்டியலுள் கூறினார். அவற்றின் பின்னரும் இரு சொற்கள் புணரும்போது நிகழும் மாறுதல்களை அறிதற்கு எழுத்துக்கள் பிறக்கும் இடத்தின் அறிவு இன்றியமையாமையின் புணர்ச்சியைப் பற்றிக் கூறும் ஆறு இயல்களுக்கு முன்னரும், எழுத்துக்களின் பிறப்பிடத்தை உணர்த்தினர். அக்காரணம் பற்றிஇவ்வியலுக்குப் பிறப்பியல் எனப் பெயர் வந்தது'' என்றார். வெள்ளைவாரணர், ''முதலெழுத்துக்கள் முப்பதையும் நூன்மரபிலும், சார்பெழுத்துக்கள் மூன்றனையும் மொழிமரபிலும் உணர்த்திய ஆசிரியர், முப்பத்து மூன்று எழுத்துக்களின் பிறப்பு முறையினை உணர்த்துவதால், பிறப்பியலென்னும் பெயர்த்தாயிற்று' என்றார்.

**இயல் வைப்பு முறைக்குக் காரணம்.**

இவ்வியலை மொழிமரபின் பின் வைத்தமைக்குரிய காரணங்களை ஒரே தன்மையில் இரு உரைகாரர்களும் சுட்டுகின்றனர்.

“பிறப்பியலை நூன்மரபின் பின்னே வைக்கவெனின், சார்பில் தோற்றத்து எழுத்தும், தனி மெய்யும் மொழிமரபிடை உணர்த்தி, அதன் பின்னரே பிறப்பு உணர்த்த வேண்டுதலின்' என்றனர்.

**நூற்பா எண்ணிக்கையில் வேறுபாடு**

தொல்காப்பிய இளம்பூரணர் உரைப்பதிப்பில் (83 - 103) 21 நூற்பபாக்களும், நச்சினார்க்கினியர் உரையில் 20 நூற்பாக்களும் (83-102) உள்ளன. இறுதி நூற்பாவை நச்சினார்க்கினியர் ஒன்றாகவும், இளம்பூரணர் இரண்டாகவும் பிரித்துள்ளமையே இதற்குக் காரணமாகும்.

**நுதல் பொருள் கூறல்:**

எல்லா நூற்பாக்களும் நுதல் பொருள் தரப்படுகின்றது. ஒரே தன்மையான நுதல் பொருளைச் சுட்டுமிடங்களில் ‘இதுவும் அது’ என்று குறிப்பிடுகின்றனர். உயிரெழுத்துக்களுள் சிலவற்றிற்குச் சிறப்பு விதி உணர்த்தும் நூற்பாவைத் தொடர்ந்து (85) இரு நூற்பாக்களிலும், மெய்யெழுத்துகளுள் சிலவற்றிற்குப் பிறப்பு உணர்த்தும் நூற்பாவைத் தொடர்ந்து (89) இரு நூற்பாக்களிலும், 93-வது நூற்பாவைத் தொடர்ந்த ஆறு நூற்பாக்களிலும் இத்தன்மையிலே நுதல் பொருள் தரப்படுகின்றது. மேற் குறிப்பிட்ட 10 இடங்களிலும் இருவரும் வேறுபடவில்லை.

**நுதல் பொருளில் புறநடைச் செய்திகளைத் தரல்.**

ஐந்து நூற்பாக்களில் (89, 92, 100, 102, 103) இளம்பூரணர் புறனடைச் செய்திகளைக் காட்டுகின்றார். இவ்விடத்தில் நச்சினார்க்கினியர் 89-வது நூற்பாவைப் ‘பொதுவிதி’ என்றும், 92-வது நூற்பாவை ‘ஐயம் அகற்றியது’ என்றும், 100-வது நூற்பாவைச் ‘சிறப்புவிதி’ என்றும்; பிற ஈரிடங்களிலும் ஒன்றுபடுகின்றார்.

**பதவுரை;**

எல்லா நூற்பாக்களுக்கும் பதவுரை தருகின்றனர். இவ்

வமைப்பில், நூற்பா வரியின் சொற்களைக் கொண்டு கூட்டி அமைத்துப் பொருள் தருகின்றனர். இங்கு, ஓரிடம் தவிர பிற ஐந்து இடங்களிலும் நச்சினார்க்கினியர் இளம்பூரணர் கருத்தோடு உடன் படுகின்றார்.

**பதவுரையில் சொற்களைக் கொண்டு கூட்டி அமைத்தல்:**

இளம்பூரணர், 'உந்திமுதலா' என்ற 83-வது நூற்பாவில் 6-வது வரி, 5-வது வரியிலுள்ள சொற்களைக் கொண்டு கூட்டி 'எல்லா எழுத்தும் நெறிப்படநாடி' எனவும், நச்சினார்க்கினியர் இங்கு, எல்லா எழுத்தும் பிறப்பின் ஆக்கம்' எனவும் மாற்றுகின்றார்.

நூற்பா 86-இல் 'அண்பல்' என்பதை 'பல் அண்' என்றும், நூற்பா 89-இல் 'முதல் நா அண்ணம்' எனும் தொடரை: நாமுதல் அண்ணம் என்றும், நூற்பா 90-இல் 'இடைநா' என்பதை 'நா இடை' என்றும், நூற்பா 91-இல் 'நுனிநா' என்பதை 'நா நுனி' என்றும், நூற்பா 96-இல் 'அண்பல்' என்பதை 'பல் அண்' என்று இளம்பூரணர் மாற்றுகின்றார். இவ்வைந்து நூற்பாக்களிலும் நச்சினார்க்கினியர் சொற்களை மாற்றவில்லை.

**முன் நூற்பா கருத்தைப் பதவுரையில் சுட்டல்:**

இளம்பூரணர், 103-வது நூற்பாவில் 102-வது நூற்பாவின் இறுதிவரியான 'அளபிற்கோடல் அந்தணர் மறைத்து' என்பது பிறன்கோட் கூறுதற்கும், பிறன்கோட் கூற்று நேர்ந்து உடம்படுதற்கும் ஒப்பக்கிடந்தமையின் அவ்வையம் தீர்தற்குக் கூறினார் என்பார்.

**எடுத்துக்காட்டுகள்:**

இவ்வியலில் எடுத்துக்காட்டுகள் எதுவும் அமையவில்லை.

**விளக்கவுரை:**

பிற இயல்களைப் போன்று விளக்கவுரைப் பகுதிகள் விரிவான நிலையில் இடம்பெறவில்லை. நான்கு நூற்பாக்களில்

மட்டுமே (93, 94, 102, 103) விளக்கவுரைகள் காணப்படு கின்றன. சொல் விளக்கம், வினாவிடையமைப்பு போன்ற நிலை களில் இவற்றை வகைப்படுத்தலாம்.

**சொல் விளக்கம்:**

உரைகாரர்களிருவரும் மெல்லினமெய்களின் பிறப்பினைச் சுட்டுமிடத்து 'யாப்புற' என்றமையினால் இடை எழுத்திற்கு மிடற்றுவளியும், வல்லெழுத்திற்குத் தலைவளியும் கொள்க என்றனர் (100).

**தொடர்ப்பொருள் விளக்கம்:**

நூற்பா 84-இல், 'தந்நிலை திரியாது' என்றமையின் குற்றியலிகரம், குற்றியலுகரம் இரண்டும் திரியும். உயிர் மிடற்றுப் பிறந்த வளியிசைக்கும். இருவருக்கும் கருத்து வேறு பாடில்லை.

இளம் பூரணர் (101) சார்பெழுத்துக்களின் பிறப்பினை 'ஒத்தகாட்சி' என்றதனால், ஆய்தத்திற்குக் குற்றெழுத்து சார்பே எனினும் தலை வழியாகப் பிறத்தலின் உயிரொடு புணர்ந்த வல் லெழுத்துச் சார்பாகவே பிறக்கும் என்றார். நச்சினார்க்கினியர் இக்கருத்தினைத் தரவில்லை. இதே நூற்பாவில் 'தம்மியல் பியலும்' என்றதனால்' அளபெடையும் உயிர் மெய்யும் தமக்கு அடியாகிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வரும் என்று இளம்பூரணர் கருத்துரைக்க, நச்சினார்க்கினியர் இத்தகைய விளக்கம் தரவில்லை.

**இலக்கணச் சிந்தனை:**

வாக்கியத்தின் எழுவாய், பயனிலை இயைபு பற்றிச் சிந்திக் கின்றார் இளம்பூரணர். நூற்பா 83-இல், 6-வது வரியில் 'எல்லா எழுத்தும் சொல்லுங்காலை' என்பதில் எல்லா எழுத்தும் என்ற எழுவாய்க்குப் 'பிறப்பினாக்கம் வேறுவேறு '(வரி-7) என்று தொடர்பு ஏற்படுத்தி, வாக்கிய வழு நீக்குகின்றார். நச்சினார்க் கினியர் இக்கருத்தினைத் தரவில்லை. இதைத்தவிர, நூற்பா 103-இல்' நுவன்றிசினே' என்பது இறந்த காலத் தன்மைவினை என்ற இலக்கணக் குறிப்பைச் சுட்டுகின்றார் இளம்பூரணர்.

**வினா விடைப் பாங்கு:**

இளம்பூரணர், நூற்பா 102-இல்' வளி என்னாது' வளியிசை என்றது, நெஞ்சின்கண் நிலை பெறும் அளவும் வளி எனப்படுவது பின்னை நெஞ்சினின்றும் எழுவழி எல்லாம் வளித்தன்மை திரிந்து எழுத்தாம் தன்மையதாம்' என்றார்.

**நூற்பா வைப்பு முறைக்குக் காரணம்:**

நூற்பா 98-இன் வைப்பு முறைக்கு நச்சினார்க்கினியர் காரணம் தர, இளம்பூரணர் எதுவும் கூறவில்லை.

**வேறுபாடு அறிந்து கொள்க.**

சிலவிடங்களில் அதிகமாக விளக்கவுரை தராமல் வேறுபாடு அறிந்து கொள்க, ஆமாறு அறிந்து கொள்க என்ற மரபில் விளக்கம் தருகின்றனர். இளம்பூரணர் நூற்பா 88-இல் 'எழுத்துக் களின் பிறப்பில் சிறுவேறுபாடுண்டு, அதனை அறிந்து கொள்க' என்றார். இவ்விடத்தில் நச்சினார்க்கினியர், 'அவை எடுத்தல், படுத்தல், நலிதல், விலங்கல் என்றவாற்றானும், பிறவாற்றானும் வேறுபடுமாறு நுண்ணுணர்வுடையோர் கூறி உணர்க என்றார். இதனைப் போன்றே 'அகத்து இசைக்கும் வளி இசையை, அந்தணர் ஒதும் மறைக்கண் ஓர் எழுத்திற்கு மூன்று நிலை உளதாகக் கூறும் நிலையை அறிக என்றார் இளம்பூரணர். நச்சினார்க்கினியர்,

'நிலையும் வளியும் முயற்சியும் மூன்றும்
இயல நடப்பது எழத்தெனப்படுமே' என்று

தெளிவுடன் விளக்குகின்றார்.

**விளக்கத்தில் மேற்கோள்:**

இளம்பூரணர் 103-வது நூற்பாவில் 102-வது நூற்பாவரியை இடமும், எண்ணும் சுட்டிய மேற்கோளாகத் தருகின்றார்

**மதிப்பீடு:**

முன்னுரை, பதவுரை, விளக்கவுரை ஆகிய முக்கூறுகளும் 8 நூற்பாக்களில் (83, 84, 93, 94, 100, 101, 102, 103)

காணப்படுகின்றன. ஏனைய நூற்பாக்களில் முன்னுரையும், பதவுரையும் இடம் பெறுகின்றன. இவற்றை வைத்து நோக்கும் போது புலப்பாட்டு நெறியிலும், புலப்படுத்தும் நெறியிலும் இருவர் உரையும் சிறப்பெய்தவில்லை எனத் துணியலாம். உத்திகளோ, விரிந்த விளக்கக் கூறுகளோ, காட்டுக்களோ இடம் பெறவில்லை. உரையாசிரியர்கள் இருவரும் மிகுதியும் உரையமைப்பில் ஒன்று பட்டே காணப்படுகின்றனர்.

அடிக்குறிப்புக்கள்:

1. பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி : தொல்காப்பியம் எழுத்ததிகாரம் குறிப்புரை. பக்.84.

2. வெள்ளைவாரணர் : தொல்காப்பியம் நன்னூல் எழுத்ததிகாரம்: பக். 108.

# அறிவியல் பாடநூலாக்கத்தில் பத்தியும் பத்தியாக்கமும்

ப. டேவிட் பிரபாகர்,

புதுவைப் பல்கலைக் கழகம்,
காரைக்கால்.

0.0. பத்தி, பத்திப்பிரிப்பு, பத்தித்தலைப்பு மற்றும் பத்திகளுக்கிடையேயும், பத்திகளில் அமையும் உரைகளுக்கிடையேயும் (uttarances) தொடர்புகளை அமைக்கும் பாங்கு போன்வற்றைக் கருத்தில் கொள்வது எளிமையான கருத்துப்புலப்பாட்டிற்கு உதவும். இக்கட்டுரை பள்ளிக்கல்விக்கான அறிவியல் பாடநூலை உரைக்கோவை நோக்கில் (discourse approach) உற்றுநோக்கி, பத்தியையும் பத்தியாக்க உத்திகளையும் பொதுவாகவும், மேலோட்டமாகவும் ஆராயும் அறிமுக ஆய்வாக அமைகிறது.

1.0 மொழியமைப்பு பற்றிய ஆய்வில் வாக்கியங்கள் அடிப்படை அலகாகக் கொள்ளப்படுகின்றன. ஆனால், உரைகோவை ஆய்வில் பத்திகள் அடிப்படை அலகாகக் கொள்ளபடுகின்றன. ஏனெனில், உரைக்கோவை மொழியமைப்பையொட்டி அமைவதோடு மொழிப்பயன்படுத்தத்தையும் (language use) கருத்திற் கொண்டு அமைவதாகும்.

1, 1 'பல வாக்கியங்கள் குழுவாக அமைந்து ஒரு கருத்தைத் தெரிவிப்பதை பத்தி'[1] என்கிறோம். அதாவது, வாக்கியங்களுக்கிடையே காணப்படும் கருத்துத் தொடர்பு பத்தியையும் பத்திகளுக்கிடையே காணப்படும் கருத்துத் தொடர்பு. முழு உரைக் கோவையினையும் நமக்குஉணர்த்துகின்றன. இந்த வகை

யில், வாக்கியங்களை பத்தியின் முக்கிய பிரிவாகவும் 'பத்தியை உரைக்கோவையின் முக்கியப் பிரிவாகவும்', கருதலாம்.

**2. 0. பத்திப் பிரிப்பு:-** பத்தியை ஒரு வாக்கியத்தாலும் அமைக்கலாம்; ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கியங்களாலும் அமைக்கலாம். பத்திப்பிரிப்பு படிப்போரின் கண்கள் சோர்வடையாமல் இருப்பதற்கு மட்டுமே செய்யப்படுவதன்று. கூறவந்த மையக் கருத்தினையொட்டியே பத்திப்பிரிப்பு செய்யப்படுகிறது; செய்யப்பட வேண்டும்.

**2. 1. கருத்துநிலைப் பத்தியும், புறநிலைப்பத்தியும்:-** ஒரு மையக் கருத்தினை (core idea) ஒட்டி பத்தி அமைக்கப் படுகிறது. மையக் கருத்தினைப் புலப்படுத்துவதற்கு ஒன்றோ ஒன்றுக்கு மேற்பட்ட புறநிலைப்பத்திகளோ (physical paragraph) தேவைப்படலாம். பல புறநிலைப் பத்திகள் இணைந்து ஒரு கருத்து நிலைப்பத்தியை (conceptual paragraph) உணர்த்து கின்றன. அதாவது, கருத்து நிலைப்பத்தியில் ஊடுருவி நிற்கும் மையக்கருத்தின் துணைக்கருத்துக்கள் ஒவ்வொன்றும் புறநிலைப் பத்திகளாக அமைகின்றன.

அறிவியல் பாடநூலில், ஒரு பொருள் விளக்கப்படும் பொழுது அப்பொருளின் பல்வேறு இயல்புகள், பயன்கள், அமைப்பு, செயற்படும் விதம், அப்பொருளின் வகைகள், எடுத்துக்காட்டுகள், பிறவற்றுடன் அப்பொருளுக்குரிய தொடர்பு அல்லது வேறுபாடு போன்றவற்றை விவரிக்க வேண்டியுள்ளது. இவை ஒவ்வொன்றும் தேவைக்கேற்ப, கருத்துநிலைப் பத்தியாகவோ, புறநிலைப் பத்தியாகவோ அமைவதுண்டு; பயில்வோருக்குத்தக அல்லது தேவைகருதி அவை ஒரே பத்தியாகவும் அமைவதுண்டு. அதாவது, முன் வைக்கப்படுகிற செய்தியின் அளவு, செய்தியின் தன்மை, அந்தச் செய்தியை விளக்கு வதற்குத் தேவையான துணைக்கருத்துக்கள் போன்றவற்றின் அடிப்படையிலேயே பத்திப்பிரிப்பு நடைபெறுகிறது எனலாம்.

**3. 0 பத்தித் தலைப்புகள்.** ஒரு பொருளின் ஒரு குறிப்பிட்ட இயல்பினை மட்டும் ஆழமாக விவரிக்கும் ஆய்வுரையாக பாட

நூல்கள் அமைவதில்லை. அந்தப் பொருள் பற்றிய அடிப்படைச் செய்திகள் அனைத்தையும் தரும் முயற்சியே பாடமாக்கத்தில் மேற்கொள்ளப்படுகிறது. மேலும், கூறவந்த செய்திகளைச் சுருங்கிய வடிவிலும் தரவேண்டியுள்ளது. இதனால், அடிப் படைச் செய்திகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கருத்து நிலைப் பத்தியாக இயல்பாகவே அமைந்து விடுகிறது. இதனால், பத்தி களைப் பிரிப்பதிலும், பத்திகளுக்குத் தலைப்பிடுவதிலும் பாட மாக்குவோருக்கு அதிக சிக்கல்கள் எழ வாய்ப்பில்லை.

பெரும்பாலும், முன் வைக்கப்படுகிற பொருளுக்குரிய கலைச் சொற்களே பத்தித் தலைப்புகளாக அமைகின்றன. தேவைக்கேற்ப, இவை தலைப்புகளாகவும், உட் தலைப்புக ளாகவும் அமையலாம். எடுத்துக்காட்டாக, 'கார்பன்' என்ற தலைப்பின் கீழ் 'கார்பனின் புறவேற்றுமை வடிவங்கள்' என்ற உட் தலைப்பும், இதன் கீழ் 'படிக வடிவம் கொண்ட புற வேற்றுமை வடிவங்கள்' என்ற உட்தலைப்பும், இதற்கும் கீழே இதன் உட்தலைப்புகளாக 'வைரம்', கிராபைட்' ஆகியனவும் காணப்படுகின்றன. வைரம், கிராபைட் போன்றவற்றைத் தலைப்பாகவும், அவற்றின் அமைப்பு, கிடைக்குமிடங்கள், பண்புகள், பயன்கள் போன்றவற்றை உட்தலைப்புகளாகவும் அமைக்க இயலும். எனவே, ஒரு கலைச் சொல் தலைப்பாகவும், உட்தலைப்பாகவும் அமைவது பயில்வோருக்குத் தேவையான செய்தியின் அளவைப் பொறுத்ததேயன்றி, முன் வைக்கப்படும் செய்தியின் தரத்தைப் பொறுத்தன்று.

**3. 1. பத்தித்தலைப்புகளில் மொழிப்பயன்பாடு:** பெரும் பாலான பத்தித்தலைப்புகள் கலைச்சொற்களாக அமைந் துள்ளன. எனவே, பத்தித்தலைப்புகளை ஆராய்வதென்பது கலைச்சொல்லாக்க விதிகள் பற்றிய ஆய்வையும் உள்ளடக்கிய தாகும். தலைப்புகள் கலைச்சொற்களால் மட்டுமின்றி அமைப்பு, தயாரிப்பு, கிடைப்பு, பயன்கள் பண்புகள், வகைகள் எனவும் அமைகின்றன. இவை கலைச் சொற்களைத்தாங்கி அமைவதும் உண்டு. எடுத்துக்காட்டாக, 'பயன்கள்' என்ற தலைப்பு 'பாஸ்பரசின் பயன்கள்', 'சோடியத்தின் பயன்கள்' எனவும் அமைகின்றன.

பத்தித் தலைப்புகள் எளிமையாகவும், சுருக்கமாகவும் இருப்பது விரும்பத்தக்கதாயினும், சில இடங்களில் நீண்ட வாக்கியங்களும் பத்தித் தலைப்புகளாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன.

**4.0. பத்தியின் மைய வாக்கியம்:** 'மையக் கருந்து படிப் போரால் எளிதாகப் புரிந்து கொள்ளும் வண்ணம் அமைந்திருந் தால்தான் அந்தப்பத்தி சிறந்நதொன்றாகும். பொதுவாக, பத்தியில் அமையும் ஒருவாக்கியமே மையச் கருத்தைப் புலப் படுத்துகிறது. இவ்வாக்கியம் பத்தியின் மைய வாக்கியம் எனப்படுகிறது. மையக் கருத்தைப் புலப்படுத்தும் வாக்கியம் பத்தியின் தொடக்கத்தில் அமைய வேண்டுமென்பர். அதாவது, 'பத்தியின் முதல். வாக்கியம் அதில் வரும் முக்கியமான கருத்தைக் கூறும்; மற்ற வாக்கியங்கள் அக்கருத்தை பல வழி களில் விளக்கும், ஆயினும் மைய வாக்கியம் (theme sentence or topic sentence or core statement) பத்தியின் இறுதியிலோ, ஒன்றுக் மேற்பட்ட கருத்துக்கள் இருப்பின் பத்தியினூடே விரவியும் அமையலாம். மையக்கருத்தைக் குறிப்பிட்டு உணர்த்தாத (a paragraph without a stated core) பத்தியும் அமையலாம்.

அறிவியல் பாடநூல்களில் அடிப்படைக் கருத்துக்களே முன் வைக்கப்படுகிறன இவை சிறுசிறு பத்திகளாகவும், உட்தலைப் பிட்டும் அமைக்கப்படுகின்றன, இதனால், பத்தியின் மைய வாக் கியத்தின் பணியைப் பத்தித் தலைப்புகளே செய்து விடுகின்றன எனலாம்.

**5,0 பத்தியும் கருத்துத் தொடர்பும்.** முன் வைக்கப்படுகிற பொதுக் கருத்தையொட்டி உரைக் கோவையும், பொதுக் கருத்தினை விளக்கும் துனைக் கருத்துக்களையொட்டிப் பத்திகளும், பத்தியின் மையக்கருத்தினையொட்டி வாக்கியங் களும் அமைகின்றன, வாக்கியங்களுக்கிடையேயான தொடர்பு பத்தியையும், பத்திகளுக்கிடையேயான தொடர்பு முழு உரைக் கோவையினையும் புலப்படுத்துகின்றன. இவைகளுக்கிடையே அமையும் தொடர்பே கருத்துக் கோர்வையைத் தருகிறது.

பத்தியின் தொடக்கத்தில் அமையும் தொடரிணைப்பன்களும்

(cohesive ties) பத்தியின் முதல் அல்லது இறுதியில் அமையும் வாக்கிய அமைப்பும் பத்திகளுக்கிடையே கருத்துத் தொடர்பை ஏற்படுத்துகின்றன. இதனையே, பத்தியின் முதல் வாக்கியம் முன்னைய பத்தியின் கருத்துத்தொடர்ச்சியாகவும், அதன் இறுதி வாக்கியம் அடுத்த பத்திக்குத் தோற்றுவாய் செய்வது போலவும் அமைந்திருக்க வேண்டும்5, என்பர்,

பத்தியில் அமையும் உரைகள் (கருத்துக்கள்) அவற்றுக் கிடையே நிலவும் உறவின் அடிப்படையில், ஒன்றன் பின் ஒன்றாக (Juxtapose) அமைக்கப்படுகின்றன. இவ்வாறு அமையும் உரைகள் தங்களுக்குள் தொடர்பு கொள்கின்றன. இத்தகைய தொடர்பை பெருமபாலும் பயன்படுத்தப்படும் சில மொழிக் கூறுகளே வெளிப்படுத்துகின்றன, மொழிக் கூறுகளின்றியும் கருத்துத் தொடர்பு வெளிப்படுத்தப் படலாம்.

**5.1 தொடரிணைப்பன்களால் கருத்துத்தொடர்பு அமைதல்.** கருத்துத் தொடர்பை சில மொழிக்கூறுகள் வெளிப்படையாக உணர்த்துகின்றன. உரைகளுக்கிடையே அமையும் தொடர்பைப் பொறுத்து 'மேலும்';'ஆனால்' 'ஏனெனில், எனவே, 'அதாவது, போன்ற தொடரிணைப்பன்கள் பயன்படுத்தப்படுகின்றன, எடுத்துக்காட்டாக, முன் அமைந்த உரையையொட்டி அமையும் கூடுதல் செய்தியை அடுத்து அமையும் உரையில் தரும் பொழுது மேலும். இதுதவிர, போன்ற சொற்களும். முரணான செய்தியைத் தரும் பொழுது 'ஆனால்' இதற்கு மாறாக போன்ற சொற்களும் பயன்படுத்தப்படுகின்றன. இது தொடரிணைவு (cohesion) எனப்படுகிறது,

மேலும், 'அறிவியல் கருத்தாடலில் [உரைக்கோவையில்] பல்வேறு கருத்து நோக்குகள் (notions) பயன்படுத்தப்படுகின்ன. எடுத்துக்காட்டாக காலம், இடம், அளவு, வேறுபாடு, பொருள் திணிவு, எடை போன்ற இயற்கையின் பல்வேறு பண்புகள் அறிவியல் கருத்தாடலில் பேசப்படுகின்றன. இவற்றை வெளிப் படுத்த குறிப்பிட்ட சில மொழிக்கூறுகள் மீண்டும் மீண்டும் கையாளப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, கால முறையில் அமையும் உரைகளில் 'பிறகு, அடுத்ததாக் போன்ற மொழிக்.

கூறுகள் கருத்துத் தொடர்பை அமைக்கின்றன இத்தகைய தொடர்பு உரைகளிடையே மட்டுமின்றி பத்திகளுக்கிடையேயும் அமையலாம்,

5.2 வாக்கிய அமைப்பு முறையால் தொடர்பு அமைதல்: முன் பின் அமைகிற வாக்கியங்களில் எழுவாயை மீண்டும் மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதாலோ, மாற்றுப் பெயர்களைப் (pronouns) பயன்படுத்துவதாலோ கருத்துத் தொடர்பை அமைக்கலாம். அறிவியல் பாட நூல்களைப் பொறுத்தவரை, 'கருத்துக்கள் கோர்வையாக வெளிப்பட, கலப்பு வாக்கியங் களும் (complex sentences) இணையமைப்பு வாக்கியங்களும் (co-ordinate sentences) உதவியாக இருப்பதைப் பார்க்கமுடி கிறது. எனினும், கலப்பு வாக்கிய அமைப்பில் பின்பற்ற வேண்டிய தொடரமைப்பு விதிகள் (phrase structure rules) சரியாகப் பின்பற்றாத நிலை தெரிகிறது'[7] இவை சரியாகப் பின்பற்றப்படும் பொழுதுதான் கருத்துக்கோர்வை எளிதாக அமையும்.

5.3 மொழிக் கூறுகளின்றி தொடர்பு அமைதல்; இம் முறையில் 'முன் பின் அமைகிற உரைகள், சூழல் ஆகியவற்றின் அடிப்படையில் தொடர்புகளை உருவாக்குகிறார்கள். இவ்வாறு தொடர்புகள் அமைவது கருத்திணைவு (coherence) எனப்படும்[8]. இத்தகைய கருத்துத் தொடர்பு பெரும்பாலும் தொழிலாளர் கையேடுகளில் பயன்படுத்தப்படுகிறது. ஒன்றன் பின் ஒன்றாக செய்ய வேண்டிய செயல்களைப் பட்டியல் வடிவிலும் (list form). எண்ணிட்டும் அமைக்கின்றனர்.

6.0. பத்திகளில் கருத்துத் தொடர்பு காணப்படுவதும் அதனைத் தொடரிணைப்பன்கள், வாக்கிய அமைப்பு முறைகள் சூழல் போன்றவை வெளிப்படுத்துவதும் அறிவியல் தமிழுக்கு மட்டும் உரியதன்று. இருப்பினும், இத்தொடர்புகளை உருவாக்குவதற்குச் சில சிறப்புப் பயன்பாடுகளையும், சில மொழிக்கூறுகள் அல்லது மொழியமைப்புகளை மீண்டும் மீண்டும் பயன்படுத்த வேண்டிய தேவையினையும் அறிவியல் தமிழ் கொண்டுள்ளது.

# Language use of Todas: A Sociolinguistic Appraisal

V. Thayalan
Bharathiar University
Coimbatore

## Introduction

Nilgiris district is one of the multilingual areas in Tamilnadu. All the inhabitants of this hill area are multilinguals. There are number of tribal groups such as Todas, Irulas, Kottas, Kurumbas, Paniyas, Kattunayakkas, Kasabas and so on. They differ from each other linguistically as well as culturally. A study of multilingual situation will be bring-out hidden features of the language as well as culture. This short paper tries to identify the language use of Todas in various domains.

## Study of Language use in various Domains

Language use is one of the important factors for language maintenance and language shift of any speech community. In multilingual context, like Nilgiris, the identification of the language use of linguistic minorities is an essential one in the presentday multilingual situation.

To findout the language use of Todas, the domains selected are as follows:

1. Home situation
2. Workspot/Field/Office

3. Market transactions

4. School situation

**Language use in the Home Domain**

Home is a domain where interaction is mainly with members of the family and it is expected that the mother tongue will be the medium of interaction. Fishman (1972) has discussed two different approaches in studying language we in the home domain. One is what Braunshausen and Mackey (1962, 1965, 1966) have specified as family "members" father, mother, child, domestic, governess, etc., And the other is what Gross (1951) specified as dyads grandfather to grandmother, etc., that is, language of interac ion between speaker and hearer within the home situation.

For identifying the language use of Todas in the various domains some of the social parameters have been used as follows:

a) Age

b) Number of school going Children

c) Sex

**Home situation**

Use of language in home situation vary from one linguistic group to other in the Nilgiris district of Tamilnadu. The use of language is based on the two ways that is language used by the father, mother, child, domestic, governess and grantfather.

In home situation. Todas use only their mother tongne. In other words, Toda language is commonly used by all of their sceiety. Eventhough they use their mother tongue in

home situation the younger generation as well as school going children vary from others. For example, a grandfather interacts through Toda whenever he talks to grandmother. This type of situation is found during the situation of father and mother communication also But, grandson/ granddau ghter sometimes use Tamil when he/she talks to father/mother. In addition to that, school going childran sometimes use Tamil when they talk to same age group children in home situation. From this discussion one can come to the conclu sion that,

1. Old people of Todas use only their mother tongue in home situation whereas the school going children as well as younger generation use sometimes Tamil also. However, the old people of Todas never use Tamil at home situation.

2. The language use between grandmother/mother will be their mother tongue. It is assumed that the female counterpart in the family.

Workspot / Field / Office

Among the Nilgiris tribes, the Todas are the developing tribal society when compared with other tribal groups. Many of them are working at various central and state government departments. A part from this, some others are employed as agricultural labourers. In field/workspot they interact through their mother tongue whenever they meat the same tribal group. They use Tamil for their communication when thay meet non-tribal groups. The same situation is reflected in office/field and so an

Market transactions

In market situation, Tamil plays a dominant role. In ooty taluk, Badagas run shops in many places. They use

Badaga language when they go to daily / weekly markets. All of them know Badaga language. socio-economic factor is an importance cause for this tendency. Since many of them are working under the Badaga landlords and they are depending upon the Badagas for their livelihood they use Badaga language in all the contexts of their contact with the Badagas. In addition to that when they meet the Toda people at market they use their mother tongue only whereas when they meet non-Toda people they use Tamil or Badaga.

On the basis of the above mentioned points one can come to the following conclusions

1. In market situation, Todas use Badaga language whenever they meet Badaga who is a owner of shops or who runs some business

2. In the domain of market, they use Tamil for wider communications.

3. They use their mother tongue in market situation whenever they meet same tribal group.

### School Situation

Nowadays Todas send their children to school. In this taluk, both mediums are available that is, Tamil and English. Many of the parents prefer Tamil medium instruction and send their children to Tamil medium schools. Few of them, send their Children to English medium instruction.

In school situation, children interact through Tamil with the same tribal Children as well as with others. They do not use their mother tongue within the school Campus. Few of them (5%) sometimes use their mothertongue in school situation. However, Tamil is used for their wider

Communication in school context. The same attitude is reflected among the English medium school students also.

**Language use in its total perspective**

Language use of Todas in the various domains such as home, workspot and school have been calculated systematically and presented as follows:

**I In Home**

| Social Variable | Toda | Tamil | Badaga |
|---|---|---|---|
| old & Middle | 100% | — | — |
| Young | 90% | 10% | — |
| School going Children | 75 % | 25% | — |

**II In Workspot**

| Variable Social | Toda | Tamil | Badaga |
|---|---|---|---|
| Old & Middle | 20% | 20% | 60% |
| Young | 20% | 20% | 60% |
| School going Children | 60% | 30% | 10% |

**III In School Situation**

| School | Tamil | Badaga | Toda | Eng |
|---|---|---|---|---|
| Children | 90% | — | 5% | 5% |

The above charts (1, 2, 3) offer clearcut picture of the language use of Todas in the various domains.

From the above analysis one can come to the following conclusions

1. In home situation, they use only their mothertongue for wider Communication. However, few of them particulariy younger generation (10%) and school going childran (20%) use Tamil also.

2. Out of home situation, espacially at workspot they use mainly Badaga (60%) and Tamil (20%) depending upon the language use of the landlords.

3. In school situation. Tamil (90%) plays a dominant role in the children's speach behaviour occasionally few of them use their mothertongue (5%) in school situation.

4. Outside home situation particularly in market, bus stands, public places and so on the Todas use Tamil invariably. But, when they are in group they use their mother tongue only.

5. Old people of Todas have less proficiency in Tamil where as younger generation and school going children have much proficiency in Tamil

6. This type of language use reflects the language maintenance of Toda tribes.

# கேரளபாணினீயம் - தமிழாக்க உத்திகள்

தே. தேவநாஸ்
கேரளப் பல்கலைக் கழகம்

ஏ.ஆர். இராஜ இராஜ வர்மாவின் கேரளபாணினியம் என்ற மலையாள இலக்கண நூல் பேராசிரியர் மா. இளையபெருமாள் என்பவரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்நூலின் மொழி பெயர்ப்பு உத்திகளை புணரியலை மையமாகக் கொண்டு மூல பிரதியுடன் ஒப்பு நோக்கி இக்கட்டுரையில் ஆராயப்பட்டுள்ளது. மூலபாடத்தை S.L. (Source Language) என்றும் மொழி பெயர்ப்பு பாடத்தை T.L. (Target Language) என்றும் குறிப்பிடுவர் ஜே. சி. கேட்போர்டு. இக்கட்டுரையிலும் மூலப் பாடம் S.L. என்றும் மொழிபெயர்ப்பு T.L. என்றும் குறிக்கப் படுகிறது.

மொழிபெயர்ப்பு விளக்கம் :

ஒரு மொழியிலுள்ள செய்தியை வேறொரு மொழியில் பொருள் வேறுபாடின்றி சுவையும் தன்மையும் குன்றாமல் அப்படியே மாற்றுவதே மொழி பெயர்ப்பு என்று மு. கோவிந்த ராஜன் குறிப்பிடுவர்.[1] மொழிபெயர்ப்புப் பணியைப் பொறுத்த மட்டில் அவ்வாறு மாற்றுவதென்பது அவ்வளவு எளிய பணி யல்ல. ஏனெனில் ஒரு மொழியில் அமைந்த சொல்லுக்கு இணையான சொல் வேறொரு மொழியில் இல்லாதிருக்கலாம். இலக்கணம் மற்றும் சொல்லாக்க முறைகள் இருமொழிகளுக்கும் வேறுபாடுடையதாகவும் காணப்படலாம். இலக்கணம். மொழி பெயர்க்கப்படுவது கவிதை நூலாயின் S.L. பாடத்தின் யாப்பு T.L. பாடம் அமையும் மொழியின் யாப்பு நெறிக்கு அடங்காத தாக இருக்கலாம். அந் நிலையில் மொழிபெயர்ப்பாளன் செம்

மையான நேரடியான மொழிபெயர்ப்பைத் தருவது என்பது இயலாத காரியம். எனவே S.L. பாடத்திற்கும் T.L. பாடத்திற்கும் சிறிதேயினும் வேறுபாடு அமைவது இயல்பு. இங்கு அவ்வாறு ஏற்படுகின்ற வேறுபாடுகள்.

1. நேரடி முறை
2. விளக்க முறை
3. மொழியமைப்பு முறை
4. முடித்தல் முறை
5. நீக்க முறை
6. பிரித்தல் முறை
7. ஒலிபெயர்ப்பு முறை

என்ற அடிப்படையில் விளக்கப்படுகிறது.

1. நேரடி முறை :

சொல்லுக்குச் சொல் சீரான வரிசையில் வாக்கியங்கள் எவ்வாறு அமைந்திருக்கின்றனவோ அவ்வாறே அதனைச் சிதைக்காது நேரடியாக மொழி பெயர்ப்பது நேரடி மொழி பெயர்ப்பாகும்.

(எ.டு.)

S.L. ஸந்தி எந்த பதத்தினு ஸாமான்யமாய அர்த்தம் சேர்ச்ச எந்நாணல்லோ (ப. 84)

இவ்வாக்கியம் இதே சொல்லுக்குச் சொல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அது வருமாறு

T.L. ஸந்தி என்ற சொல்லின் பொதுவான பொருள், சேர்க்கை என்பதன்றோ (ப. 100)

S.L. ஸந்திக்கும்போள் மூந்நாமதொந்து கூடி வந்து சேருந்நது ஆகமம் (ப. 85)

T.L. புணரும் போது மூன்றாவதாக ஒன்று வந்து சேர்வது தோன்றல் என்பன சான்றுகள் (ப. 101)

2. விளக்க முறை

சொற்களையும் தொடர்களையும் S.L. பாடத்தில் அமைந்திருப்பதை விட விளக்கமாக மொழிபெயர்ப்பில் அமைத்தல் விளக்க முறையாகும்.

(எ.டு.)

S.L. வேற சிலது தம்மில்

T.L. சில பொருள்களோடு வேறு பொருள்களை இங்கு மூல பாடம் 'சிலது' என பொதுப்பெயராக (Pronoun) அமைந்திருக்க T.L. பாடம் விளக்கமாக அமைந்திருக்கின்றது.

3. மொழியமைப்பு முறை:

T.L. மொழியில் இலக்கணம் மற்றும் மரபு அடிப்படையில் மொழி பெயர்ப்பை அமைப்பது மொழியமைப்பு முறை மொழி பெயர்ப்பு எனப்படும்.

(எ.டு)

S.L. தம்மில் சேரும்போள் (ப. 80)

T.L. ஒன்றோடொன்று சேரும்போது (ப. 100)

S.L. .........அகரம் லோபிச்சு......... (ப.87)

T.L......... அகரத்தைக் கெடுத்து......... (ப. 104)

இங்கு 'தம்மில்' என்பதை 'ஒன்றோடொன்று' எனவும் 'அகரம் கெட்டு' என்பதை 'அகரத்தைக் கெடுத்து' என்றும் வாக்கிய இயைபிற்கேற்ப T.L. அமைக்கப்பட்டுள்ளது.

4. முடித்தல் முறை:

பொருள் நிறைவுற்று நிற்கும் வாக்கியங்களுடன் 'ஆகும்'

முதலிய முடித்தற் சொற்களைச் சேர்த்து வாக்கியங்களை முடிப்பது முடித்தல் முறையாகும்.

(எ டு.)

S L· ஸந்திக்குந்ந வர்ணணங்ஙளில் ஒந்நு இல்லாதெயாகுந்நது லோபம் (ப.85) T.L புணரும் எழுத்துக்களில் ஒன்று இல்லாததால் கெடுதல் ஆகும் (ப. 101)

இத்தொடரில் 'ஆகும்' என்ற சொல்லுக்கு இணையான 'ஆணு' என்ற சொல் S.L பாடத்தில் இல்லாதிருப்பினும் அதனைச் சேர்த்து வாக்கியம் முடிக்கப்பட்டுள்ளதால் அது முடித்தல் முறை மொழிபெயர்ப்பாகும்.

5. நீக்க முறை:

S.L.பாடத்தில் சொற்கள் பலவற்றை மொழிபெயர்க்காமல் நீக்கவிட்டு T.Lபாடத்தை அமைத்திருப்பினும் பொருள் சிதையாத தூய மொழி பெயர்ப்பைப் பெற முடியுமானால் அது நீக்க முறை மொழி பெயர்ப்பு எனப்படும்.

(எ. டு)

S.L மாறிப் போகுந்நு (ப.84)
T.L. மாறும் (ப.100)
S.L. மற்று சிலது (ப.84)
T.L. சில (ப. 100)
S.L. பதார்த்தம் தன்னெயும் (ப. 84)
T.L. பொருளே (ப. 100)
S.L. ஸந்தி வரும்போள் (ப.85)
T.L. புணர்ச்சியில் (ப. 101)

உண்மையில் T.L பாடம் மாறிப்போகும், மற்று சில, சொற் பொருள் கூட, புணர்ச்சிவிரின் என அமைக்கப்பட்டிருக்க

வேண்டும். ஆனால் மொழிபெயர்ப்பில் அவ்வாறு இல்லாவிடி னும் எவ்வித இழப்பும் இல்லை.

S.L. ஒந்நின்றே ஸ்தானத்து மற்றொந்நாயித் திருந்நது ஆதேசம் (ப.85)

T.L. ஒன்று மன்றொன்றாவது திரிதல் (ப.101)

இவ்வாறு T.L. பாடம் அமைந்து வருகின்ற மொழிபெயர்ப்பினை சுருக்கமுறை என்றும் அழைக்கலாம்.

6. பிரித்தல் முறை:

மொழியாக்க வசதிக்காகவும் கருத்துத் தெளிவிற்காகவும் S.L. பாடத்தில் ஒரே வாக்கியமாக அமைந்தவை T.L. பாடத்தில் இரண்டு வாக்கியங்களாகவோ அல்லது அதற்கு மேற் பட்டோ பிரித்து எழுதும் முறை பிரித்தல் முறை மொழி பெயர்ப்பு எனப்படும்.

S.L. கதயத்திலெல்லாம் கறுதிகள் வாக்யாவஸானத்தில் வருந்நதினால் மேல் பறுஞ்ஞுதரம் சப்தங்ஙளல்லாதே மற்று சப் தங்ஙள்க்றுதிகள்க்கு சேஷம் வராய்கயால் அவிடெஸந்தி

தன்னெ ஆவசியப்பெடுந்நில்ல (ப. 87)

T.L. உரைநடையிலெல்லாம் வினை முற்றுக்கள் வாக்கிய இறுதியில் வருவதால் மேற்கூறிய வகைச் சொற்களல்லாது பிற சொற்கள் வினை முற்றுக்களின் பின் வருவதில்லை. அதனால் அங்கு புணர்ச்சியே தேவைப்படுவதில்லை. (ப.103) T.L. பாடத் தில் வாக்கியம் இரண்டாகப் பிரிக்கப்பட்டு 'அதனால்' என்ற இணைப்புச் சொல்லுடன் அமைக்கப்பட்டுள்ளது.

7. ஒலிபெயர்ப்பு முறை:

S.L. ஒலிகளை அதற்குச் சமமான T.L. ஒலிகளாக மாற்றும் முறையே ஒலி பெயர்ப்பாகும்.[2] பேராசிரியர் இளைய பெருமாள் அவர்கள் S.L. பாட நூற்பாக்களையும், எடுத்துக் காட்டுகளை யும் அப்படியே ஒலிபெயர்ப்பு செய்துள்ளார். ஆனால் நூற்

பாக்கள் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டிருப்பின் நூலுக்கு இன்னும் பெருகேற வாய்ப்பு உண்டு. சான்றாக:

''அல்ல இல்லய்க்கு அந்த்யலோபம்
ஆயி போயிக்கும் ஒத்தபோல்''. (நூற்: 3)

இதனை,

''அல்ல இக்கக்கு ஈறுகெடும்
ஆயி போயிக்கும் அன்னவே''.

என மொழி பெயர்க்கலாம். ஆனால் எடுத்துக் காட்டுகளை மொழிபெயர்ப்பின் மொழியின் புணர்ச்சி மாற்றங்களைத் தெரிந்து கொள்ள இயலாம் போய்விடும். சான்றாக;

பறஞ்ஞு + ப்ரகாரம் = பறஞ்ஞுப்ரகாரம்
பார்ய + ப்ரஸவிச்சு = பார்யப்ரசவிச்சு
(16-ம் நூற்பாவின் எடுத்துக்காட்டு

இதனை' 'சொன்றபடி', 'மனைவி ஈன்றாள் என மொழி பெயர்ப்பின் புணர்ச்சியை தெளிவாக வாசகர்களால் அறிந்து கொள்ள இயலாமல் போய்விடும்.

மலையாளத்தில் நகரம் னகரம் இரண்டிற்கும் வரிவடிவில் ஒரே ஒரு வடிவமே உள்ளது. ஆனால் உச்சரிப்பிற்கேற்ப இது இருவித ஒலிவடிவங்களைப் பெற்றுவரும். தமிழில் நகர னகரங்கள் தனித்தனியாக உள்ளன. எனவே, ஒவ்வொன்றும்' அதற்கு உரித்தான் இடங்களில் அமைக்கப்படும்.

கேரளபாணிய மொழிபெயர்ப்பில் நகரம் உச்சரிக்கப்பட வேண்டிய பலவிடங்களில் னகரம் எழுதிக்காட்டப்பட்டுள்ளது. சான்றாக;

| பிழை வடிவம் | | சரியான வடிவம். |
|---|---|---|
| காற்றடிக்குன்னு | (ப.102) | காற்றடிக்குந்நு |
| காணுன்னேன் | (ப.103) | காணுந்நேன் |

என்பவற்றைச் சுட்டலாம்.

# Cognate - Patient and teyvaccilaiya:r

A.G. Natarajan
Annamalai University

1. Among the traditional Tamil grammarians, the commentator, Teyvaccilaiyar was the first scholar to identify the Cognate-Patient relationship for the accusative with an apt example. The present paper deals with the deep case 'Patient' and its classifications in the traditional Tamil grammatical treatise, particularly the concept of Cognate - Patient which was identified by Teyvaccilaiyar in Tolka:ppiyam (hence forth Tol.).

2. Deep Case Patient

At the deep level the accusative noun phrase has only the Patient case relationship. In Chafe's work (1970:98,99) the deep case Patient is the one which is unaware of what is going to happen by the action or state denoted by the verb. Fillmore (1968:25) includes this case with the neutral objective case. He says that "it is the case of anything representable by a noun whose role in the action or state is identified by the verb."

2.1 Patient and its classification

The Patient case relationship can be classified into four types on the basis of verbs and the nature of nouns. The four types are as follows:

i) Affected Patient

ii) Unaffected Patient

iii) Factitive Patient and

iv) Cognate - Patient

Vasu (1988:177-201) points out that the accusative noun phrase when occurs with the destruction verbs it is understood as the Affected Patient in the deep level. If the accusative noun phrase occurs with transfer verbs or communication verbs or psychological verbs it shows the deep case Unaffected Patient. Like this, the verbs of creation take the Factitive Patient. The Cognate - Patient is the special type because the verbs describe certain actions which by their nature implies the co-existence of a certain nominal concepts.

For example, in the following sentences

1. avan pe:ccai na:n ke:ṭṭe:n
   'I heard his speech'

2. ra:manin aḻippai ra:vaṇan e:ṟṟa:n
   'Ravanan accepted Raman's invitation'

the Cognate Patients *pe:ccai* 'speech-acc'. *aḻaippai* 'invitation -accu' imply the corresponding action as follows: *pe:ccu* 'talk' implies *pe:cina:n* 'talked-he' and *aḻaippu* 'invitation' implies *aḻaitta:n* 'invited-he'. Thus, the objects that belong to the particular description of the action are called Cognate -Patient.

### 2.1.1 Tol and Nannu:l

Tolka:ppiyar (henceforth Tolr.) (S.556) identifies twenty eight types of verbs for the accusative case. The verbs *ceṟṟu* 'destroy', *aṟu* 'cut' *kuṟai* 'decrease', *piri* 'separate' etc.,

comes under the destruction verbs and process verbs. Actually, this two types of verbs show the Affected Patient. The verbs *pukal* 'praise', *niru* 'weigh', *aḷa* 'measure' *peṟu* 'receive', *ka:tali* 'love', *añcu* 'fear' etc., are capable of Unaffected Patient. The creation verbs *iḻai* 'make', *toṭu* 'assemble', *a:kku* 'make' etc., denote the Factitive Patient. The verb *ka:* 'watch or guard' is for Cognate-Patient.

In Nannu:l (S. 296) the twenty eight types of verbs have been reduced to six classfications viz.,

i) *a:kkal* 'the act of cre..tion'

ii) *aḻittal* 'the act of destruction'

iii) *aṭaital* 'reach'

iv) *ni:ttal* 'separation'

v) *ottal* 'comparison' and

vi) *uṭaimai* 'possession'

Among this six types, the first one *a:kkal* shows Factitive Patient, the *aḻittal* shows the Affected Patient and the remainings can be included under the Unaffected Patient. In this classification the cognate object does not find a place though it has been mentioned by earlier Commentator Teyvaccilaiya:r.

3. Teyvaccilaiya:r and Cognate-Patient.

Among the twenty eight verbs of Tol, the first one is *ka:ppu* guard'. All the commentators except Teyvaccilaiya:r give an example for this verb *ka.ppu* as *u:raik ka:kkum* '(It) will guard the village'. But Teyvaccilaiya:r gives an example *ka:valaik ka:kkum* 'Perform the act of watching'. Hence the verb *ka:* 'watch' describe certain action which by its nature

implies the co-existence of a certain nominal concepts. So. Teyvaccilaiyar was the first to recognize the Cognate object for the accusative with an apt example.

References

Chafe, Wallace, L. 1970, *Meaning and the structure of language*, University of Chicago press: Chicago.

Fillmore, Charles, J 1968, 'The case for case', in *Universals in Lauguistic theory*' (eds.) E. Bach and R.T Harns, Holt, Rinehart and winston. PP. 1-88.

Vasu, R. 1988, *Case System in Modern Tamil*, Ph.D Thesis, Annamalai University, Annamalai Nagar.

# Tulu Dialects

Ramakrishna T. Shetty
Annamalai University

**Introduction:**

Since Caldwell, Tulu language has been considered as one of the most highly developed and independent member of Dravidian family of languages. It occupies the 5th position among the five major Dravidian languages such as Tamil, Malayalam, Kannada, Telugu and Tulu. The Tulu speaking area, i.e., Tulu nadu, is a compact one from geographical as well as socio-linguistic points of view. Tulunadu is situated on the coastol belt of the present Karnataka and Kerala states (i.e., Dakshina Kannada District of Karnataka state and Kasaragod District of kerala state). The number of Tulu speakers in India and abroad is about 7[illegible] lakhs. In Bombay it self (which is considered as the New York city of India) there are about 10 lakhs of people speak this language.

Like other regional languages, Tulu also is the mother-tongue of the natives belonging to the various castes and tribes such as Brahmins, Bunts, Jains, Moyilies, Kumbaras, Saphaligas, Billavas, Mogaveeras, Harijans, Koragas and others. people belonging to different communities speak distinct languages such as Tulu, Kannada. Konkani, Marathi. Malayalam, Urdu, Koraga etc, as their mother tongue, but use common Tulu dialect for communication when they come into contact with one another.

Classification of dialects:

The earlier scholars classified the Tulu dialects mainly into 2 types, namely, Brahnin Tulu and common Tulu (i.e. Non-brahmin Tulu).

But Govind Pai Research Centre, Udipi, in their Tulu Lexicon project, classified the Tulu dialects on the basis of data which they have collected during their field work. They made the dialect survey by fixing the dialect areas. They did the field work in 45 villages. They have collected and also tape recorded about 50 thousand vocabulary items and their variations from the spoken language of different regions and communities. They have classified the Tulu dialects as follows; Regional dialects, North and South Tulu Regional sub-dialects; North - West Tulu.

2. Regional sub-dialects: North-West Tulu. (i. e. Udipi-Mangalore area), North-East Tulu (i. e. karkala-Beltangadi-area), South-West Tulu (i. e. Manjeshvara-kasaragod area), South-Central Tulu (i. c. Bantwal-Puttur-Bettangadi area), & South-East. Tulu (i. e. Sullia-subrahmaneya area). Social dialects: Common Tulu (Bunts, Billavas, Mogaveera etc), Brahmin Tulu (Shivalli, ṣhiva brahmin etc), Jaina Tulu, Harijan Tulu and Tribal Tulu. Social sub-dialicts: shivalli brahmin Tulu, shiva brahmin Tulu (Come under Brahmin Tulu). Jaina Tulu, Bunts Tulu, Gowda Tulu, Mogaveera Tulu, Deevadiga Tulu, Madivalas Tulu, Kilesi Tulu (From Bunts Tulu to kilesi Tulu all come under Common Tulu), Meera Tulu, Mansa Tulu, Maṇilra Tulu, Naike, Ajalas, Pambada Tulu, Bakuda Tulu (all come under Harijan Tulu) koraga Tulu, malekuḍiyo Tulu (come under Tribal Tulu).

The people who work in the Tulu Lexicon Project (of Govind Pai Reserch Centre, Udipi) say that the examples given by the earlier scholars for shivalli brahmin Tulu dialect,

are found nowadays in south common Tulu dialect are found now only in North Tulu dialect. For example, aḍakki 'to throw', aḍappu 'to plough', adeṅgɨ 'to hide' oḷepu 'to call' etc. of brahmin Tulu dialect found in south common Tulu dialect also nowadays and deṅgɨ, 'to hide', dakkɨ 'to throw', leppi 'to call' etc. of Common Tulu dialect are found in North Tule only nowadays.

I would like to classify those dialects in the following manner: Main two regional dialects: (1) North Tulunad dialect (2) South Tulunad Tulu. Regional sub-dialects: (a) North-west Tulunad dialect (Covers Udipi-Mangalore area), (b) North-East Tulunad dialect (covers karkala Bettangadi area), (c). South-west Tulunad dialect (covers Manjeswara-Kasaragod area), (d) South-Central Tulunad dialect (covers Bontwal-Puttur-Bettangadi area) and (e) South-East Tulunad dialect (covers Sullia-Subrahmanya area) Main two social dialects: (1) Brahmin dialect (2) Common dialecl, social sub-dialects: shivalli brahmin dialect, shiva brahmin dialect, Jaina dialect, Bunts dialect, Billava dialect, Gowda dialect, Mogaveera dialect, Deevaḍiga dialect, Maḍivaḷa dialect, kilesi dialect, Mera dialect, Mansa dialect Maṇiira dialect, Nalke, Ajila, Pambada dialect, Bakuda dialect, koraga dialect, Malekudiya dialect, Havyaka brahmin Tulu dialect, Christian Tulu dialect, Muslim Tulu dialect, Marathi Tulu dialect, konkani Tulu dialect etc.

Few examples:

| North brahmin Tulu | South brahmin Tulu | |
|---|---|---|
| ampu | ma:mpu | 'to do' |
| aḷpuṇa | buḷpuṇa | 'to weep' |
| purṣe | madima:ye | 'bride-groom' |
| ra:mmaṇi | buḍetti | 'wife' |

and so on.

| North common Tulu | South common Tulu | |
|---|---|---|
| olɛ | olɛ | 'butter-milk' |
| o:ni | o:ṇi | 'ladder' |
| | | and so on. |

| North Tulu | South Tulu | |
|---|---|---|
| kaṇḍa | kaṛḍo | 'field' |
| sara | saro | 'garland' |
| kombuta | kombuda | of the horn' |
| u:ɹuṭu | u:ruḍu | 'in a village' |
| | | and so on. |

| North brahmin Tulu | South brahmin + common Tulu | North common Tulu | |
|---|---|---|---|
| iddi | iddi | ijji | 'no' |
| ittɛ | ittɛ | isɛ | 'now' |
| | | | and so on. |

Dr.D.N.S. Bhat has classified only the social Tulu dialects but not the regional dialects. But he has also included all the Non-brahmin Tulu dialects under common Tulu. He has given a big word list on them. I will mention only few of them.

| | Brahmin Tulu [Udipi) | Sapaliga Tulu. [Udipi] | Jaina Tulu [Karkala] | Jaina Tulu (Puttur) | Holeya Tulu [Kasaragod] | Bunts Tulu. [Kasaragod] |
|---|---|---|---|---|---|---|
| 'cocoanut, tree | ta:ḷξ | ta:rɛ | ta:rɛ | a:rɛ | ca:rɛ | sa:rɛ |
| 'river, | tudɛ | tudɛ | hudɛ | sudɛ | cudɛ | sudɛ |

to

In the Tulu Lexicon, they (scholars who work in the Tulu Lexicon project at Govind Pai Resrarch Centre, Udipi] have made the entry of various lexical items [with dialect differentiation] by mentioning the abbreviations for various regional and social dialects like this:

[a] eḍaṅki—b, N, SC, SE

edeṅki ~ eḍaṅki — P, Sw

ideṅki — j

aḍaṅki — h, Sw, h,Sc

danki — Cht, N

ḍaṅki — SE, Ct—Sw, Ct—SE.

*Meaning.* to stumble, to hit against, to make a mistake to disregard.

(b) ta:di — Cht, NW, NE

ha di — b, N, SC, SE, J

Sa:di — bC, SW, SC, SE, Cht

ša:di — h, sw

ca:di — t, Sw

a:di — r. o., (3, t, SE.

*Meaning:* Way, path, opportunity, support, help, plan, means.

and so on ...

They have really showed the way to the young scholars to study further on Tulu dialects, by preparing the Tulu Lexicon (First volume has been already published by them) in this way. Still further study may add some more Tulu dialects to the present list.

# வினையெச்சம் எதிர்மறையில் முடிதல் பற்றிய இலக்கண ஆய்வுகள்

கி. நாச்சிமுத்து
கேரளப் பல்கலைக்கழகம்

1. வேற்றுமை உருபுகள் எதிர்மறை வினை கொண்டு முடியும் போதும் விதிவினையோடு முடிந்ததை ஒக்கும் என்பார் தொல்காப்பியர் (சொல். 107 சேனா.). மரத்தைக் குறையான, வேலான் எறியான் என்ற எடுத்துக்காட்டுகளில் குறையான், எறியான் என்ற வழி வினை நிகழாமையின், மரமும் வேலும் செயப்படு பொருளும் கருவியும் எனப்படாவாயினும், எதிர் மறைவினையும் விதிவினையோடொக்கு மென்பது நூன்முடிபாக லான், ஆண்டு வந்த உருபுஞ் செயப்படுபொருள் முதலாயின வற்று மேல் வந்தனவெனப் படுமென வழுவமைத்தவாறு என்று சேனாவரையரும்; அதை ஒட்டி நச்சினார்க்கினியரும் விளக்கம் செய்வர்.

2. இது போன்று பெயரெச்ச வினையெச்சங்கள் எதிர் மறையாக வரும்போது (எ.டு. உண்ணாத சாத்தன், உண்ணாது வந்தான்) வினை நிகழவில்லை எனினும் விதிவினை போன்றே தம்தம் எச்சமாகிய பெயரையும் வினையையும் கொண்டு அல்லது அமையாத நிலையில் வேறுபடா என்பர் நச்சினார்க்கினியர் (தொல், சொல் 238, நச்சர்).

3. ஆனால் வேற்றுமை உருபு கொண்டு முடியும் வினை எதிர்மறையாயினும், விதிவினையிலிருந்து (உடன்பாட்டுவினை) வேறுபடாது என்று கூறிய தொல்காப்பியரும், பிறரும், வினை யெச்சமுடிவு கூறும் இடங்களிலும் பிறவிடத்தும் அது எதிர்மறை வினைகொண்டு முடிவது பற்றிப் பேசவில்லை.

4. வினையெச்ச முடிவுகளை நாம் நான்கு நிலைகளில் காணலாம்.

1. உடன் பாட்டு எச்சம் + உடன்பாட்டு முற்று: உண்டு வந்தான்

2. உடன் பாட்டு எச்சம் + எதிர்மறை முற்று: உண்டு வாரான்

3. எதிர்மறை எச்சம் + எதிர்மறை முற்று உண்ணாது வாரான் (அபாவாபாவம்)

4. எதிர்மறை எச்சம் + உடன் பாட்டு முற்று: உண்ணாது வந்தான்.

5. இவற்றில் முதல் வகையில் சிக்கல் இல்லை. நான்காவது வகையைத் தொல்காப்பியர் கூறும் பெயரெச்ச வினையெச்சங்களுக்கு எதிர்மறை உண்டு என்பதில் அடக்கி விடலாம். ஏனைய இரண்டும்தான் வேறுபட வருபவை.

6. இது பற்றிய முதன் முதல் தெளிவாகச் சிந்தித்துள்ள சுப்பிரமணிய தேசிகர் (17-ஆம் நூ) தம் பிரயோக விவேகத்தில், மூன்றாவதாக உள்ள இரண்டு எதிர்மறைகளைக் கீழ்க்கண்டவாறு விளக்குவார் (39 காரிகை உரை):

''அறவினை யாதெனின் கொல்லாமை என்னும் குறளுள் (321) பரிமேலழகர் விலக்கியது ஒழிதலும் செய்தலோடு ஒக்கும் ஆகலின் கொல்லாமை அறவினை ஆயிற்று என்பர்.

காலின் நீர் நீங்காமை உண்டிடுக, பள்ளியுள் ஈரம் புலராமை ஏறற்க (ஆசார. 19)

என்பது, எச்சமும் முடிக்கும் சொல்லும் எதிர்மறுத்தலின், அது சொல்லான் முடியாது, ஈரம் புலர்ந்த பின் ஏறுக எனப் பொருள்படுதலின், அஃது எதிர்மறை ஆகாது என்க. இதனை அலங்கார நூலார். அபாவாபாவம் என்பர்.'' அதாவது இரண்டு எதிர்மறைகள் உடன் பாட்டுப் பொருளைத் தந்து விடுவதால் இது எதிர்மறை ஆகாது. இது அணி நூற்செய்தி என்பது இவர்

கருத்து. தண்டியில் காணப்படும் இவ்வணிக்கு வாராமை இல்லை வயவேந்தர் என்ற எடுத்துக்காட்டுக் காணப்படுகிறது.

7. எனவே எஞ்சியுள்ள இரண்டாம் வகை: உடன் பாட்டு எச்சம் + எதிர்மறை முற்று-என்பதே இனி ஆராயத் தக்கதாக உள்ளது. அதாவது பொருளின் புடை பெயர்ச்சியாகிய வினை, வினை எச்சமாக முடியும்போது வினை நிகழ்ந்து முடிய வேண்டும். அவ்வாறன்றி வினை நிகழாத எதிர்மறை எங்ஙனம், வினையெச்சத்தை முடிக்கும் சொல்லாக வரும் என்பதே இதில் உள்ள சிக்கல்.

8. இத்தகைய அமைப்புகள் பற்றி முதன் முதலில் சிந்தித்தவர்கள் திருக்கோவையார் உரையாசிரியர் பேராசிரியரும் (கி.பி. 3), பரிமேலழகரும்தான் (கி. பி. 13).

9. பேராசிரியர், திருக்கோவையாரில் (1) 'அறியச் சிறிது... வாய் திறவாவிடின். என்ற தொடரில் (41) 'அறிய வென்னும் வினையெச்சமும் சிறிதென்னும் வினையெச்சமும் திறவாவிடின்; என்னும் எதிர்மறையில் திறத்தலோடு முடிந்தன என்னும், (2) காற்றில கண்டன்ன மென்னடை கண்மலர் நோக்கருளப் பெற்றில மென்பினை (97) என்ற வாக்கியங்களில் 'கண்டென்பது கற்றலோடும் (3) அருள வென்பது பெருதலோடும் முடிந்தன என்றும் விளக்குவர்; பரிமேலழகர் குறளில் (4) 'மருங் கோடித் தீவினை செய்யான்' (210) என்ற தொடரில் ஓடி என்னும் வினையெச்சம் செய்யான் என்னும் எதிர்மறை வினையுள் செய்தலோடு முடிந்தது என்னும் (5) 'எண்பதத்தான் ஓரே முறை செய்யா மன்னவன்' (548) என்ற தொடருள் எண் பதத்தான் என்னும் முற்று வினையெச்சம், ஓரா என்னும் வினையெச்சமும், செய்யா என்னும் பெயரெச்ச எதிர்மறையுள் செய்தல் வினை கொண்டன என்றும் எதிர்மறை வினைகளுக்கு வினைமுடிபு கூறுவார். அதுபோல் (6) 'அலர் நாண் ஒவ்வதோ (1149) என்ற வாக்கியத்தில் நாண் என்னும் வினையெச்சம் ஒல்வது என்னும் தொழிற் பெயருள் ஒல்லுதல் தொழிலோடு முடிந்தது என்பார்; இது போன்றே (7) ஆக்கம் கருதி முதலிழக்கும் (463) என்பதில் கருதி என்னும் வினையெச்சம் இழக்கும் என்னும் பெயரெச்ச வினை கொண்டது என்றும் விளக்குவார்.

10. இங்கு மேலே கண்ட ஏழு எடுத்துக் காட்டுகள்,

1. அறியச் சிறிது. வாய் திறத் தலைச்செய்யாது விடுன்

2. கண்டு கற்றலைச் செய்தில

3. அருளப் பெறுதலைச் செய்தில

4. ஓடிச் செய்தலைச் செய்யான்

5. எண்பதத்தானாகி ஓவாது முறை செய்தலைச் செய்யாது

6. நாண ஒல்லுதல் செய்ய வல்லதோ

7. கருதி இழத்தலைச் செய்யும்

என்று விளக்கப் பெறுகின்றன. இவற்றின் அமைப்பைச் சுருக்கி

வி. எ + முடிக்கும் வினை (தொழிற் பெயர் வடிவத்தில் அமையும் வினைப்பகுதி + செய் என்ற காரியவாசகம்) என்று வரையறுக்கலாம். வினைகள் எல்லாம் இவ்வமைப்பிலேயே உள்ளன என்பது வடநூலுள்ளும் தமிழ் நூலுள்ளும் காணப் படும். காரகக் கொள்கையின் துணிபாகும் (பார்க்க: 14)

11. இத்தகைய அமைப்புகள் பற்றியும், விளக்கங்கள் பற்றியும் சிந்தித்துத் திருக்குறள் நுண் பொருள் மாலை ஆசிரியர் திருமேனி காரிரத்தினக் கவிராயர் (கி.பி. 16) "உடம்பாட்டெச்சம் உடம்பாட்டு வினை கொள்ளுதலின்றி எதிர்மறை வினை கொள்ளாதென்பது அவர்கள் கருத்துப் போலும் வினையெச்சத்திற்கு விதி. இவ்வாறு கூறாமையின் அவர்கள் கருத்தறிதல் அரிதென்க" என்றெழுதினார் (குறள் 210 - விளக்கம்).

12. காரிரத்தினக் கவிராயருக்குப் பின் வந்த பிரயோக விவேக நூலாசிரியர் சுப்பிரமணிய தீக்கிதர் (கி.பி. 17) பிரதியோகி (மறைவினை) நியோகியோடே (விதிவினை) ஒக்கும் என்பதே கருத்தாயிற்று இதனை ஆகாரியரோபம் என்பாரும் உளர் என்று விளக்குவர்.

ஆகாரியாரோபம் - நன்றாக அறிந்து வைத்தும் ஒன்றற்கு

உண்மையில் இல்லாத செய்தியை அதன் மேல் ஏற்றிக் கூறும் இல்லதனைக் கொணர்ந்து ஏற்றிக் கோடல். அது புத்தி பூர்வமாகச் சிலையைத் தெய்வமாகக் கொண்டு வழிபடுதலும், பிறன் ஒருவனைத் தந்தையாகக் கொண்டு சிராத்தம் புசிப்பித்தலும் போல்வன (பி.வி 50 உரை),

13. சுப்பிரமணிய தீக்கிதரை ஒட்டித் தோன்றிய சுவாமிநாத தேசிகர் (கி.பி. 17) தமது இலக்கணக் கொத்துரையில் இதை முழுக்க ஆய்ந்து மறைச் சொலின் முதல் நிலை விதிப் பொருள் பெறும் (சூத் 77: 4) என்ற விதியையும் அமைத்து அதைக் கீழ்க் கண்டவாறு விளக்குவர்.

"இனி, ஒரு பொருளின் புடை பெயர்ச்சியே வினை என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. அவ்வினையைக் கொள்ளுதலால் வினையெச்சம் என்பதும் அங்ஙனம் முடிந்தது. அவ்வினையெச்சம் வினையைக் கொள்ளுதல் அன்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙனம் முடிந்தது. ஆகவே, உண்டு நடந்தான் என்பது பொருந்தும். உண்டு நடவான் என்பது பொருந்தாது; இலக்கணவழுவேயாம். ஆகையால் அம்மறைச் சொல்லினுள் முதல் நிலையைப் பிரித்து ஒரு பொருளின் புடைபெயர்ச்சி ஆகிய புடை பெயர்ந்த

நடத்தல் என்னும் தொழிற் பெயராக்கி. வினையெச்சத்தை வினை கொண்டு முடித்துப் பின்பு செய்யான் என்னும் மறையை வருவித்து உண்டு நடத்தலைச் செய்யான் என்று முடிப்பர். இக்கருத்துப் பரிமேலழகருக்கும் உரையாசிரியருக்கும் பொருந்தும் இது மறைச் சொல்லின் முதல் நிலை விதிப் பொருள் பெற்றது"

14. இவ்வாறு இவர்கள் விளக்குவதற்கு அடிப்படையாக இருக்கிற கருத்து ஒவ்வொரு வினையிலும் 'வினை' தொழிற் என்ற வடிவிலும் காரிய வாசகமாகிய பொதுவினை 'செய்யான்' என்ற வடிவிலும் உள்ளது என்று கொள்கிற காரகக் கொள்கையேயாகும், (வனைதலைச்செய்தான்). தொழிற் பண்பு வினை முதலிய காரகங்களால் புடை பெயருங்கால் அது வினை

யெனப்படும் என்பர் சிவஞான முனிவர் (தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி பக்.51). தொல்காப்பியர் இதை 'வினை' (சொல் 112) என்பர். இது பிரயோக விவேகம் (காரி12) இலக்கணக் கொத்து (19:31) என்பவற்றில் அகநிலைச் செயப்படு பொருள் எனப்படும். இன்றைய தொடரியலார் cognate object என்பதும் இதுவே. இனி செய் என்ற பொது வினை (காரியவாசகம்) எல்லா வினையிலும் இருப்பதால்தான் யாதொரு தொழில் செய்தானையும் நாம் நீ என் செய்தாய் என்று வினவ முடிகிறது என்று சேனாவரையர் (தொ. சொல் 222 உரை) என்று கூறுவது நினைக்கத்தக்கது.

15. அடுத்தது இன்றைய தொடரியலார் அகநிலை அமைப்பில் விதி மறை முதலியன அமைந்து கிடக்கின்றன என்று கூறுவது போலவே சுவாமிநாத தேசிகரும் "விதியும் மறையும் ஒரு சொற்கண்ணே உள்ளதே வினை" (இலக்கணக் கொத்து: 66 சூத்திர உரை) என்று கூறுவர். இவையெல்லாம் வடநூற் கருத்தை (வாக்கியபதீயம் முதலிய நூல்களை) ஒட்டியன என்று தெரிகிறது. அந்நூற் கருத்துகள் இன்னும் ஒப்பிட்டு ஆராயப் பட வேண்டும்.

16. இவ்வாறு ஒரு இலக்கணச் சிக்கல் பற்றிக் காலந்தோறும் ஏற்பட்ட கருத்து வளர்ச்சியைக் காணும்போது இலக்கண ஆராய்ச்சி வரலாற்றில் ஒரு தொடர்ச்சியைக் காண முடிகிறது. அதோடன்றி இன்றைய தொடரியல் மொழியியலாளர் கொள்கிற சில அடிப்படைக் கோட்பாடுகளைப் போன்றவற்றை இலக்கண ஆசிரியர்களும் கொண்டிருந்தனர் என்று புலனாகிறது. இவை இன்னும் தனித் தனியாகவும் விரிவாகவும் ஆராயத்தக்கன.

# சார்பெழுத்துக் கோட்பாடு (நன்னூல், இலக்கண விளக்கம் - ஓர் ஒப்பாய்வு)

ச.அ.இரெ. பரதராஜ்,
கன்னியாகுமரி

## 1.1 சார்பெழுத்தின் இலக்கணம்

நன்னூல் சார்பெழுத்தின் இலக்கணத்தைக் கூறவில்லை. ஆனால் இலக்கணவிளக்க உரை (5,13) 'முதலெழுத்தாந் தன்மையின் நீங்கிச் சார்பில் தோன்றுவது சார்பெழுத்து' என இதன் இலக்கணத்தைக் குறிப்பிடுகின்றது.

## 1.2 சார்பெழுத்தின் வகை

நன்னூல் (60) சார்பெழுத்துக்களை, உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம், எனப் பத்து வகைகளாகக் சொல்ல, இலக்கண விளக்கம் (5) இவற்றுள் ஆய்தக்குறுக்கம் தவிர்ந்த ஒன்பதனைச் சார்பெழுத்துகளாகச் சுட்டுகின்றன.

## 1.3 சார்பெழுத்தின் விரி

சார்பெழுத்துகளின் விரியை நன்னூல் (61) முன்னூற்று அறுபத்தொன்பது எனவும், இலக்கண விளக்கம் (5) இருநூற்று நாற்பது எனவும் கூறி, உயிர்மெய், ஔகாரக் குறுக்கம் தவிர்ந்த சார்பெழுத்துகளின் விரியில் மாறுபடுகின்றன. நன்னூல் ஒழிந்த பெரும்பான்மை இலக்கண நூல்கள் விரிபற்றிக் கூறும் கருத்துகள் இலக்கண விளக்கக் கருத்தோடு உடன்படுதலின், இலக்கண விளக்கக் கருத்தே ஏற்புடையதெனக் சொல்லலாம்.

சார்பெழுத்துகளை நன்னூல் (60) ஒரே நிரலாகக் கூற, இலக்கணவிளக்கம் (5) குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றையும் ஒரு நிரலாகவும், ஏனைய ஆறையும் மற்றொரு நிரலாகவும் கூறுகிறது.

இலக்கணவிளக்க உரை (16,17) இகர உகரங்கள் குறுகி ஒலித்தமையால் சார்பெழுத்துகள் ஆயினும், இவை உயிரெழுத்துகளேயாம் எனவும், ஆய்தம் 'புள்ளி' என அழைக்கப்படுதலானும், ஆய்தத்தோடு ஒற்றளபெடை பதினொன்றெனச் சுட்டப்படுதலானும், இதனை ஒற்றெழுத்து எனவும் கூறி, இவை முதலெழுத்தாந் தன்மையைப் பெறுதலின், இம் மூன்றையும் ஒரு நிரலாகவும், முதலெழுத்தாந் தன்மை இன்மையான் ஏனையவற்றை வேறு நிரலாகவும் குறிப்பிடுகின்றது.

## 2.1 உயிர்மெய் எழுத்துகள்

உயிர்மெய்கள் மெய், உயிர். எழுத்துகள் கூடியவழித் தத்தம் வடிவில் திரிந்தும், அளவில் குன்றியும் அமையுமென இருநூல்களும் (நன்:89;இல. விள: 18) கூறுகின்றன. எனவே இவ்விரு நூல்களும், முதலெழுத்தாந் தன்மைகளினின்று வடிவு, மாத்திரை போன்றவற்றில் வேறுபட்டமைவதனைச் சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

## 2.2 ஆய்தம், ஆய்தக் குறுக்கம்

இருநூல்களும் (நன். 90,228,235; இல.விள: 17,138,144) ஆய்தம் குறிப்பிட்ட சில சூழல்களிலும், புணர்ச்சியால் மெய்கள் திரிந்தமையும் சூழல்களிலும் தோன்றுமெனக் கூறுகின்றன. நன்னூல் (97) புணர்ச்சியால் தோன்றும் ஆய்தம் தன் மாத்திரையில் குறைந்து ஒலிப்பதை ஆய்தக் குறுக்கம் என்று சுட்ட, இலக்கண விளக்க உரை (5) இவ்வாய்தம் தன் மாத்திரையில் குறையாது ஒலித்தலின் ஆய்தக் குறுக்கம் என்ற ஒன்று இல்லையெனக் குறிப்பிடுகின்றது. ஈண்டும், இவ்விரு நூல்களும் முதலெழுத்தாந் தன்மையினின்று பிறப்பு, மாத்திரை போன்றவற்றில் வேறுபட்டவற்றையே சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன என்பது தெரியவருகின்றது. இதனோடு, நன்னூல், தம்

அளவில் குறைந்து ஒலிப்பனவற்றையும் சார்பெழுத்துகளாகக் கொள்கின்றது.

### 2.3 உயிரளபெடை

நன்னூல் (91) நெட்டெழுத்துகள் மிக்கொலித்தற்குக் குறியாக அவற்றின் இனக்குறில்கள் அவற்றின் பின்வரும் எனவும், இலக்கணவிளக்கம் (19) நெட்டெழுத்துகள் தமக்குப் பின் நிற்கும் ஒத்த குற்றெழுத்துகளோடு கூடி ஓசை நிறையுமாறு மிக்கொலிக்கும் எனவும் கூறி, தத்தம் மாத்திரையினின்றும் மிகுந்தொலிப்பனவற்றைச் சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன.

### 2.4 ஒற்றளபெடை

நன்னூல் (92) குறித்த பதினொரு மெய்யெழுத்துகளும் மிக்கொலித்ததற்குக் குறியாக அவ்வவ் எழுத்துகளே வரிவடிவாய் எழுதபபடும் எனவும், இலக்கணவிளக்கம் (20) இவை அவ்வவ் எழுத்துகளோடு கூடி மிக்கொலிக்கும் எனவும் கூறுகின்றன. ஈண்டு இவ்விரு நூல்களும், தத்தம் அளவின் மிகுந்தொலிப்பனவற்றைச் சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

### 2.5 குற்றியலிகரம்

இருநூல்களும் (நன். 93; இல. விள. 15) 'மியா' என்னும் அசைச்சொல்லின்கண் நின்ற இகரமும், யகரம் வருமொழிக்கு முதலாக, நிலைமொழிக்கு ஈறாகி நின்ற குற்றியலுகரம் திரிந்து உண்டாகும் இகரமும் தன் மாத்திரையில் குறுகி ஒலிக்கும் எனக் கூறுதலின், இருநூல்களும், புணர்ச்சியான் திரிந்து உண்டாகித் தத்தம் அளவின் குறைந்து ஒலிப்பன- வற்றையே சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

### 2.6 குற்றியலுகரம்

இருநூல்களும் (நன்.94,99; இல. விள. 16,24) குறிப்பிட்ட சில சூழல்களில் உகரம் குறுகி ஒலிப்பதாகக் கூறுகின்றன. மேலும் இலக்கணவிளக்க உரை (1), 'நுந்தை' என்னும் முறைப்பெயரில் நின்ற உகரமும் குறுகி ஒலிப்பதாகக் கூறுகின்றது. ஈண்டும்

இவ்விரு நூல்களும் குறிப்பிட்ட சூழல்களில், தத்தம் அளவின் குறைந்து ஒலிப்பனவற்றையே சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

### 2.7 ஐகாரக் குறுக்கம்

இருநூல்களும் (நன். 95,99; இல.விள. 21 ,24) தற்சுட்டளபொழி நிலையில் ஐகாரங் குறுகி ஒலிப்பதாகக் கூறுகின்றமையால் இவ்விரு நூல்களும், தம் அளவின் குறைந்து ஒலிப்பனவற்றையே சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

### 2.8 ஔகாரக் குறுக்கம்

இருநூல்களும் (நன். 95,99; இல. விள. 21, 24) தற்சுட்டளபொழி நிலையில் ஔகாரங் குறுகி ஒலிப்பதாகக் கூறுவதால், தத்தம் அளவில் குறைந்து ஒலிப்பனவற்றையே இருநூல்களும் சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

### 2. 8 மகரக் குறுக்கம்

இருநூல்களும் (நன். 96, 120; இல. விள. 22, 34) னகர ணகரங்களை அடுத்து வரும் மகரமும், வகரத்தின்மிசை நிற்கும் மகரமும் தம் மாத்திரையில் குறைந்து ஒலிக்கும் எனக் கூறுகின்றன. ஈண்டும் இருநூல்களும் தம் அளவினின்றும் குறைந்து ஒலிப்பனவற்றைச் சார்பெழுத்துகளாகக் கொள்கின்றன எனலாம்.

### 3. 1. சார்பெழுத்துக் கோட்பாடு

நன்னூல், இலக்கணவிளக்கம் ஆகிய இரு நூல்களும் முதலெழுத்துகளினின்றும் வடிவு, மாத்திரை, பிறப்பு ஆகியவற்றில் சிறிது மாறுபட்டமையும் ஒலிவடிவங்களையே சார்பெழுத்துகள் எனச் சுட்டுகின்றன. இந்நூல்கள் குறிப்பிடும் சார்பெழுத்துகளுள் சிலவற்றிற்கு மட்டும் அவற்றின் வருகை முறை குறிக்கப்பெறுவதால் அவற்றைக் குறிப்பிட்ட ஒலியன்களின் மாற்றொலிகளாகக் கருதலாம். இவை பொருளை வேறுபடுத்தும் நிலையில் மட்டுமே தனித்தனி ஒலியன்களாகக் கருத

are mostly due to the impact of the spoken language. This type of spoken forms found place in the inscriptions along with the standard usages, and so the variations in the usage.

Example: 1. ṛ ⟶ ḷ

*puḷakkaṭai* 'backyard of the house' (Bowringpet, 35a)

2. u ⟶ o

*puttakam* 'book (modern usage)

*pottakam* 'tax ledger' (kolar, 101)

There are forms where we find the loss of certain phonems also. However, both the forms are found to occur in the inscriptions [with or without the phoneme(s)]

Example: 1. *nicatam* and *nitam* (cannapatna, 128)

(*ca* ⟶ *θ*)

2. *varivu* and *vari* (Malur, 19)

(*vu* ⟶ *θ*)

## USE OF TECHNICAL TERMS AND SEMANTIC SHIFT

*ka:laccanti* is a term found in the inscription (Malur, 98) to refer to the puja performed at different times during a day. This is a general term whereas in modern use *cantikka:lappu:cai* is used in a specific sense to denote the puja performed at noon. So, from generalization now we find specialisation of meaning of a particular form. However, in the inscrpitional language we find the word *ciṟuka:laiccanti* (Mulbagal, 184) to denote a specific meaning viz., puja performed in the early morning.

In the same way the term *oḷukki* is used in a general meaning viz, mixing the sand with cement'.

Example: *maṇal oḷukki kaṭṭina* (Malur, 99)

In modern use the term *oḷukki* has a specific sense to denote spilling of any liquid thing.

## USE OF SYNONYMS

Inscription language also shows the use of synonyms. With reference to a particular context mentioned above, we find the use of different forms to denote one and the same meaning at different periods and in different inscriptions.

| | | |
|---|---|---|
| Example : | *ahitam* | 'prevention' (Hosekote, 142) |
| | *vignam* | (chinthamani Taluk 90) |
| | *aniya:yam* | (channapatna 976) |
| | *irakkinam* | (Hosekote, 143) |
| | *ilaṅkaṇam* | (sidlagatta, 26) |

# தமிழ் எழுத்து எண்ணிக்கைக்கான விளக்கம்

M. மணிவண்ணன்
ஸ்ரீ பெரும்பூதூர்.

மக்கள் தங்கள் அகத்தின் கருத்தை மற்றவர்க்கு உணர்த்த உற்ற துணையாக இருப்பது மொழி, இந்த மொழி அகத்தை பிரதிபலிக்கும் கண்ணாடியாக அதாவது அதன்அடிப்படை உருவத்தை ஒத்து அமைவது சாலச் சிறந்தது. இதன் படி அமைக்க பட்டதுதான் அறிவியல் சார்ந்த தமிழ் எழுத்தும் அதன் மொழியும்.

இப்படியாக தாயின் அகத்தை சார்ந்திருக்கும் மொழி வழியேதான் அவன், இனம், மதம், வசிக்கும் இடம், குறிப் பிடுவதற்கும் அவன் அறிவு வளர்ச்சிக்கும் நாகரீக உயர்வுக்கும், பண்பாட்டு ஒற்றுமைக்கும், அவன் நடவடிக்கைகளுக்கும், வாழ் வின் உயர்விற்கும் ஒரு வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்று இயற்கையோடு இயைந்து ஒழுகும் வழியாக அமைக்கப்பட்டது தான் தமிழ்.

தமிழ் என்பதன் பொருள் - தனிமை (தனியாக) - மனிதனி டம் தனியாக மூழ்கியுள்ள மனத்தை ஒத்து அமைந்துள்ளதால் 'தமிழ்' என்றர்களோ, அல்லது தாய்மொழி தம்முள்ளும் மூழ்கி (அமிழ்ந்து) வெளிப்படுவதால் 'தம்முழ்' என்பது ''தாமிழ்'' என்று பெயர் வந்ததோ அல்லது 'தாய்மொழி பூமியில் கடலில் அமிழ்ந்துள்ள நாடுகளுக்கும் பரவவேண்டும். என்பதால் அதன் முதல் இரண்டாம் மூன்றாம் எழுத்துக்களை சேர்த்து 'தாமிழ்' என்பது பின் வழக்கில் 'தமிழ்' என்று மருவியுள்ளதோ, இது விவாதிக்க வேண்டிய ஒன்றுதான். இதற்கு மணிமேகலை சாது வானின் கதையை நினைவு படுத்தலாம்.

தமிழின் பழமையை அதன் காலத்தை திருவள்ளுவர் கூட வரையறுக்க முடியாமல், தன் குறளில் அ,க,ஆ (அகர) முதல் லான (உயிர் முதல் மற்றும், உயிர் மெய்யின் முதல், அடுத்த உயிரின், இரண்டாவது) எழுத்தொலி எல்லாம் ஆதியில் பரிணாம மனிதன் ஆதிக்கு (சக்திக்கு) பகுத்த (பக) காலம் முதல் உலகத் தில் இருந்தது என்கிறாரோ? சிந்திக்க வேண்டும்.

முற்காலத்தில் தோன்றிய எழுத்துக்களின் உச்சரிப்பு, பழக்க கூற்றலினால் உச்சரிக்க கூடியது, அதன் வடிவம், நாகரிகம் வளர வளர மாறியுள்ளது. ஆனால் அதன் எண்ணிக்கை மட்டும் கூடவோ குறையவோ இல்லாமல் உள்ளது ஏன்? இதை எதன் அடிப்படையில் அமைத்தார்கள்? இதன் காரணத்தை இங்கு விவாதிக்கலாம்.

படம் 1&2&3-ல் உள்ளபடி உயிர்களின் மூளையில் புலன் வாங்கிபரப்படுகின்ற இடமாற்றம் போன்ற சில நிலையே வாலில்லா குரங்கில் இருந்து மனிதன் தோன்றிய விதம். மூளையில் புலன் வாங்கி பரப்புக்கள் எல்லா நரம்பு மண்டல உயிர்க்கும் மின் ஏற்பி பரப்பாக (Condencer Plate) அமைந் துள்ளது.

படம் 1&2&3 இல் உள்ள அமைப்பே மனம்(அகம்-அகரம்) என்றும் இவற்றில் பெறப்படும் நரம்பு சார்ந்த மின் தூண்டல் களின் எண்ணிக்கை (புலன் ஆற்றல்) வேறுபாடுகளினால் மனம் கிளர்ச்சியடைவதும், மேல் அடுக்கில் ஆற்றலின் ஒத்த நிலை யினால் மனிதன் தூங்குதல் என்னும் நிகழ்ச்சியும், இந்த ஒத்த நிலையில் இதற்கும் மேல் மின் ஏற்ற அமைப்பின்படி நரம்பு மண்டலத்தில் ஆற்றல் அதிகப்படுவதால் பெறப்படும் கூடுதல் விதை ஆற்றலை கனவு என்ற நிகழ்ச்சியை உருவாக்கி செல வழிப்பதும், மேலும் இத்தூண்டல்களே மெய்(உடல்)இயங்கவும், இவற்றையே'உயிர்' என்றும் இத்தூண்டல் இல்லாதவை அல்லது பெறப்படாதவை உயிரற்றவை என்றும் திருமூலர் காலத்தில் 2650-2652) தெரிந்து வைத்திருந்தார்கள். இதை அவர் காலத்து தமிழில் காணலாம்.

வியலும். சூழல் குறிப்பிடப் பெறாது தத்தம் முதலெழுத்துகள் வருமிடத்து வருகை தந்து பொருளை வேறுபடுத்தாது அமையும் சார்பெழுத்துகளை உறழ்ச்சியால் வருவனவாகக் குறிப்பிட முடியும். ஆனால் இவ்விரு இலக்கண ஆசிரியர்களும் மாற்றொலி, ஒலியன் உறழ்ச்சி ஆகிய கோட்பாடுகளுக்கு அப்பால் முதலெழுத்துகள் எனச் சுட்டப்பெறுபவற்றிலிருந்து வடிவத்திலோ, மாத்திரையிலோ அன்றுப் பிறப்பு முறைமையிலோ சிறிது மாறுபட்டமைவனவற்றையே சார்பெழுத்துகளாகக் கருதுகின்றன.

## துணை நூற்பட்டியல்


1. சண்முகம், செ. வை., எழுத்திலக்கணக் கோட்பாட்டு, அனைத்திந்திய தமிழ்மொழி இயற் கழகம், அண்ணாமலைநகர், 1980.

2. முருகையன், க., 'தொல்காப்பியரின் ஒலியியல் கொள்கை' தொல்காப்பிய மொழி யியல், பக். 1-50, அண்ணாமலை நகர், 1972.

3. பவணந்தி, நன்னூல், சங்கர நமச்சிவாயப் புலவர், இயற்றிச் சிவஞானமுனிவர் திருத்திய உரை, கழக வெளியீடு, திருநெல்வேலி, 1966.

4. வைத்தியநாததேசிகர், இலக்கணவிளக்கம், கழக வெளி யீடு, திருநெல்வேலி, 1973.

# Some Semantic Changes In Inscriptional Tamil

R. Bagyalakshmi

Bharathiar University; Coimbatore

The aim of this short paper is to identify and present some of the semantic changes found in the inscriptional Tamil.[1] When communication takes place either verbal or non-verbal, we find variations from individual to individual, place to place, group to group, etc. This is a normal Sociolinguistic phenomenon found to be reflected in language use and language structure from time to time. Such changes tend to become regular changes in course of time and later on considered as standard or generalised rules of language change [and description. This is reflected in the inscriptional language also.

Some of the changes found in the Tamil inscriptions of Karnataka[2] with particular reference to meaning have been presented below with suitable illustrations from the inscriptions along with the sociolinguistic reasons (contextual, etc.) for such changes found in language use. The descriptions given below present the meaning shift, the phonological change (s) found as well as the combinations of loan forms and native

1. Tamil Inscriptions found in Karnataka 9th to 16th Century A. D.
2, Epigraphia Karnatika-Volumes IV & V, 1893.

features. There are cases where we find complete shift resulting in totally different meanings of the usages. There are also inscriptions in which one and the same form is used to convey different meanings because of the difference in contexts. The inscriptional use is compared with the modern use in the identification of the semantic shifts that have taken place. For example, the word *aḻivu* occurs in the inscriptions as:

| | |
|---|---|
| *va:cal aḻivu* | [expenditure] |
| *aḻivu piḷai* | [preventing (some one) to do duty] |
| [*ninaittavan gangai karaiyil kura:l pacuvai konṟa:n pa:vattil po:va n* | [chintamani-88] |

In one place the meaning of the form *aḻivu* is 'expenditure incurred for temple maintenance, etc'. and in another context it denotes the meaning 'preventing some one to do his duty'. The present day meaning of the form *aḻivu* is destruction'.

The use of the form *vēḷa:r* in the inscription [Devanahalli Taluk-14) when it occurs with *mu:ve:ntar* denotes only the *title* given to kings, officials, etc. This form is found to have variations such as *ve.ḷa:ḷar* or *ve.ḷa:r* which means a particular caste group or generally agriculturists. But in modern use this form has only one meaning namely either Agriculturists or a caste whose profession is *pottery*.

In the inscriptional language we find certain semantic changes, and such changes are either due to the time factor or generation gnp. For example forms like.

| | |
|---|---|
| *kuḻi* | [sidla gatta, - 16] |
| *uṟi* | [Bowringpet. - 27] |
| *oḻukku* | [ -do- ] |

were used to denote different types of measures along with their original meanings. But, now all such aditional meanings are not found in the modern use. This is because of the historical changes as well as modern social advancements. However, in some of the areas of Tamilnadu we find ehe use of *kuḻi* to denote a type of measurement with particular reference to land.

There is a distinct use in the inscriptional language namely *paṭṭa:n* (Bowringpet - 27) which denotes the meaning *one who is dead*. That is, a person or a warrier fought in the battle field and brought victory to his motherland, and finally died in the battle field or after achieving the victory in the battle. For example is the usage,

*toṛu me:ṭṭu paṭṭa:n* [ Hosekote, 98 ]

we find such as meaning. But in modern use of Tamil we do not find the use of the verb *paṭu* in this particular meaning, and also its individual occurrence. This is because in modern Tamil *paṭu* mostly occurs in passive voice forms like.

*kollappaṭṭa:n*, 'was killed' [ by somebody ]

or in verbs like,

*kaṣṭappaṭu*, *ko:vappaṭu*, etc.

The form *irai* is used to denote the meaning *tax in* the inscriptions along with its original meaning *(King)*. This is a contextual meanirg in the inscriptions but now this form mostly denotes two meanings namely *God* and *food*.

*Changes in the form(s)*

There are usages which denote the same meaning but found to have phonological variations of one or two phonemes: When compared with the modern Tamil the changes found

அக்காலத்தில் தத்துவம், மருத்துவம் மற்றும் மற்ற துறையை ஆராய்ந்த அறிஞர்களே மொழியையும், மொழியியலையும் இலக்கியத்தையும், இலக்கணத்தையும் ஆராய வேண்டிய சூழ்நிலையில் இருந்தார்கள். இப்பொழுது இருக்கும் அறிவியல் உட்பிரிவுகளோ அதற்கென்று தனித்தனி அறிஞர்களோ அப்பொழுது இல்லை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இதன் காரணமாகவே மனித உடலியலை சார்ந்துதான் தமிழையும் அமைத்தார்கள்.

மனிதனின் மூளையில் 12 நரம்புகளும் (உயிர்),மைய நரம்பு மண்டலத்தில் (மெய்-உடல்)31 இணை நரம்புகளும் உள்ளது என்பதும் இதன் வழியாக நரம்பு சார்ந்த வெப்பமின்னியல் தூண்டல் குறிப்பிட்ட கால அளவிற்கு சுமார் 444லும் வந்து சேருகிறது(இதற்கு காரணம்ாக-இரத்த சுழற்ச்சி குறைந்த உயர் வெப்பம் to வெப்ப மின்னியல்) என்பது ஒரு உடற்சார்ந்த உண்மை.

தண்டு வடத்தில்லுள்ள நரம்புகள் (1) 8 இணை கழுத்து நரம்பு (2)12 இணை மார்புக் கூடு நரம்பு (3) 7 இடுப்புநரம்பு (4) 4 முதுகு நரம்பு (5)1குத நரம்பு ($8+12+7+4=31+1=32$), 32 ஆக உள்ளது.

இதையே திருமூலர் காலத்தில் மூளையில்லுள்ள 12 நரம்புகளையும் அவன் பெற்றுக் கொள்ளும் நான்கு புலன் ஆற்றலை (அல்லது பரப்புகளை) சேர்த்து உயிர் எழுத்து 16 ஆகவும்.

தண்டுவடத்தில் 31 இனை நரம்புகளுடன் கை, கால் (வலது or இடது) 4ன்கு (2 கட்டளை பெரும் நரம்பு 2 இடும் நரம்பு) ஆகியவை சேர்ந்து 35 மெய் எழுத்துக்களாக்வும், (தலையில்லையெனில் உயிர் இல்லை மேலும் தலையை முதலில் உயிருக்கு சேர்த்துக் கொண்டார்கள் (மீதம் உள்ள 1 குத நரம்பை தனி கணக்காக எடுத்துக் கொள்ளவில்லை).

தொல் காப்பியர் காலத்தில் தமிழ் எழுத்து எண்ணிக்கை எவ்வாறு உருவாக்கப்பட்டது என்பதை விளக்கமாக பார்ப்போம்.

இவர் மூளையில் உள்ள 12 நரம்புகளை 12 உயிர் எழுத்துக்களாக எடுத்துக் கொண்டார் (ஆய்த எழுத்தின் விளக்கம் பின்னால் விவாதிக்கலாம்).

தண்டுவடத்தில்உள்ள 31 நரம்புகளுடன் 1குத நரம்பையும் இணை நரம்பாக (வலது, இடது சேர்ந்ததாக) எடுத்துக் கொண்டார் (31 + 1 = 32) இந்த 32 நரம்புகளுடன் கை, கால் நரம்பை 4 சேர்த்தால் ஆக 36, இது வலது 18, இடது 18 என்று உள்ளது. இதில் ஏதாவது ஒரு பகுதியை எடுத்துக் கொண்டார். மனித உடல் இயக்கத்திற்கு ஒரு பகுதியில் பெறப் படும் தூண்டல்களினால் கூட அவன் உயிர்வாழ முடியும்.

இப்பொழுது உயிர் எழுத்து 12ண்டும், மெய் 18-ம் எழுத்துக்களாக வேண்டும். (மெய் எழுத்துக்களில் புள்ளி வைப்பது நரம்பு மண்டல நரம்புகள் பெறப்படும் தூண்டல்கள் ஒரு. புள்ளியில் முடிவதால் அல்லது தோன்றுவதால் இதை உணர்த்த மெய் எழுத்துக்களுக்கு தனி புள்ளி வைக்கும் பழக்கம் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டது).

நம் மூளையின் நரம்பு, தண்டுவடத்தின் நரம்பு ஆகியவற்றில் பெறப்படும் தூண்டல்கள் மாறுபடுகின்றன.

(1) 12 மூளை நரம்பில், ஒவ்வொன்றும் 4ன்காக $12 \times 4 = 48$ தூண்டல்கள்

(2) தண்டுவட 32 இணையில் ஒவ்வொன்றும் 12 ஆக (வலது அல்லது இடது)

பாதியில் $\left(\frac{32}{2} = 16\right)$ $16 \times 12 = 192$ தூண்டல்கள்

(3) கை, கால் (வலது அல்லது இடது) $2 \times 3 =$ 6

246 தூண்டல்கள்

(மூளை நரம்பு 4 தூண்டல்களை பெரும் குறிப்பிட்ட நேரத்தில் தண்டுவட நரம்பு 6 தூண்டலும் அதே நேரத்தில்

கை, கால் நரம்புகள் 3 தூண்டலும் பெரும் (246 தூண்டல்கள் உடலின் இயக்கத்திற்கான குறைந்த பட்ச தூண்டல்களாகும். இவையே உயிர், மெய் மற்றும் உயிர்மெய் எழுத்துகளாக அமைக்கப்பட்டுள்ளது.

மனிதன் பெற்றுக் கொள்ளும் மீதி தூண்டல்கள்
(வலது அல்லது இடது) (192+6) 198

444

படுக்கை நிலையில் பெறப்படும் மொத்த
தூண்டல்கள் = 444

(ஏ) நின்ற நிலையில் (-) = 20

= 424

(பி) தாயின் கருவில் இருந்து பெறப்பட்ட
இருப்பு உயிர் எனப்படும் தூண்டல் (-) 20

404

40 (ஏ & பி) தூண்டல் போக மீதி இருக்கும் 404 தூண்டல்கள் தான் ஒரு குறிப்பிட்ட கால அளவில் பெறப்படும் தூண்டல்களாகும், (இவற்றில் சுமார் 304 தூண்டல்களை நமது கால அளவில் ஒரு நிமிடத்திற்கு இதயத்தின் இயக்கத்திற்கு 4 தூண்டல்களுக்கு $\left\{\frac{304}{4} = 76\right\}$ ஒரு துடிப்பு வீதம் செலுத்துகிறது.

404 தூண்டல்களுக்கு இணையாக முதல் எழுத்து சார்பெழுத்தொலிகளாக 400ஐ தமிழில் அமைத்துள்ளர்கள் அவைகள் (404-400=4ஐ குத நரம்பிற்கு கழித்துவிட்டார் களோ?)

1. சார்பெழுத்து உயிர், மெய்-30 (2) உயிர்மெய்-216

(3) முற்றாய்தம்-8 (4) உயிரளபெடை-21 (5) ஒற்றளபெடை-42 (6) குற்றியலிகரம்-37 (7) குற்றியலுகரம் & நுத்தையில் உள்ள 1-37 (8) ஐகாரகுருக்கம்-3 (9) ஔகாரகுறுக்கம்-1 (10) மகரக்குருக்கம்-3 (11) ஆய்தகுறுக்கம்-2.

(30 + 216 + 8 + 21 + 42 + 37 + 37 + 3 + 1 + 3 + 2 = 400)

இப்பொழுது ஆய்த எழுத்தான ஃ எவ்வாறு தோன்றியது என்பதை ஒரு தனி ஆய்வு நடத்திதான் பார்க்கவேண்டும்.

படம் 4ல் உள்ள சியில் அமைப்பு பி எல்-க்கு கிடையாக (இரண்டுக்கும் ஒரே தொலைவில்) இருப்பதால்தான் அறிவு வளர்ச்சியில் உயர்ந்துள்ளது. ஆதலால் இதற்கு 'உயர்திணை' என்றும் அப்படி சிரான தொலைவில் கிடையாக இல்லாததால் அவைகள் (சில விலங்குகளுக்கு) பகுத்தறியும் திறன் அற்று இருப்பதால் இவை 'அஃறிணை' என்றும் பெயர் பெற்றுள்ளது.

படம் 1ல் உள்ள நரம்பு மண்டலம் (சுவை, மோப்ப புலன் வாங்கி, கேள்வி பார்வை புலன் வாங்கி, மூளையில் மேற்பரப்பு இவைகளின் இருப்பு ஆற்றல் விகிதமானது, பூமிக்கு தலை நின்ற நிலையில் 5:1:1/5;1125 (1:0:2:0, 04;0.008-1.248 = 25:5:1:0.2) உள்ளது.

இப்படி படம் 1ல் சியில் அதிகமாக பெறப்பட்டு, நரம்பு மண்டலத்திற்கு செலுத்தப்படும் ஒரே ஒரு கூடுதல் தூண்டல் கட்டளையினால்தான் மனிதனிடம் செயல்கள் நடைபெறுகின்றன. இதை திருமூலர் காலத்தில் விட்டுவிட்டார். ஆனால் தொல்காப்பியர் ஆய்த எழுத்தாக எடுத்துக் கொண்டு, அதை விளக்கமாக 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' என்கிறார். (விளக்கம் கட்டுரையிலே உள்ளது)

# திருக்குறளின் உண்மைப் பொருளில் இலக்கணக் குறிப்புகள்

இரா. மணிவண்ணன்,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்.

இலக்கியத்தை அடியொற்றி இலக்கணம் உருவாக்கப் படுகிறது ஆயினும் இலக்கியத்தைப் புரிந்து கொள்ளுதற்கு இலக்கணம் பெரிதும் துணைபுரிகின்றது.

இருபதாம் நூற்றாண்டிலும் திருக்குறளுக்குப் பல்வேறு உரைகளும் உரை விளக்கங்களும் தோன்றியுள்ளன. ''திருக்குறளின் உண்மைப்பொருள்'' என்ற நூல் பிற உரைகளில் இருந்து அதிகாரப்பிரிவு, குறள்வைப்பு முறை, பொருள் கொள்ளும் முறை போன்றவற்றால் பெரிதும் மாறுபட்டுள்ளது. இந்நூலின் ஆசிரியர் கு.ச. ஆனந்தன். இவருடைய உரைபற்றி ''முன்னோர் உரைவழிச்சென்று இலக்கிய நயங்களும், உவமை, உருவகம் முதலிய அணிநயங்களும் இலக்கணக் குறிப்புகளும் எழுத அவர் எண்ணவில்லை.'' என வ.சுப. மாணிக்கம் நூலின் அணிந்துரையில் கூறியுள்ளார், ஆயினும் ஆனந்தன் சில இடங்களில் இலக்கணத்தின் துணை கொண்டு பொருள் விளக்கம் தருகின்றார்.

## ஆண்பால் விகுதி

ஆதிபகவன் (குறள்1080) என்ற சொல்லின் அமைப்புகுறித்து ''ஆதி பகவு என்ற மெய்யியல் சொற்றொடரைத் தானே உருவாக்கி அதற்கு மாட்சிமையைக் கூட்டுவதற்காக 'அன்' என்கிற உயர்திணை ஆண்பால் விகுதியைச்சேர்த்து 'ஆதிபகவன்'

என்ற சிறப்புக் காரணப் பெயராக்கினார்' என்று விளக்கம் தருகிறார். ''னகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்'' (தொல் கிளவி,5) என்ற நூற்பாவினை அடியொற்றி அன் ஆண்பால் விகுதி எனக் கொள்கின்றார் ஆனந்தன். ஆண்பால் விகுதி மாட்சிமை-சிறப்பு தரும் என்று கூறுவது ஆணாதிக்கச் சமுதாயத்தின் தாக்கம் இவரிடத்து இருப்பதைக் காட்டுகின்றது,

ஒருமை பன்மை

தனியுடமையைத் தகர்த்திட என்ற அதிகாரத்தில்

''நல்லவை எல்லாம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு'' (90,)

என்ற குறள் அமைந்துள்ளது. இதன் பொருள் விளக்கத்தில், செயற்கு என்ற சொல்லில் உள்ள 'ற்கு' என்ற வல்லினம் ஒருமையைச் சுட்டுவதாகக் கொள்கிறார். மேலும் தனிமனிதன் செல்வத்தை ஈட்டுவதற்கு நல்லவை தீயவையாகவும் தீயவை நல்லவையாகவும் மாறும் என அதிகார இயைபு நோக்கிப் பொருள் தருகிறார்,

"ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு''. (776)

என்னும் குறளில் இயற்றியார்க்கு என்னும் சொல்லில் உள்ள ''ர்க்கு'' பன்மையைக் காட்டும் என்கிறார். இவருடைய கருத்திற்கு,

ரஃகானொற்றும் பகர விறுதியும்

நேரத் தோன்றும் பலரறி சொல்லே'' (தொல், கிளவி.7) என்ற.நூற்பா அரண் செய்கின்றது. இவ்விலக்கணத்தின் துணை கொண்டு செல்வத்தை மிகுதியாக இயற்றும் சமுதாயத்தினருக்கு அறனும் இன்பமும் எளிதாகக் கிடைக்கப் பெறும் என்று பொருள் தருகின்றது.

இவ்விரு விளக்கங்களையும் நோக்குமிடத்து, செல்வத்தை இயற்றுதலும் அதனைத் துய்த்தலும் சமுதாயம் முழுவதற்கும்

உரித்தானவையேயன்றி தனிமனிதனுக்கு மட்டும் உரித்தானவை யல்ல என்ற இவரின் பொருளாதாரக்கொள்கை புலனாகின்றது.

### வேற்றுமை

பெயரின் பொருளை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமை எனப்படும். அவ்வாறு வேறுபடுத்திக்காட்ட உதவும் கூறு வேற்றுமை உருபாகும்.

ஐந்தாம் வேற்றுமை உருபு இன். அது ஒப்புப் பொருளிலும் உறழ்வுப் பொருளிலும் வரும்.

''அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்'' (161)

இதிலுள்ள இன் ஐந்தாம் வேற்றுமைப் பொருளான ஒப்புப் பொருவுப் பொருளில் வரும் என இலக்கணம் கூறுகின்றார். அகம் மலர்ந்து ஈதலைப்போல முகம் மலர்ந்து இன்சொல் கூறுதல் நன்று என விளக்கம் தருகின்றார் ஆனந்தன்.

அகம் மலர்ந்து ஈதலைவிட முகம் மலர்ந்து இன்சொல் கூறுதல் இனிதென பரிமேலழகர் உரை கூறுவதனால் அவர் 'இன்' உருபை உறழ்வுப் பொருளில் அதுவும் மிகுதிப் பொருளில் கொண்டமையை அறியலாம்.

இதே போன்ற மாறுபட்ட இலக்கணங்களையே 13, 433, 1048 ஆகிய குறட்பாக்களில் இருவரும் கொண்டுள்ளனர்.

''இரப்பாரை இல்லாயின் ஈன்கண் மாஞாலம்
மரப்பாவை சென்று வந்தற்று. (1000)

இக்குறளில், இரப்பாரை என்ற சொல்லிலுள்ள ஐகாரம் அசை எனக் கொண்ட பரிமேலழகர் இரப்பவர் இல்லாத உலகம் இயங்குவது மரத்தால் செய்யப்பட்ட பொம்மைகள் இயங்குவது போன்ற உயிரோட்டமில்லாதது என்கிறார்.

பரிமேலழகர் குறளின் பொருளை வலிந்து மாற்றி விட்டதாகக் குற்றம் சுமத்துகிறார் ஆனந்தன் இல்லாயின் இரப்பாரை

என இடம் மாற்றியும் ஐகாரத்தை இரண்டாம் வேற்றுமை உருபாகவும் கொள்கிறார். எனவே பொருளில்லாமல் இரப்ப வரை இவ்வுலகம் பெற்றிருக்குமாயின் அவ்விரப்பவரல்லாத பிறரதுஇயக்கம் மரப்பாவையின் இயக்கத்தோடு ஒக்கும் என்கிறார்.

இரப்பவர் இருந்தால் மட்டுமே ஈந்து அறம் செய்து நற்கதி பெற முடியும் என்பது பரிமேலழகரின் அறக்கோட்பாடு இரத்தல் என்னும் நிகழ்ச்சி பொருளாதாரச் சுரண்டலின் வெளிப்பாடு அது சமுதாயத்திற்கும் தனிமனிதனுக்கும் கேடு விளைவிப்பது ஆனந்தனின் சமூகவியல் கோட்பாடு இவ்விரு கொள்கைகளின் முரண்பாடே இலக்கண முரண்பாடாகத் தோன்றுகிறது.

''செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. (323).

'செவியுணவிற் கேள்வி' என்பதற்கு ''அல்வழிக்கண் வந்த இன் சாரியையது னகரம் வலிந்து நின்றது'' எனப் புணர்ச்சியிலக்கணம் கூறிய பரிமேலழகர் செவியுணவாகிய கேள்வி என உருவகமாகப் பொருள் தருகின்றனர்.

இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகையாகக் கொண்ட ஆனந்தன் செவியுண வினையுடைய கேள்வி எனப் பொருள் தருகின்றார். அவியுணவு என்பதனை இருவரும், இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகையாகக் கொண்டு அவியுணவினையுடைய எனப் பொருள் தருகின்றார்.

**ஆகுபெயர்**

ஒரு பொருளின் பெயர் அதனை உணர்த்தாமல் அதனோடு இயைபுடைய வேறொரு பொருளை உணர்த்துவது ஆகு பெயராம்.

''வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு'' (833)

என ஊக்கம் பற்றி வள்ளுவர் மொழிகின்றார்.

மலர் அதன் தண்டைக் குறித்தது ஆகுபெயராக எனக் கூறும் ஆனந்தன், நீர்ப்பூக்களினுடைய தாள்களின் நீளம் அவை நிற்கும் நீரினுடைய ஆழத்தின் அளவினதாகும்; அதுபோல மக்களுடைய உயர்வு அவருடைய செயல் செய்யும் உள்ளக் கிளர்ச்சியின் அளவினதாகும் எனக்குறள் விளக்கம் தருகின்றார்.

''இல் வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை'' (15)

என்ற குறளில் உள்ள இல் என்ற சொல்லுக்கு ஆனந்தனும் பரிமேலழகரும் ஆகுபெயர் என்றே இலக்கணம் தருகின்றனர்

இல் என்ற இடப்பெயர் வீட்டுக்கும் அதில் உள்ள கூட்டுக் குடும்ப மனைக்கும் ஆயிற்று என்பர் ஆனந்தன் இல்லறத்திற்கு ஆகிவந்தது என்கிறார் பரிமேலழகர்.

ஏனைய மூவரென்பதற்கு ஆனந்தர் இல்வாழ்க்கைத் தன்மையுடன் பொருந்திய பெற்றோர். மனைவி, மக்கள் என விளக்கம் தருகின்றார்.

பரிமேலழகர் அறஇயல்பினையுடைய ஏனைய மூவரெனக் கொண்டு பிரம்மச்சாரியம், கானப்பிரஸ்தம், தவம் ஆகிய மூன்று நிலைகளில் உடையோர் என்கிறார்.

சமய நம்பிக்கையும் வர்ணாசிரமத்தில் ஈடுபாடும் கொண்ட பரிமேலழகர் அவற்றை நிறுவ முற்படுகிறார். மார்க்சீய தத்துவத்தில் உடன்படும் ஆனந்தன் கூட்டுக்குடும்ப முறையை முதன்மைப் படுத்துகின்றார்.

**காலம்**

''முந்நிலைக் காலமும் தோன்று மியற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்''
(தொல். வினை.43)

என்ற நூற்பா முக்காலத்தும் இயல்பாக நிகழ்வதனை நிகழ் காலத்தில் கூறவேண்டும் என்கிறது. இக்கருத்தினை,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட் பேறல் பிற" (51)

என்ற குறளில் வைத்துப் பொருள் கூறுகின்றார் ஆனந்தன். அறிவது- அறிந்து மதிப்பது எனப் பொருளுரைத்து "இறந்த காலத்தில் மட்டுமின்றி எதிர்காலத்தும் இது சிறப்புடைய தாகலின் 'அறிவது' என்று கூறுகிறார்" என விளக்கம் தருகின் றார். அறிவுடைய மக்களைப் பெறுதலே எக்காலத்தும் மதிக்கத்தக்கது என்ற தம் கொள்கையை இலக்கணம் வாயி லாகக் காட்டுகின்றார்.

**வினையெச்சம்**

மற்றொரு வினைச்சொல் இல்லாவிடில் பொருள் முற்றுப் பெறாத தன்மையையுடைய சொல் வினை யெச்சமாகும்

"மடியை மடியா ஒழுகல்" (805)எனும் பகுதிக்கு மடியை மடியாகவே கருதிஒழுகுக என மடியா என்பதனைப் பெயராகக் கூறுகிறார் பரிமேலழகர். மடியா என்பதனை செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு மடியை மடித்து ஒழுகல் வேண்டும் என்கிறார் ஆனந்தன்

**மன்**

மன் என்னும் இடைச்சொல் கழிகவு ஆக்கம் ஒழியிசை எனும் மூன்று பொருட்களில் வரும்என்கிறது தொல்காப்பிய இடையியல் நான்காம் நூற்பா

துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்" (1009)

இதிலுள்ள மன் எனும் அசை இரக்கத்தைக் காட்டும் என்கிறார். கழிந்ததற்கு இரங்குதல் இயல்பாகலின் இவரின் பொருள்கோளுக்கு தொல்காப்பியம் அரண் செய்கின்றது.

# வின்சுலோ தமிழ்- ஆங்கில அகராதியின் இலக்கணக் குறிப்பீட்டு நெறி

பெ. மாதையன்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்.

முன்னுரை:

சொற்பொருளைக் கொடுப்பதோடு மட்டுமே நல்லதொரு அகராதியின் பதிவமைப்புப் பணி நிறைவு பெற்றுவிடாது. பதிவுச்சொல்லின் இலக்கண நிலையைச் சுட்டுவதும்நல்லதொரு அகராதிப் பதிவுப் பண்பே ஆகும். மொழியியலாய்வாளர் அகராதியை இலக்கணத்தின் பின்னிணைப்பு என்பர். இலக்கண நூல்கள் இலக்கணத்தைப் புலங்களாக வகைப்படுத்தி அப்புலங்களுள் அடங்கும் சொற்களுக்கான பொது இலக்கணத்தைச் சுட்டுகின்றன. ஆனால் அகராதிகள் தாம் பதிவாய் ஏற்கும் சொற்களுக்கான இலக்கணத்தைக் குறிப்பிடுகின்றன. அகராதிகளில் வரன்முறைக்கு உட்படா ஒருமை பன்மைகளும் ஒரு வினைசொல்லின் சொல்விரிவுகளில் முறை மாறி வரும் சொற்களும் ஒரே வாய்பாட்டில் அமையும் சொற்களின் பொருள் வேறுபாட்டால் விளையும் இலக்கண வேறுபாட்டு நிலைகளும் சுட்டப்பெறுதலால் அகராதிகள் இலக்கணத்தின் பின்னிணைப்பு எனப்பெற்றன. இத்தகைய இலக்கணக் குறிப்பீட்டு நெறியைச் செம்மையாகக் கைக் கொண்டுத் தமிழ்-ஆங்கில அகராதிகள் உருவாக்கப்பட்டுள்ளன. அவ்வகராதிகளில் வின்சுலோவின் தமிழ்-ஆங்கில அகராதியில் பின்பற்றப்பட்டுள்ள இலக்கணக் குறிப்பீட்டு நெறி இக் கட்டுரைக்கண் விளக்கப் பெறுகின்றது

**வின்சுலோவும் இலக்கணக் குறிப்பீடும்;**

தமிழில் தமிழ்-ஆங்கிலம் என அமைந்த இருமொழி அகராதி

களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன பேபிரியஸின் தமிழ்-ஆங்கில அகராதி, ராட்லரின் தமிழ்ஆங்கிலஅகராதி, வின்சுலோவின்தமிழ் -ஆங்கிலஅகராதி, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதிஎன்பன. இந்நான்கு அகராதிகளில் பதிவமைப்பு நெறி, பொருள்தரு நெறி, இலக்கணக் குறிப்பீட்டு நெறி ஆகியவற்றில் மேம்பாடும் சிறப்பும் உடையதாய் வின்சுலோ அகராதி விளங்குகிறது. வினை, பெயர், இடை, உரி, பெயரடை, வினையடை எனும் பல்வேறு சொற்களுக்கும் இவ்வகராதி அவற்றின் பயன்பாட்டுச் சூழலுக்குத் தக்கபடி இலக்கணக் குறிப்பீடு அமைத்துள்ளது.

**வினை:**

தமிழின் வினையமைப்பு அது கால இடைநிலை ஏற்கும் தன்மையில் பெரிதும் சிக்கல்வாய்ந்ததாக உள்ளது. எனவே மேற்குறித்த இருமொழி அகராதிகள் வினைச் சொற்களின் பதிவமைப்பில் தெளிவினைத் தரும் வகையில், வினைப் பதிவமைப்பு முறையில் தாம்தாம் வகுத்துக் கொண்ட நெறிகளுக்குத் தக்க வகையில் சில முறைகளைக் கைக்கொண்டுள்ளன. பேபிரியஸ் அகராதி கிராலின் தமிழ்வினை வகைப்பாட்டை அடிப்படையாகக் கொண்டு,

வரி II Vt

எனப் பதிவினை அமைத்துள்ளது. II என்பது கிராலின் வகைப்பாட்டின்படி அறி எனும் வினை வகைப்பாட்டைச் சுட்டிநிற்கின்றது.

ராட்லர் அகராதி, "அடைகிறது". v.a. fn. pr.ந்தேன். fu. அடைவேன், Imp. டை, inf. டைய; அடுக்குகிறது v.a.t p.r.க்கிவேன், fut.க்குவேன், Imp.க்கு, inf.க்க எனத் தெளிவற்ற நெறியில் தனக்கே உரிய வகையில் வினைப்பதிவுகளை அமைத்துள்ளது.

வின்சுலோ அகராதி ஒருவரன்முறையான, தெளிவான நெறியைக் கைக்கொண்டு வினைப் பதிவுகளை அமைத்து இலக்கணக் குறிப்பீட்டைச் சுட்டியுள்ளது.

அஃகு, pres.கிறேன், past. அஃகினேன், fut.வேன், inf. அஃக, v..

எனத் தெளிவாகப் பதிவுகளை அமைத்துள்ளது. இதுதான் வின்சுலோ அகராதியில் இடம்பெற்றுள்ள முதல் வினைப்பதிவு. இதனை அடுத்து வரும் எல்லாப் பதிவுகளும் பின்வருமாறு 1. அகங்கரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க. v.n. எனவும் 2. அகற்று, கிறேன், அகற்றினேன், வேன், அகற்ற v.a. எனவும் பதிவுகளை pres; past, fut, inf. என்பன போன்ற இலக்கணக் குறிப்பீடுகள் இன்றிப் பதிவுகளை அமைத்துள்ளது. இப் பதிவுகளில் உள்ளதைப் போல் முக்கால வினைவிரிவுகளைச் சுட்டுகையில், வினையடிகளில் மாற்றமில்லாது வருகையில 1இல் உள்ளதைப் போல் க்கிறேன், த்தேன். ப்பேன் என வினையடியை அடுத்துவரும், வினைமுற்றின் எஞ்சிய இடைநிலை, விகுதிகளையும் சுட்டியுள்ளது. வினையடியில் மாற்றம் ஏற்படும் வினைகளுக்கு 2இல் உள்ளதைப் போல் 'க்கிறேன்' அகற்றினேன், வேன் என இறந்தகால வினை முற்றுகளை (அடடேன், அணாப்பினேன், அயின்றேன் என்பதைப்போல்) சுட்டியுள்ளது. இதேபோன்று செயவென் எச்சத்தைக் குறிப்பிடுகையில் 'க்க' விகுதி பெறுவனவற்றிற்கு. க்க எனச் செயவென் எச்ச விகுதிமட்டும் சுட்டப்பெறுகின்றது. அகரத்தை வினையெச்ச விகுதியாகப் பெறும் வினைப்பதிவுகளில் அகற்ற, அரக்க. அசர, அயில எனச் செயவென் எச்சச் சொற்களே குறிப்பிடப்பெற்றுள்ளன. இவ்வாறு வினைகளில் சிக்கல் வாய்ந்த சொல்விரிவு பற்றிய இலக்கணம் ஒவ்வொரு பதிவிலும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும் வினைச்சொற் பதிவுகளில் v.a. v.n. என்ற இரு இலக்கணக் குறியீடுகள் அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வாறு இருவேறு வகையாக இலக்கணக் குறிப்பீடுபெற்ற வினைகளை எல்லாம் ஒப்பவைத்து நோக்கும்பொழுது v.a. என்பது Verb active என்பதும் v.n. என்பது Verb nonactive என்பதும் தெளிவுபடுகின்றது. ஆக v.a. என்பது v,tr. எனும் தன்மையில் செயப்படுபொருள் குன்றா வினைகளையும் v.n. என்பது v.intr. எனும் பொருளில் செயப்படுபொருள் குன்றிய வினைகளையும் சுட்டி

நிற்கின்றன. ஒரே வினை செயப்படுபொருள் குன்றா, குன்றிய எனும் இருநிலையிலும் வருகையில் அயர்-கிறேன், ந்தேன், வேன், அயர v.a. 1. to do செய்ய, 2. v.n. to faint தளர எனப்பதிவு அமைக்கப்பட்டுள்ளது.

பெயர்

பெயர்ப் பதிவுகளைப் பொறுத்தமட்டில் s:,v.noun, dem., pron., prop. எனப் பெயர், தொழிற்பெயர், சுட்டுப்பெயர், சிறப்புப்பெயர் ஆகியவற்றுக்குத் தனித்தனி இலக்கணக் குறியீடு கள் சுட்டப்பெற்றுள்ளன. இவற்றைச் சுட்டுவதில் ஒரு வரன் முறையான நெறி பின்பற்றப்பட்டதாய்த் தெரியவில்லை. s. எனவும் v.noun எனவும் இலக்கணக்குறியீடு பெற்ற சொற்களை இதற்குச் சான்றாய்க் கொள்ளலாம்.

அவியல் v.n. ஓர்கறி எனப் பதிவமைத்துவிட்டு அவியற்கறி s. எனவும் பாட்டு என்பதற்கு v.noun எனவும் பாடல் என்ப தற்கு s. எனவும் வேறுபட்ட அல்லது முரன்பட்ட நிலையில் இலக்கணக் குறியீடு அமைக்கப்பட்டுள்ளது. அளபெடை எனும் சொல்லுக்கும் ஒரே சொல்லமைப்பு உடைய கறுப்பு, சிவப்பு எனும் சொற்களுக்குமான இலக்கணக் குறிப்பீட்டு நெறி இம் முரண்பட்ட இலக்கணக் குறியீட்டு முறையைத் தெளிவாய்க் காட்டும். அளபெடை v.noun 1. உயிரளபெடை, 2. ஒற்றள பெடை என அளபெடை தொழிற்பெயராய்ச் சுட்டப்பட்டுள்ளது. ஆனால் உயிரளபெடை ஒற்றளபெடை எனும் பதிவுகளுக்கு s என இலக்கணக் குறியீடு சுட்டப் பெற்றுள்ளது. இதே போன்று சிவப்பு என்பதற்கு v.noun எனவும் கருப்பு என்பதற்கு s. எனவும் வேறுபட்ட நிலையில் இலக்கண நிலை சுட்டப்பெற்றிருப்பதும் பொருந்துவதாயில்லை. இவ்வாறே அஃது, அது என்பனவற்றுக்கு அஃது dem. எனவும் அது pro. எனவும் இலக்கணக் குறியீட்டை அமைக்காமல் இரண்டுக்கும் dem. pron. என ஒரே இலக்கணக் குறியீட்டை அமைத்திருக்கலாம்.

**இடைச்சொல்:**

**அம்ம, அந்து, அன், அத்து,** ஆல் என்பன போன்ற அசை, சாரியை, விகுதி போன்ற இடைச் சொற்களுக்கு எவ்வித இலக்கணக் குறியீடும் தனியே சுட்டப் பெறவில்லை. இவற்றின்

இலக்கணப் பொருள் மட்டுமே தெளிவாய் விளக்கப்பட்டுள்ளது. அக்கே, அகோ, அச்சோ, அடடா, அத்தோ, அந்தோ என்பன போன்ற ஒலிக்குறிப்பு இடைச்சொற்களுக்கு inter, (interjection) என்ற இலக்கணக் குறியீடு தரப்பட்டுள்ளது.

**உரிச்சொல்:**

உரிச்சொல் என்பது இவ்வகராதி ஆசிரியரால் பெயரடை, வினையடையாகக் கருதப்பட்டுள்ளது. இதற்கு,

> உரி s. 5. one of the four general divisions of words including adjectives and adverb salso all words expressive of abstract qualities, உரிச்சொல்,

என உரி எனும் பதிவினுக்கு இலக்கணப்பொருள் உரைத்திருப் பதையும் வினையுரிச்சொல், பெயருரிச்சொல் எனும் துணைப் பதிவுகளுக்கு முறையே adverbs, adjectives எனப் பொருளுரைத் திருப்பதையும் சான்றாய்க் காட்டலாம். இந்நோக்கிலேயே சால, உறு, தவ, நனி என்பன போன்ற உரிச் சொற்களுக்கு adj. எனவும், adv. எனவும் இலக்கணக் குறியீடு சுட்டப்பெற்றுள்ளது. சால எனும் சொல் பின்வருமாறு சால 1. adj. great, much மிகு, 2. adv. greatly, extensively, மிகவும் என சரியாய் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாறே உரிச்சொற்கள் தாம் சார்ந்து வரும் சொற்களுக்கு ஏற்பப் பொருள்படும் நிலையில் பெயரடை வினையடை எனச் சுட்டப்பெற்றுள்ளன.

**வினையடை:**

அங்கு, அப்படி என்பன போன்ற வினைகொண்டு முடியும் சொற்களுக்கு வின்சுலோ adv. (வினையடை) என இலக்கணஞ் சுட்டியுள்ளார். வினையடை என இவ்வாறு சிலசொற்களுக்கு இலக்கணநிலை சுட்டுவது சொற்களின் பயன்பாட்டுச் சூழலைத் தெளிவாய் உணர்ந்து பதிவமைந்த அகராதித் தொகுப்பாளரின் தனித் தன்மையை காட்டுகிறது. இதற்குச் சான்றாய், திரும்பத் திரும்ப, திரும்பவும் மீள, மீளவும் மீண்டும் மீட்டும் என்பன போன்ற பதிவுகளைசுட்டலாம் இவ்வனைத்துச்சொற்களும் again என்ற ஒரே பொருளில் வருகின்றன. இச் சொற்கள் திரும்புதல், மீள்தல் எனும் வினைகளின் உரிய பொருள்களில் வழங்காமல் மேலும் மறுபடியும் எனும் பொருளினவாய் வினையடைத்

தன்மையனவாய் இலக்கணப்பொருள், சொற்பொருள் எனும் இருநிலையிலும் வேறுபட்டுச் செயற்படுந் தன்மை நோக்கில் தனிப் பதிவாய் அமைத்து வினையடை என இலக்கணஞ் சுட்டி யிருப்பது பாராட்டத்தக்கது. வின்சுலோவின் இத்தகைய பதி வமைப்பு நெறிபய பின்னர் சென்னைப் பல்கலைக்கழகப் பேரக ராதியிலும் பின்பற்றப்பட்டுள்ளது.

வின்சுலோவும் சில இடங்களில் இத்தரு நிலையில் வழுவி யுள்ளார் என்பதற்குத் திரும்ப எனும் பதிவைச் சான்றாய்க் காட்டலாம். திரும்ப inf. எனப் பதிவமைத்து அதற்குரிய பொருளாய் again என்பதைச் சுட்டியுள்ளார். திரும்ப என்பது பயன்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப to turn, to return எனும் பொருளில் வரத்தக்கது. இப்பொருட் சூழல்களில் இச்சொல் செயவென் எச்சம். ஆனால் இதே சொல் திரும்ப உண்டான், திரும்பப் படித்தான், திரும்பப் பேசினான் எனும் சூழல்களில் again என்ற பொருளில் வினையடையாய்ச் செயற் படுகின்றது. எனவே திரும்ப என்பதற்கு ag.in எனப் பொருள் சுட்டப்பெற்றிருத்தலால் இதற்கு adv. என இலக்கணக் குறியீடு அமைத்தலே முறையானது infinitive எனச் சுட்டியிருப்பது பொருந்தாது.

**செயவென் எச்சம்:**

இவ்வகராதியில் மிகுதியும் இடம்பெற்றிருக்கும் துணைப் பதிவுச் சொற்கள் செயவென் எச்சங்களே ஆகும். அடிப்பட, அடிப்படுத்த, அடிப்பற்ற, அடியிட, அடிபணிய, அடிமைபூண' அடிமைப்பட, அடிமைப்படுத்த, அச்சுறுத்த, அடம்பண்ண, அணி வகுக்க என்பன போன்ற எச்சச்சொற்கள் அனைத்தும் துணைப் பதிவுகளாய் அவ்வத் தலைச் சொற்களின் கீழ் அமைக்கப் பட்டுள்ளன. அடிவருடுதல், அடிபிடித்தல், அச்சுறுத்தல்; அணி வகுத்தல் என்பன போன்ற கூட்டுச் சொற்கள் இவ்வகராதியில் தனி வினைப் பதிவுகளாய் அமைக்கப்படாமல் மேற்சுட்டியவாறு செயவென் எச்சங்களாகவே சுட்டப் பெற்று (infinitive) என் இலக்கணக் குறிப்பீடு அமைக்கப்பட்டு பல்வேறு பொருட்களில் வரும் நிலையில் இப்பதிவிலேயே அப்பொருட்களும் சுட்டப் பெற்றுள்ளன.

## "இலக்கணமும் சமூகமும்"

மீனாட்சி முருகரத்தனம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மனித உறவுகள் குறித்த பழந்தமிழ் இலக்கண மரபுகள் பொருளாழமும் பண்புச் சிறப்பும் உடையவை. 'அது' குறித்து டாக்டர் தமிழண்ணல் 'தினமணி'யில் எழுதியிருந்த கட்டுரையின் கருத்துக்குத், துணையாகவும் அரணாகவும் மேலும் சில கருத்துக்களையும் கூறலாம். 'தினமணி'யின் வாசகர் கடிதங்களில் ''அது'' தொடர்பாக எழுதப்பட்டிருந்த கேள்விக்கு இவை விடையாகவும் அமையும்.

'அது' என்பது ஆறாம் வேற்றுவை உருபு. ஆறாம் வேற்றுமைக்கு உரியது கிழமை/உடைமைப் பொருள். எனவே மனித உறவுகளைச் சுட்டுகையில் எனது மகன், உனது மகள் என்று எழுதுவது அவர்களை உடைமையாகக் கருதுவதாகிவிடும். எனவே, ஒன்று, வேற்றுமை உருபே பயன்படுத்தாமல் என் மகன், உன் மகள் என்று எழுதலாம். அல்லது, நட்புப்பொருள் சுட்டும் நான்காம் வேற்றுமை உருபைப் பயன்படுத்தி எனக்கு மகன், உனக்கு மகள் எனலாம். ஆனால் இந்த இடத்தில் ஒரு வினா எழுகிறது.

வேற்றுமை இயலில், நான்காம் வேற்றுமைக்குரிய பொருளைச் சுட்டுகையிலேயே தொல்காப்பியர் மனித உறவுகள் இவ் வேற்றுமைக்குரியன என்று கூறியிருக்கலாமே அதை விடுத்து வேற்றுமை மயங்கியலில், ''அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின் அதுவென் உருபு கெடக் 'கு' கரம் வருமே'' என்கிறார். அப்படியானால், அங்கே முதலில் இருந்தது 'அது' தான். யாதோ ஒரு காரணத்தால் 'அது' கெட்டுக் 'கு'கரம் வருகிறது என்றாகிறது.

சொற்களுக்குத் திணை வகுத்துப் பகுத்தறிவுடைய மக்களை உயர்திணை எனச் சுட்டிய தொல்காப்பியர் மனித உறவுகளை உடைமைப் பொருளில் சேர்த்தது ஏன்? சேர்த்தவர், பயன்பாட்டில் மட்டும் அதை விடுத்துக் 'கு'கரத்தை ஆளுமாறு கூறியது ஏன்? இது கருதியே டாக்டர் வ. சுப. மாணிக்கனார், கருத்தரங்கம் ஒன்றில், இந்த நூற்பாவைச் சுட்டி, ''பண்பாடு முதலிலேயே இல்லாமல், கெட்டுப் பின்னர் வருகிறதே ஏன்'' என்று கேட்டார்.

ஆழமாகச் சிந்தித்தால் 'Filmore' என்ற மொழியியலறிஞர், உறவுச் சொற்கள் (Kinship Terms) பற்றிய தம் ஆய்வில் கூறியிருப்பதுபோல மனித உறவுகள் தற்கிழமைப் பொருளினம் என்பது புலனாகும். தற்கிழமை, பிறிதின்கிழமை என்ற 2 சொற்கள் தமிழிலக்கணத்தில் வழங்குகின்றன. கிழமை என்றால் உரிமை, உடைமை என்று பொருள். தன்னைவிட்டுப் பிரிக்க முடியாதவை தற்கிழமை, பிரிக்கக்கூடியவை பிறிதின் கிழமை. சமவாயம், சையோகம் என்று வடமொழி இதனை வழங்கும். எனது பை, எனது புத்தகம், எனது வீடு-உடைமையாயினும் அவை என்னினின்றும் வேறுபட்டவை. எனவே, பிறிதின் கிழமைகள். எனது கை, எனது தலை - வெட்டுண்ட பிறகும் அவை வேறொருவருடையவை ஆகா: ஒட்டுக்கை பொருத்தினும் உடன் பிறந்தது ஆகாது - எனவே இவை தற்கிழமைகள்.

மனித வாழ்வில் குருதி உறவுகள் (Blood Relations) எல்லாம் தற்கிழமைகள் எனலாம். நம் விருப்பத்தையோ, தேர்வையோ பொறுத்தவை அல்ல: மாற்றுதற்குரியன அல்ல. 'நீ என் மகனே இல்லை', 'நீ எனக்கு அப்பனே இல்லை' என்றெல்லாம் ஆத்திரத்தில் முழங்கினாலும், பஞ்சாயத்தில் 'பிறப்பான் முறி, எழுதிக் கொடுத்தாலும், மனம் கசந்தாலும் மறுக்க முடியாத, உடல் பிரிந்தாலும் உதற முடியாத உறவுகள் அவை. எனவே அவை தற்கிழமைகள். தற்கிழமைப்பொருள், வேற்றுமைகளில் ஆறாவதற்குரியது. எனவே மனித உறவு சுட்டும் உயர்திணைத் தொகைவயின் உரியது 'அது'வே. எனவேதான் தொல்காப்பியர் நான்காம் வேற்றுமையில் கூறவில்லை.

அவ்வாறாயின் 'அது' ஏன் கெடவேண்டும்? இங்கேதான் மானுடம் மலர்கிறது. உடலியல் சார்ந்த உண்மையாயினும் மனவியலும் சமூகவியலும் மனிதரை உடைமையாய்க் கருதுதலை - சுட்டுதலை - நடத்துதலை - ஒப்பவில்லை. எனவேதான் உடைமையாக அன்றி ஒப்பாகக் கருதும் நட்புப் பொருளை வெளியிடற்குரிய நான்காம் வேற்றுமை உருபு அங்கே பயன் படுத்தப்படுவதாயிற்று

இங்கே மேலும் 2 வினாக்கள் எழுகின்றன.(1) குருதி உறவுகள் அல்லாத மனைவி, கணவன், மணவழி, உறவினர், தத்தெடுத்த உறவுகள் ஆகியோரை எக்கிழமை என்பது? அவர்களை மட்டும் எனது மனைவி, எனது மைத்துனன், எனது தத்துப்பிள்ளை எனலாமா? என்கிறோமா? இல்லையே.

(2) பிறிதின் கிழமையாகச் சுட்டக்கூடிய அஃறிணை உடைமகளையும் கூட உறவுகளைச் சுட்டுதல் போன்றே 'கு' உருபு கொடுத்து' எனக்க (கு) வீடு? எனக்க மனை, எனக்க காணி என்று வழங்கும் வட்டாரங்கள் உள்ளனவே. செட்டி நாட்டுப் பகுதிகள் சிலவற்றில் 'எம்வீட்டு 'உம்வீட்டு' என்பதன் திரிபு, களான 'எம்முட்டு', 'ஓம்முட்டு' என்று வழங்குவன 'அது உருபின் வேறுபடு வடிவங்கள் போலத் தோன்றுகின்றன, அவை உயர்திணை, அஃறிணை, உடைமைகள் ஆகிய இரண்டுக்கும் பொதுவாக அன்றி உடைமைகளுக்கே வழங்கப்படுகின்றனவே அவ்வாறாயின் மனிதஉறவுகளை உடைமையாகக் கூறவிரும்பாமல்தான் தொல்காப்பியர் 'அதுவென் உருபு கெடக் குகரம் வரும்' என்றார் என்பது சரியா?

ஒன்று, குருதியல்லாத ஆனால் சட்டபூர்வ/தர்மபூர்வ உறவுகள் சிறுபான்மையாதலின் பெரும்பான்மையான குருதி உறவுகளுக்குரிய விதியையே அல்லது வாழ்க்கையையே இலக்கணமும் சமூக நடைமுறையும் வழங்கியிருக்கலாம். (ஆல், ஒடு என்ற இரு உருபுகளின் சங்ககால வழக்குப்பற்றி ஆராய்கையில் டாக்டர் எஸ்.வி. சண்முகம் தம்கால வழக்குகளில் பெரும்

பான்மை வழக்குகளையே விதியாக்கும் மரபு தொல்காப்பியரிடம் காணப்படுவதை எடுத்துக் காட்டியுள்ளார்.) அல்லது, தான் குருதி உறவு அல்லவாயினும் ஏனைய குருதி உறவுகளின் தோற்றத்திற்கு மூல காரணமாகும் மனைவி கணவனும், அவர்கள் வழி வரும் சட்டபூர்வ/சமூக பூர்வ உறவுகளும் (in-laws) அதேபோல் 'இடைப்பிற வரலாய்' நுழைந்தாலும், குருதி உறவினர் ஆற்றுதற்குரிய வினைகளையெல்லாம் ஆற்றும் உரிமை பெற்ற 'தத்து' உறவுகளும் பிற குருதி உறவுகளுக்கு ஒப்பாகக் கருதுதற்குரியன என்ற எண்ணத்திலும் வழங்கியிருக்கலாம்.

அஃறிணைப் பொருள்களை அதாவது உடைமகளை, உயர்திணை உறவுகள் போலவே 'கு' வுருபு தந்து சுட்டுதல் காலப் போக்கில் ஏற்பட்ட ஒப்புமை யாக்கமாக இருக்கலாம்.

இவ்விடத்திற் சிந்தையில் எழுவன, மாட்டுக்குச் சொந்தக்காரன், வீட்டுக்கு உரியவன் சொத்துக்கு உடைமையாளன் என்றாற்போன்ற வழக்குகள். இவை உயர்திணைத் தொகைகள் அல்ல. அத்துடன் இங்கே உடைமைகளே உருபேற்கும் பெயர்களாகின்றன. அப்போதும் மாட்டினது சொந்தக்காரன் என வழங்குதல் ஏற்புடைத்தாகக் கொள்ளப்படுவதில்லை. எனவே உயர்திணை வருமானால் 'கு' வுருபு உடன் வரும் எனத் துணியலாம்.

மனங்கொளற்குரிய மற்றொரு உண்மை என்னவெனில், எது சரியான வழக்கு என்ற கவலை எழுத்தில்தான் ஏற்படுகிறதே ஒழியப் பேசும் போது 'சகட்டுமேனிக்கு'த் 'தொகை' யாகவே என்மாடு, என் வீடு, என் மகன், உன் மகள் என்று எந்த உருபுமின்றியே பேசுகிறோம். எழுதுகையில் கோபாலனின் மனைவி என்று எழுதுகிறோம் இங்கெல்லாம் 'அது' போனவிடம் 'எது?' யாருக்குத் தெரியும்?.

# Adjectival Forms In Tamil

R. Rangaswamy
Periyar EVR College, Trichirappalli

0.1. It is interesting to have a study of the grammatical forms of adjectives in the Tamil Language. In the Indo-European languages, the adjectives are formed with the substantives and they take gender, number and case. In the Scythian languages adjectives have neither gender, number nor case; but only nouns of relation or quality that are prefixed without any alteration to substantive nouns. In Tamil the formation of adjectives is closely affiliated to the Scythian form of Character.

1.0 Dr. Caldwell says 'Dravidian adjectives, properly so called, like those of the Scythian tongues, are nouns of quality or relation, which acquire the signification of adjectives merely by being prefixed to substantive nouns without declensional change; In virtue of this particular signification, the Tamil grammarian call them as 'உரிச்சொல்'. qualitiative words attibute. For example, the participles of verbs are used as adjectives in 'வந்த துயர் or ,நொந்த தந்தை'. We have different methods to form adjectives in our language and they are listed below:

1.1. The majority of adjectives are nouns of quality or relation, which by mere position become adjectives without any structural change. In 'பொன் அரிது' 'பொன்' is as noun; but in 'பொன் முடி' it is an adjective qualifying a noun.

In the example 'கார் மேகம்' the quality is 'கருமை' and the lengthening of included vowel to compensate the loss of 'உ' and it becomes 'கார்'

In English we can see the same difference in two examples. 'It is *gold*' and 'it is a *gold chain*'. It is generally the crude ultimate form of the noun of quality which performs the function of the adjectives in Classical compositions.

1.2. Sanskrit derivatives ending in 'am' in Tamil become adjectives when prefixed to the nouns by rejecting the final 'm' (e.g) சுபம் + தினம் > சுப தினம்.

1.3. In Tamil the nouns ending with 'அம்' do often take 'அத்து an inflexional increment - சாரியை - and this displacement of 'அம்' into 'அத்து' paves the way to name the prefixed noun as an adjectival form.

(e.g.) நிலம் + கிழார் > நிலத்துக்கிழார்.

In some examples, 'ஆன' is inflected between two words.

(e. g.) புண்ணியம் + நாள > புண்ணியமானநாள்.

1.4. Words ending with 'டு' or 'று' of குற்றியலுகரம் nature become adjectival forms by the duplication of final consonants to denote the change of adjectives.

(e.g.) நாடு + பண் > நாட்டுப்பண்.
வயிறு + பசி > வயிற்றுப்பசி.

1.5. Like அத்து the inflexional increment 'இன்' is used for the conversion of substantives into adjectives.

(e.g) நிழலின் படம்,

1.6. Relative participles of verbs and nouns of quality

converted into relative participles by the addition of participial formations, are largely used as adjectives in Tamil.

(e.g.) உயர் மலை; உயர்ந்த மலை.

1.7. By adding 'இய' to the roots 'பெரிய' and 'சிறிய' we can form adjectives. (e.g.) பெரிய மக்கள்; சிறிய மனம்.

1.8. The sign of the relative participle of the future become adjectival forms by adding 'உம்'

(e.g.) வரும் துன்பம்.

1.9. The poetical or grammatical changes such as வலித்தல் விகாரம் and மெலித்தல் விகாரம் are often used as adjectives by mere change of consonants.

(e.g.) இரும்பு + கோல் > இரும்புக்கோல் (m > p)
மருந்து + பை > மருந்துப்பை (n > t)

1.10. Even the numerical nouns become adjectival forms by mere position when thy are followed by nouns.

(e.g.) ஒன்று + மகன் > ஒருமகன்.
இரண்டு + கண் > இருகண்.

1.11. Some adjectives are formed by simply 'suffixing' அ' the sign of the relative participles to the quality base before a noun.

(e.g ) நல்ல மகன்

2.0. As we have no proper adjectives, they are formed by following certain principles as follows; the actual position of the words in compound forms becomes adjectives and these are unique in character.

a. Relative participle + Noun.

b. Verbal Root + Noun.

c. Quality Base + Relative participle suffix + Noun.

d. Quality Noun + ஆன + Noun.

e. Verbal Noun + ஆன + Noun.

2.1. There are certain words having been styled adjectives by scholars but in reality they are appellative nouns They acquire the force of adjectives merely from the addition of the relative participles of the verb which have been referred to above.

(e.g.) நல்லவன், நல்லவள், நல்லது.

They are appellative nouns, as Dr. R. Caldwell says, and they are formed by the suffix to a noun of quality of the formation of the three genders-masculine, femenine and neuter. As we have seen above the addition of 'ஆன' to any of these words, becomes adjectival forms.

(e.g.) நல்லவனான கண்ணன்

3.0. No declension of adjectives in Tamil

In Indo-European and Sanskrit languages, adjectives are declined like substantives and agree with the substantives to which they are conjoined in gender, number and case. But in the Dravidian languages especially in Tamil, adjectives do not decline. When used separately as obstract nouns of quality, which is the original and natural character of Dravidian adjectives, they are subject to all the inflexions of substantives. But when they are used adjectively, they do not undergo any inflexional changes morphophonemically, and they are simply prefixed to the nouns which they qualify.

(e.g.) அழகு முகம்... ... ... ... ... (அழகு in an adjectival form)

when the qualifiying noun take the second case sign 'ஐ' it becomes 'அழகு முகத்தை' without any inflexional change in the prefixing word. (Adjectival from + noun + case sign/ any suffix.)

3.1. In sanskrit the words 'pāpas kāmas' (evil desires) undergo declensional change when they take the second case sign 'am' to the basic forms. Hence we have the formation as 'pāpam kāmam'

(pāpa + am > a + a + > a > pāpam)
(Kāma + am > a + a > a > Kāmam)

This kind of declensional change is unknown in Tamil and this is one of the chief Characteristies of Tamil.

4.0. Tolkappiyam clearly states that attributes have an examplary cheracter with semantic aspect in Tamil. They are not mere diction of words but the synonyms nnd polysems. are the two chief significant characteristias of Tamil semantic. There are innumarable examples in the Cankam classics and epics etc.,

4.1. Prof. Dr. T. P. Meenakshisundaram observes, "Uriccol root according to Tolkappiar denotes 'icai' sound, or 'panpu' the physical qualities or 'Kurippu' mental conceptions. Some of the roots are synonams; some other polysemes. These can occur both as verbal roots and noun roots. Tolkappiyar 'rule states as follows:

'உறு தவ நனி யென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள் என்ப' (299)
Nannular says in his work as

'சால உறு தவ நனி கூர் கரு மிகல்' (456)

4.2. There are more than one hundred words found an Tolkappiyam to denote the nature of attributes and when they qualify the nouns they are termed as adjectives. If they qualify the verbs, they can be said as adverbs.

(e.g.) 'மழ களிறு' (மழ-Adjective),
'நனி நன்று' (நனி Adverb),

4.3 We can cite a few more examples to signify the adjectival forms as found in the literary compositions.

(e.g.) உரு கெழு ஞாயிற்று' (புறம் 160)
செங் கோழ் மென் கொடி,
மல்லன் மால்வரை,
குழக் கன்று
துனி கூர் எவ்வம் (சிறுபான், 39)
கதழ்பரி நெடுந்தேர் (நெற்றிணை 203)
நளி மலை நாடன் (புறம் 150)
வம்ப மாரி (குறுந் 66)
புலம்பு மணித்தாலி (அகம் 7)
பையுள் மாலை (குறுந் 172)
கமஞ் சூல் மாமழை (குறுந் 158)
நாம வேல் (சிலம்பு காணுங் 27)
நனந்தலை யுலகம் (முல்லை 1)
கடி மலர் மிசை பூத்து
ஐதே காமம்

4.4. From a study of these words, one can understand that Tolkappiyar is refering to the root morphemes as 'உரிச் சொல்' which expreses a certain number of precepts representing ideas. The word உரிச்சொல் can occur both as verb root and noun root. This is the basic and fundamental importances as the distinction between nown and varb is syntactic rather than morphological.

